# வ.உ.சி.யும் பாரதியும்

தொகுப்பு: ஆ. இரா. வேங்கடாசலபதி



மக்கள் வெளியீடு

# வ.உ.சி.யும் பாரதியும்

கட்டுரைகள், கவிதைகள், மதிப்புரைகள்,
கருத்துப்படங்கள் மற்றும் ஒரு விவாதம்



தொகுப்பு

ஆ. இரா. வேங்கடாசலபதி






மக்கள் வெளியீடு

மக்கள் வெளியீடு 45
உரிமை பதிவு
முதற்பதிப்பு டிசம்பர் 1994

பொதுப் பதிப்பாசிரியர் டாக்டர் மே. து. ராசு குமார்

விலை ரூபாய் முப்பது



மக்கள் வெளியீடு
24 உனிசு அலி சாகிப் தெரு
எல்லிசு சாலை சென்னை 600 002




மக்கள் அச்சகம் சென்னை 600 002

வ.உ.சி.யின் அரும்புதல்வர்
மறைந்த
வ.உ.சி. சுப்பிரமணியம்
அவர்களின் நினைவுக்கும்
அவர்தம் வாழ்க்கைத் துணைவியார்
திருமதி பத்மாவதி சுப்பிரமணியம்
அவர்களுக்கும்
இந்நூல் காணிக்கை.

## உள்ளுறை

# பதிப்புரை

•

ஒரு நாட்டின்—ஒரு மக்களினத்தின் வெவ்வேறு காலகட்ட கலை—இலக்கிய—அரசியல்—சமூக—பொருளாதார வாழ்வின் வரலாற்றை முழுமையாக அறிவதற்கு மூன்று அடிப்படையான நிலைமைகள் உருவாக்கித் தரப்பட வேண்டும்.

அடிப்படைச் சான்றுகளாக அமையும் ஆவணங்களைப் பாதுகாத்தலும் அவற்றை எளிதில் பயன்கொள்ளக் கிடைக்கும்படி செய்தலும்.

வெவ்வேறு துறைகளில் வேறுவேறு பொருள்களில் வெளிப்படுத்தப்படாமல் மறைந்து கிடக்கும் பகுதிகளைக் கண்டறிந்தும் விரித்துரைக்கப்பட வேண்டியவற்றைத் தேர்ந்தெடுத்தும் அவற்றை ஆய்வுக்கு உட்படுத்துதல்.

உரிய ஆய்வு நெறிமுறைகளை வகுத்துச் செலுத்துதல்.

ஆனால், நம் நாட்டில் இந்த மூன்று நிலைமைகளும் முழுமையாக முறைப்படுத்தப்படவில்லை என்பதை மன அழுத்தத்துடன் குறிப்பிட்டாக வேண்டும்.

ஆயிரக்கணக்கான ஆண்டுப் பழமையுள்ள ஓர் இனத்தின் எஞ்சியனவாகத் தற்போது பலவகை இலக்கியங்களும் சில வகைக் காசுகளுமே கிடைக்கப்பெறுகின்றன. அவையும் காலவரைமுறைப்படுத்த இயலாத நிலையிலேயே வைக்கப்பட்டுள்ளன. இடைக்காலத்தில் எழுப்பப்பெற்ற கற்றளிகளின் வருகைக்குப் பின்னர்தான், காலக் குறிப்போடு கூடிய ஆவணங்களைக் கல்வெட்டு வடிவில் நாம் பெற முடிந்தது.

பரந்துபட்ட தமிழகத்தின் ஊர்களில் தொலைவுகளால் பிரிக்கப்பட்டுக் கிடக்கும் இந்தக் கோயில்களில் தங்கிக் கிடக்கும் கல்வெட்டுகளைப் பல தடைகளுக்கிடையில் ஒரு நூற்றாண்டுக் காலம் படியெடுத்த துறையினர், அவற்றின் கால்பகுதியைக்கூட இதுவரை வெளியிட முடியவில்லை. இதுபோன்றே, மிக அண்மைக்காலத்திய விடுதலை இயக்கத் தொடர்பான ஆவணங்கள், காப்பகங்களிலே புதைபட்டுக் கிடக்கின்றன. அச்சுமுறை வழக்குக்கு வந்தபிறகுகூட, இருப்பவற்றைக் காத்து வைக்கும் உணர்வோ உள்ளமோ நமக்கு ஊட்டப்படவில்லை.

அச்சு நுட்பம் வியத்தகு வளர்ச்சிபெற்று, பக்கக் கணக்கில் ஒரே நாளில் அச்சிடக்கூடிய நிலை ஏற்பட்டுள்ள இன்றைய நாளில், வேண்டிய ஆவணங்களை வெளியிடுவது பல ஆய்வாளர்களை ஈர்க்க வாய்ப்பேற்படுத்தும். கல்வெட்டுகள் வெளியிடப்பட்ட பின்னர்தான், இடைக்காலத் தமிழகத்தைப் பற்றிய

வரலாற்று ஆய்வுகள் இந்த நூற்றாண்டின் இடைப்பகுதியில் தோற்றம் பெற்றன. 'பாரதி தமிழை' ஒரு பெரியசாமி தூரன் 'சுதேசமித்திரன்' தொகுதிகளிலிருந்து அகழ்ந்தெடுத்த பிறகுதான், பாரதி ஆய்வுகள் தொடங்கின.

ரஷ்யப் புரட்சி பற்றிய ஆய்வுகளைப் படிக்கும்போது, பல இடங்களில் புரட்சியாளர்களின் வழித்தோன்றல்களுடைய 'தனி ஆவணக்காப்பகங்களில்' இருந்து எடுக்கப்பட்ட சான்றுகள் காட்டப்படுகின்றன. மேலைநாடுகளில், ஒவ்வொருவரும் தங் களுடைய முன்னோர் பற்றிய குறிப்புகளையும் விவரங்களையும், அவர்கள் எழுதிய மடல்களையும் அவர்களது படங்களையும் பிற தொடர்பான யாவற்றையும் தொகுத்துக் காத்து வைத்திருப் பதைக் காண முடிகின்றது.

மாநில அரசு அண்மையில் வெளியிட்ட அரசாணையின் படிகூடக் கிடைக்காத நிலை நம்முடையது. ஆவணங்கள் — சான்றுகள் அறியப்படாமை ஒருபுறமிருக்க, அவை மறைத்து வைக்கப்படும் நிலை மறுபுறம்.

அடுத்து, பொருள் தேர்வு. எம்.ஏ., எம்.ஃபில், பிஎச்.டி. என்று ஒவ்வோராண்டும் தமிழ்நாட்டில் நூற்றுக்கணக்கில் ஆய்வு முயற்சிகள் மேற்கொள்ளப்படுகின்றன. மேற்பார்வையாளரும் மாணாக்கரும் தங்களுக்கு உகந்தவளவில் ஏதாவதொன்றை எடுத்துக் கொள்ளுவதற்கு மாறாக, வெளிப்படுத்தப்படாமல் மறைந்து கிடக்கும் பகுதிகளையும் விரித்துரைக்கப்பட வேண்டிய வற்றையும் தேர்ந்தெடுத்து, அவற்றில் புதிய முயற்சிகளைக் கைக்கொண்டால், உழைப்புக்கேற்ற விளைவு நிகழும். முழு அளவில் அறிஞர் கூடி, முடிவெடுத்து, செய்ய வேண்டியவற் றைப் பல்கலைக்கழகங்களுக்கிடையே பிரித்துக் கொள்ளலாம். பல்கலைக்கழகங்களில் உள்ள மேற்பார்வையாளர்களும், தங்கள் தனிப்பயிற்சிக்கு ஏற்ப மேலும் அவற்றை வகுத்துக் கொள்ளலாம்.

இறுதியாக, ஆய்வு நெறிமுறைகள். செய்கின்ற எப்பணியும் நிறைவுதரும் வகையில் அமைய நெறிமுறைகளே அடிப்படை. திக்குத் தெரியாத காட்டில் தடுமாறுதலைத் தடுத்து, ஒளியும் வழியும் காட்டும் ஆய்வுநெறிகளைத் துறைக்கேற்ப உருவாக்கித் தருவது அதற்கேற்ற அறிவுப் பயிற்சியும் கொண்டோராலேயே இயலும். இன்றைய நிலையில், பல்கலைக்கழக அமைப்புக்குள் ளும் வெளியேயும் விரல்விட்டு எண்ணக்கூடிய ஒரு சிலரே இதற்கான அறிவும் பயிற்சி பெற்றுள்ளார்கள். இவருள்ளும் பலர் தத்தமது ஆற்றலை நெறிப்படுத்தாது, பட்டம் பெற்றுத்தரும் பயிற்சியாளர்களாகவே நீடித்து நிற்கிறார்கள்.

ஆனால், பல்கலைக்கழக அமைப்புகளுக்கு வெளியே நடைபெறுகின்ற ஆக்கவகையிலான ஆய்வு முயற்சிகளே இன்று குறிப்பிட்டுக் காட்டும்படியாக ஏற்றம் பெற்று விளங்குகின்றன. பல்கலைக்கழகக் கல்லூரி வட்டங்களுக்கு உட்பட்ட பலர் மேற்கொள்கின்ற ஆக்கமுறை ஆய்வு முயற்சிகளிலும்கூட, அவர்களின் பணிவகையிலான பங்களிப்பைவிடவும் தனிவகை யிலான பங்களிப்பே மிகுதியாக நிற்கின்றது. சுருங்கக் கூறின், இன்றைய பல்கலைக்கழக, கல்லூரி அமைப்புகளின் திட்டங்கள் ஆக்கவகையிலான ஆய்வினை உருவாக்கித் தரும் நிலைமை களைக் கொண்டிருக்கவில்லை.

இந்நிலையில், வ.உ.சி.—பாரதி ஆய்வுகளுக்கு அடிப்படை யான சில ஆவணங்களை வெளியிட முன்வந்திருக்கும் ஆ. இரா. வேங்கடாசலபதியின் முனைப்பு போற்றுதற்குரியது. 'வ.உ.சி.யும் பாரதியும்' என்ற இத்தொகுப்பு, இதுவரை வெளியிடப்படாத—மறு அச்சுப் பெறாத வ.உ.சி.—பாரதி பற்றிய ஆவணங்களை உள்ளடக்கியுள்ளது. கப்பலோட்டிய தமிழனாக வன்றி வ.உ.சி.யையும், புதுப்பாடகனாகவன்றி பாரதியையும் அறியாத தமிழர்கள் இன்னும் இருக்கவே செய்கிறார்கள். அவர்களுக்கு இத்தொகுப்பு ஒரு ஒளிகாட்டி. வ.உ.சி. மற்றும் பாரதி ஆய்வாளர்களுக்குச் சான்றுப் பெட்டகம்.

'மக்கள் வெளியீடு' தொடக்க காலத்தில் ஆவணங்களை வெளியிடுவதில் ஈடுபாடு கொண்டு, விடுதலைக்கு முதல் குரல் கொடுத்த வீரபாண்டிய கட்டபொம்மன் குறித்த சில ஆவணங் களை வெளியிட்டது. தொடர்ந்து இம்முயற்சியில் பெரும்பங் கினை ஆற்ற இயலாவிட்டாலும், 'மக்கள் வெளியீடு'வழி கொண்டுவரப்பட்ட குறிப்பிடத்தக்க ஆய்வு நூல்களில் இணைப் புப் பகுதிகளாகப் பல ஆவணங்கள் வெளியிடப்பட்டன. தமக்குக் கிடைத்த, தாம் பயன்கொண்ட ஆவணங்கள் தம்மை யன்றி யார்க்கும் கிடைக்கலாகாது என்ற நிலையை எடுக்காமல், பேராசிரியர் ஆ. சிவசுப்பிரமணியன் 'ஆஷ் கொலையும் இந்தியப் புரட்சி இயக்கமும்', 'வ.உ.சி.யும் முதல் தொழிலாளர் வேலை நிறுத்தமும்' ஆகிய நூல்களிலும், இளம் ஆய்வாளர் ஆ. இரா. வேங்கடாசலபதி 'வ.உ.சி.யும் திருநெல்வேலி எழுச்சியும்' என்ற நூலிலும், தொடர்பான பல ஆவணங்களை உள்ளவாறே வெளியிட்டனர். தமிழ் வெளியீட்டு வரலாற்றில் இந்த நடை முறை புதியதொரு மரபினை உருவாக்கிக் கொடுத்தது என்று கூறுவது எவ்வாறினும் மிகையன்று. ஆயினும், இம்மரபு தொடர்ந்து பின்பற்றப்படவில்லை என்பது நாணத்தைத் தருவ தாக உள்ளது.

மேலை மொழிகளில், குறிப்பாக ஆங்கிலத்திலும் ரஷ்யனி லும், குறிப்பிட்ட நிகழ்ச்சி அல்லது தனிப்பட்ட தலைமகன் பற்றிய ஆவணங்களை மட்டும் திரட்டி வெளியிடுவது தனிப் பதிப்புக் கலையாக உருவாகி, வளர்ந்து, வலுப்பெற்றிருக்கிறது. இத்தகைய பதிப்புமுறை எதுவும் தமிழில் தோற்றம் பெறாமை ஏன் என்பது புரியவில்லை. பாரதி பற்றிய ஒரு சில தொகுப்புகள் வெளியிடப்பட்டிருப்பினும், அவை அவரது எழுத்துகளை மறுஅச்சு செய்யும் பணியாக மலர்ந்துள்ளனவேயன்றி, பாரதி ஆவணங்களின் திரட்டலாக அமையவில்லை. அதுபோன்றே, தொகை (anthology) நூல்களும் தமிழில் வளர்ச்சி பெறவில்லை.

எனவே, ஆவணங்கள் — சான்றுகளின் திரட்டலாக அமையும் இந்நூல், தமிழ்ப் பதிப்புத் துறையில் புதிய முயற்சியாகப் படைக்கப்படுகின்றது. இம்முயற்சி, இதுபோன்ற பற்பல முயற்சிகளுக்கு வழிகாட்டுதலாக அமையும் என்றே எண்ணலாம்.

வ.உ.சி., பாரதி பற்றி மட்டுமல்லாது, இருபதாம் நூற்றாண் டின் தொடக்க, இடைக்காலங்களில் நடைபெற்ற சமூக, அரசியல் இயக்கங்களின் வேறுபட்ட பல ஆவணங்களையும் சலபதி திரட்டியுள்ளார். இவற்றை ஆய்வு செய்து முடிவுகளைச் சொல் வதும், முடிவுகளுக்கு அடிப்படையான சான்றுகளைத் தருவது மான இரட்டைப் பணிகளைத் தமிழுலகம் அவரிடமிருந்து எதிர் பார்த்து நிற்கிறது. பேராசிரியர் ஆ. சிவசுப்பிரமணியன், சலபதி போன்ற அறிவுக் கொடையாளர்களைத் தமிழகம் பயன் கொள்ளாமல் விட்டுவிடலாகாது.

தொடக்க முனைப்பான இதன் பகுதிகளைத் திரட்டுதற்கும் பதிப்பு முறைகளை உருவாக்கி வெளியிடுதற்கும் சலபதி எடுத்துக்கொண்ட ஈடுபாடும் முயற்சியும் எழுத்தில் வடிக்கத்தக் கனவல்ல. பத்தாண்டு கால உழைப்பின் பயன் இதோடு முற்றுப்பெற முடியாது. இந்தப் பட்டறிவும் பயனும் பல திரட்டுகளை உருவாக்கித்தர அடித்தளமாக அமைந்திருக்கின்றன. இதன் வெளிப்பாட்டை இந்நூலோடு வெளிவரும் ‘பாரதியின் கருத்துப்படங்கள்: இந்தியா *1906-1910*’ என்ற சிறப்புமிக்க பதிப்பிலும் காணலாம்.

‘மக்கள் வெளியீடு’ எனது பொறுப்பில் இவரை அணைத்துக் கொண்டது உண்மைதான். ஆயினும், தற்போது புதிய சூழலில், திருமதி வசந்தா பொறுப்பில் சலபதியும் அவரன்ன பிறரும் மேலும் ஏற்றி வைத்துக் கொண்டாடப்பட வேண்டும் என எதிர்பார்க்கிறேன்.

மே. து. ராசு குமார்

# நன்றியுரை

இந்நூலைத் தயாரிப்பதற்கு உதவியாக நின்ற பல பெருமக்களுக்கு நான் கடமைப்பட்டுள்ளேன். அவர்களுடைய உதவி இன்றி இவ்வேலையைச் செய்திருக்க முடியாது என்ற ஓர்மையுடன் இந்நன்றியுரையை எழுதுகின்றேன்.

அண்மையில் மறைந்த, வ.உ.சி.யின் மைந்தர் திரு.வ.உ.சி. சுப்பிரமணியம் அவர்களே இந்நூல் உருவாவதற்கு முதற்காரணமானவர் எனல் மிகையன்று. சென்ற பத்தாண்டுகளாக, வ.உ.சி. பற்றிய என் ஆய்வுக்கு அவர் ஊக்கமும் ஊட்டமும் நல்கி வந்தார் என்பதனை நன்றியறிதலுடன் குறிப்பிட விரும்புகின்றேன். இந்நூலுக்கு இன்றியமையாத சில கையெழுத்துப் படிகளைப் பார்வையிட்டுப் படியெடுத்துக் கொள்ள அவர் அனுமதி நல்கினார். அன்னார் நினைவுக்கும் அவர்தம் வாழ்க்கைத் துணைவியார் திருமதி பத்மாவதி சுப்பிரமணியம் அவர்களுக்கும் இந்நூல் காணிக்கை ஆகுக. அவர்தம் குடும்பத்தினர்க்கும் என் நன்றி.

பயனில் மூப்பினர் பலர் நிறைந்த இக்காலத்தில் முதிய வயதிலும் ஆய்வுப் பணியில் ஈடுபட்டு வரும் திரு. ஸி.எஸ். சுப்பிரமணியம் அவர்கள் தம் பாதுகாப்பில் இருக்கும் 'இந்தியா' இதழ்களைப் பார்வையிடவும் படமெடுத்துக் கொள்ளவும் அனுமதி நல்கினார். மண்டயம் ஸ்ரீனிவாசாசாரியாரின் தன்வரலாற்றுக் குறிப்புகளையும் நான் படித்துக் குறிப்பெடுத்துக் கொள்ள இசைந்தார்.

ஐம்பதாண்டுகளுக்கும் மேலாகப் பாரதியின் படைப்புகளைத் தேடித் தொகுக்கும் பணியில் ஈடுபட்டுப் பல அரிய புதையல்களை அகழ்ந்தெடுத்த திரு. ரா.அ. பத்மநாபன் அவர்கள் தம்மிடம் இருந்த 'இந்தியா' இதழ்களை நான் பார்க்கவும் குறிப்பெடுத்துக் கொள்ளவும் இணங்கினார். பல தகவல்களையும் பகிர்ந்து கொண்டதோடு எனக்கு ஊக்கமும் அளித்தார்.

'பாரதி தரிசனம்' தொகுதிகளை வழங்கிய திரு. இளசை மணியன் அவர்கள் தமது மேற்பார்வையில் இருந்த 'இந்தியா' ஒளிநகல்களைப் பார்வையிட அனுமதி தந்தார்.

மறைமலையடிகள் நூல் நிலையத்தின் நூலகரும், சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் ஆட்சியாளருமாகிய திரு. இரா. முத்துக்குமாரசாமி அவர்கள் 'இந்தியா' முதலான பல அரிய ஏடுகளைப் பார்வையிடுதற்குரிய ஏந்துகளை ஏற்படுத்திக் கொடுத்தார்.

போராசிரியர் ஆ. சிவசுப்பிரமணியன் அவர்கள் என் ஆய்வுகளுக்குப் பலவகையிலும் உதவிவரும் அன்பர். களப்பணிக்கென நெல்லை மாவட்டத்துக்குச் செல்லும் பொழுதெல்லாம்

அவரும் அவர்தம் குடும்பத்தினரும் உற்ற துணையாக விளங்கு கின்றனர்.

வ.உ.சி.யின் பேரர் ஆ. சண்முகசுந்தரம் அவர்கள் அவ்வப் போது பல செய்திகளைத் தெரிவித்து உதவிகள் பல புரிந்து வருகிறார்.

பாரதி ஆய்வு தொடர்பான பல செய்திகளைத் திரு. சீனி. விசுவநாதன் என்னிடம் பகிர்ந்து கொண்டார்.

அரசாங்க ஆவணங்கள் முதலானவற்றைப் பார்வையிடுவதற் குத் தமிழ்நாட்டு ஆவணக் காப்பக ஆணையாளர், புது தில்லி தேசிய ஆவணக் காப்பக இயக்குநர், புது தில்லி நேரு நினைவு நூலகம் மற்றும் அருங்காட்சியக இயக்குனர் ஆகியோர் அனுமதி நல்கினர்.

இந்நூல் அச்சுக்கோக்கப்பட்ட பிறகு, மீண்டுமொருமுறை மூலப்படிகளோடு ஒப்புநோக்கித் திருத்தங்கள் செய்வதற்குப் புதுவை பாரதியார் நினைவு அருங்காட்சியகம் மற்றும் ஆய்வகத் தின் பாதுகாவலர் அனுமதி வழங்கினார். இதன் தொடர்பில், அங்கு ஆய்வுத் துணைவராகப் பணியாற்றும் முனைவர் நாக. செங்கமலம் அவர்கள் கொடுத்த ஒத்துழைப்பு பெரிது.

என் முயற்சிகளுக்கெல்லாம் துணை நிற்பவர்கள் பாவலர் த. கோவேந்தன் அவர்களும், ‘முகம்’ மாமணி அவர்களும் ஆவர். இந்நூலின்கண் உள்ள சில செய்திகள் ஏற்கனவே ‘முகம்’ மாத இதழில் பல்லாண்டுகட்கு முன்னர் வெளியிடப் பட்டன.

முனைவர் பழ. அதியமான் என் ஆய்வுத் தோழர். பலவகையிலும் எனக்கு அவர் உதவியாக இருக்கிறார்.

மெய்ப்புப் படிகளை ஒப்புநோக்கியும் பிறவாறும் வ.சு. ஸ்ரீகாந்து உதவினான்.

ஒளியச்சுக்கோப்பில் முழு ஒத்துழைப்பு நல்கிய எழில் பிரிண்ட்ஸ் நிறுவனத்திற்கும், குறிப்பாகத் தோழர் கென்னடிக்கும் நன்றி உரியது.

மக்கள் வெளியீடு வணிகமுறையிலன்றி ஆசை பற்றி நூல் வெளியிட்டு வரும் நிறுவனம். மயிலை சீனி. வேங்கடசாமி, க. கைலாசபதி, நா. வானமாமலை போன்ற அறிஞர்களின் நூல்களை வெளியிட்ட அந்நிறுவனத்தின்வழி என் நூலும் முன்னரே வெளிவந்தது. இப்பெருமையை எனக்கு வழங்கியவர் முனைவர் மே.து. ராசுகுமார் அவர்கள்.

இவர்கள் அனைவர்க்கும் என் நெஞ்சு நிறைந்த நன்றி.

சலபதி

# முன்னுரை

பாரதியைப் பற்றி வ.உ.சி. எழுதிய நினைவுக் குறிப்புகளையும், வ.உ.சி.யைப் பற்றிப் பாரதி பல்வேறு சமயங்களில் எழுதிய கட்டுரைகள், கவிதைகள், மதிப்புரைகள், வெளியிட்ட கருத்துப்படங்கள், விளம்பரங்கள் முதலானவற்றை யும், 1915 ஆம் ஆண்டில் 'ஞானபாநு' இதழில் அவ்விருவர்க்கும் இடையே நடந்த விவாதத்தையும் ஒருங்கே தொகுத்தளிக்கும் முயற்சியே இந்நூல். இவற்றைத் தவிர, வ.உ.சி. - பாரதி இருவரோடும் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்த மண்டயம் ஸ்ரீனிவாசாசாரியார் அவ்விருவரைப் பற்றி எழுதிய நினைவுக் கட்டுரையும் நூல் இறுதியில் சேர்க்கப்பட்டுள்ளது. இவற்றுள் பல முதன்முறையாக நூலுருவம் பெறுகின்றன என்பதைக் குறிப்பிட வேண்டும்.

## வ.உ.சி. கண்ட பாரதி

நூலின் முதற்பகுதியாக இது அமைகின்றது. 1946ஆம் ஆண்டில், வ.உ.சி.யின் மைந்தர், மறைந்த திரு. வ.உ.சி. சுப்பிரமணியம் அவர்கள் தம் தந்தையார் எழுதிய இரண்டு நூல்களை வெளியிட்டார். முழுவதும் அகவற்பாவினாலான 'வ.உ.சி. சுயசரிதை'யை இன்றியமையாத அடிக்குறிப்புகளுடன் முல்லைப் பதிப்பகம் வாயிலாக அவர் வெளியிட்டார். அத னோடு, ''அமரகவி சி. சுப்பிரமணிய பாரதியாரைப் பற்றி எனது தந்தையார் வி.ஓ.சிதம்பரம் பிள்ளையவர்கள் பல ஆண்டுகட்கு முன் எழுதிய குறிப்புகள்தான் 'வி.ஓ.சி. கண்ட பாரதி' என்ற நூலாக மலர்ந்துள்ளது'' என்ற சிறு முன்னுரையுடன் ஒரு சிறு நூலையும் வெளியிட்டார். அதிலிருந்து சில பகுதிகளைப் பாரதி ஆய்வாளர்கள் பன்முறை மறுபதிப்பு செய்துள்ளனர் எனினும், அந்நூல் இதுவரை முழுமையாக மறுபதிப்பிடப்படவில்லை. சில ஆண்டுகளுக்கு முன்னர்த் திரு. வ.உ.சி. சுப்பிரமணியம் அவர்கள் அந்நூலின் மூலக் கையெழுத்துப் படியை நான் பார்வையிட்டுப் படியெடுத்துக் கொள்ள அனுமதி நல்கினார். மேலும், இந்தியா விடுதலை பெறுவதற்கு முன்பு வெளியிடப் பட்டதால் அந்நூலில் சில மாற்றங்களைத் தாம் செய்ததாகவும், தற்போது அதனை உள்ளவாறு பதிப்பித்து வெளியிடுதல் இன்றியமையாதது என்றும் என்னிடம் வற்புறுத்தினார்.

அவர்தம் விருப்பப்படி கையெழுத்துப் படியில் உள்ளவாறே அந்நூல் இங்குப் பதிப்பிக்கப்படுகிறது. கட்டுரைத் தலைப்பில் ''ஸ்ரீ C. சுப்பிரமணிய பாரதியாரைப் பற்றிய சில குறிப்புகள்,

வ.உ. சிதம்பரம் பிள்ளை எழுதியது'' என்ற வரிகள் வ.உ.சி.யின் கையெழுத்தில் காணப்படுகின்றன (இணைக்கப்பட்டுள்ள படத்தைக் காண்க. பக்கம் 22). முழுப் பக்கத் தாளில் எழுதப்பட்டுள்ள இந்நினைவுக் குறிப்புகள் வேறு மூவர் கையெழுத்தில் உள்ளன. ஆனால், திருத்தங்களை (ஒற்றுப் பிழை முதலானவை) வ.உ.சி. தம் கைப்படச் செய்துள்ளார். மாதிரிக்குச் சில பக்கங்கள் காட்டப்பட்டுள்ளன (பக்கங்கள் 23,24).

இந்நினைவுக் குறிப்புகளோடு, 'சிவநேசன்' என்ற சைவ இதழுக்கு வ.உ.சி. 1928இல் எழுதிய கடிதம் கண்டெடுக்கப்பட்டு, இணைக்கப்பட்டுள்ளது. இதில் இடைப்பிறவரலாகப் பாரதியின் உரைநடைத் திறனை வ.உ.சி. பாராட்டியுள்ளார். மேலும், 'வ.உ.சி. சுயசரிதை'யில் உள்ள குறிப்பொன்றும், தாம் இறக்கும் தறுவாயிலும் கூட பாரதியின் பாடலை வ.உ.சி. கேட்க விரும்பினார் என்ற செய்தியை உணர்த்தும் குறிப்பும் சேர்க்கப் பட்டுள்ளன.

பாரதி கண்ட வ.உ.சி.

இரண்டாவது பகுதியாக அமையும் இதுவே நூலின் செம்பாதியாகும். வ.உ.சி. பற்றியும் வ.உ.சி. நடத்திய சுதேசிக் கப்பல் கம்பெனி பற்றியும் பாரதி பல்வேறு சமயங்களில் எழுதியவை இப்பகுதியில் அடங்கும். இவ்விடத்தில் பாரதியின் எழுத்துகளைத் தேடித் தொகுத்த பெருமக்களைப் பற்றிக் குறிப்பிடுதல் வேண்டும்.

1953இல், 'சுதேசமித்திரன்' இதழ்களிலிருந்து பாரதி எழுத்துகளைக் கண்டெடுத்துப் 'பாரதி தமிழ்' என்ற நூலைப் பெ. தூரன் வெளியிட்டார்.

ரா.அ. பத்மநாபன் பாரதியின் படைப்புகளைத் தொகுத்து, மூன்று 'பாரதி புதையல்' தொகுதிகளை வெளியிட்டார். அவருடைய ஐம்பதாண்டு உழைப்பின் பயனாக, பாரதி நூற்றாண்டின்போது அவை 'பாரதி புதையல் பெருந்திரட்டு' என்ற பெருநூலாக வெளிவந்தன. மேலும், அவர் அணியம் செய்த 'சித்திரபாரதி' நூலும் பாரதியத்திற்குப் பெருஞ்செல்வமாகும்.

மறைந்த ஏ.கே. செட்டியார் தம்முடைய 'குமரி மலர்' ஏட்டின் வாயிலாக அவ்வப்பொழுது பாரதியின் படைப்புகளைப் புதியனவாகக் கண்டெடுத்து, வெளியிட்டு வந்தார்.

கல்கத்தா தேசிய - நூலகத்தில் பாரதியின் 'இந்தியா' 1906-07ஆம் ஆண்டு இதழ்கள் இருக்கின்றன என்பது கர்ணபரம்பரைக் கதை போல் பேசப்பட்டுக் காலம் கடந்து கொண்டிருக்கையில், இளசை மணியன் அரும்பாடுபட்டு அவற்றின் நுண்படச்

சுருளை வரவழைத்து, அதிலிருந்து கட்டுரைகளைத் தெரிவு செய்து 'பாரதி தரிசனம்' என்ற பெயரில் இரு தொகுதிகளை வெளியிட்டார்.

'பாரதி தரிசனம்' தொகுதிகளில் இடம்பெற்ற கட்டுரைகளை வகைமை செய்து, அவற்றின் பதிப்பாசிரியராக விளங்கிய ஸி.எஸ். சுப்பிரமணியம், பாரதி எழுதிய 'மிதவாதிகளுக்கு டால்ஸ்டாயின் கடிதம்' என்ற நெடுங்கட்டுரையினையும் தனி நூலாக வெளியிட்டார். மேலும், 'பாரதி தரிசனம்' தொகையின் அடுத்த மூன்று தொகுதிகளையும் அணியம் செய்து வைத்துள்ளார். (மூன்றாம் தொகுதிக்கு எனது பங்களிப்பும் உண்டு என்பதை இங்குப் பெருமையுடன் தெரிவிக்க விரும்பு கின்றேன்.) அவை இதுவரை வெளிவரப் பெறாததைத் தமிழரின் தீயூழ் என்றே சொல்ல வேண்டும்.

எவருக்கும் கிடைக்கப் பெறாமலிருந்த 'சக்கரவர்த்தினி' இதழ்களைத் தேடியெடுத்து அவற்றிலுள்ள கட்டுரைகளைச் சீனி. விசுவநாதன் வெளியிட்டார். இவை தவிர 'இந்தியா' இதழி லிருந்து தேர்ந்தெடுத்தவற்றையும் பல நூல்களாக வெளியிட்டுள் ளார். மேலும், தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகம் வெளியிட்ட 'பாரதி பாடல்கள்: ஆய்வுப் பதிப்பு'க்கு வேண்டும் முறையில் பாடல்களைக் காலவரிசைப்படுத்தியும், பாட வேறுபாடுகளைக் குறிப்பிட்டும் உள்ளார்.

இவர்களைத் தவிர ரகுநாதன், பெ.சு.மணி ஆகியோரும் சில புதிய கண்டுபிடிப்புகளைச் செய்துள்ளனர்.

இவ்வறிஞர்களின் பணி பாராட்டுக்குரியது. ஆயினும், பாரதி நூற்றாண்டு முடிந்து பத்தாண்டாகிவிட்ட பிறகும்கூட பாரதியின் படைப்புகள் முழுமையான வடிவத்திலும், செம்மையான பதிப்பாகவும் வெளியிடப்படவில்லை என்பதே உண்மை. இதற்குக் காரணம் இரண்டு. முதலாவதாக, மேற்குறித்த பாரதி ஆய்வாளர்கள் எவர்க்கும் நிறுவனமுறையிலான பின்பலம் இல்லை. இரண்டாவதாக, பாரதி வேகத்துடன் செயல்பட்டு நிறைய எழுதிய 'இந்தியா' இதழ்கள் இதுவரை முழுமையாகக் கிடைக்கப் பெறவில்லை. 1907ஆம் ஆண்டின் பின்பாதி தொடங்கி, 1908ஆம் ஆண்டுப் பிற்பகுதியில் புதுவையிலிருந்து அவ்விதழ் மீண்டும் தொடரப்பட்ட வரையிலான இதழ்களில் பெரும்பாலானவை இதுவரை பாரதி ஆய்வாளர்களுக்குக் கிடைக்கவில்லை. இக்காலப் பகுதிதான் சுதேசி இயக்கதின் உச்சகட்டம் என்னும்போது, இவ்விழப்புக்கும் தமிழரின் தீயூழே காரணம் என்றுதான் அமைதி காணவேண்டியதாயுள்ளது.

அடுத்ததாக, இதுவரை கிடைக்கப்பெற்ற இதழ்களிலிருந்தும் கூடத் தேர்ந்தெடுக்கப்பட்ட கட்டுரைகளே தொகுக்கப்பட்டு வெளியிடப்பட்டுள்ளன. ஒரு செய்திப் பத்திரிகையிலிருந்து

இன்னதை இன்னார்தாம் எழுதினார் என்று நிறுவுவது இயலாத தாகும். இருப்பினும், அதில் வரும் யாவையும் ஆசிரியரின் கருத்தையே பெரும்பான்மையும் எதிரொலிக்கும் என்று துணிய லாம். அவ்வடிப்படையிலேயே முன்னர்க் குறித்த பாரதி ஆய்வாளர்கள் தம் தேர்வைச் செய்துள்ளனர்.

இவ்வாறு, இந்நூலின் இரண்டாம் பகுதியில் இடம் பெற்றுள்ளவற்றுள் பல ஏற்கனவே இப் பாரதி ஆய்வாளர்கள் தொகுத்த நூல்களில் இடம் பெற்றுள்ளனவெனினும், செம்பாதி யேனும் புதிதாக நூலுருப்பெறுகின்றன. பல கட்டுரைகள் புதியனவாகக் கண்டெடுக்கப்பட்டு இணைக்கப்பட்டுள்ளன. 'பாரதி தரிசனம்' இரண்டாம் பகுதியில் இடம் பெற்ற கருத்துப் படத்தைத் தவிர, சுதேசிக் கப்பல் கம்பெனி பற்றிய வேறு மூன்று கருத்துப்படங்களும் சேர்க்கப்பட்டுள்ளன. வ.உ.சி. தொடர்பான பாரதியின் பாடல்களுக்குச் செம்மையான மூல பாடம் வழங்கப்பட்டுள்ளது. வ.உ.சி.யின் நூல்களுக்குப் பாரதி எழுதிய மதிப்புரைகளும், 'இந்தியா'வில் வெளிவந்த விளம்பரங் களும் தரப்பட்டுள்ளன. மேலும், வ.உ.சி. 1908இல் கைதானதைத் தொடர்ந்து ஏற்பட்ட திருநெல்வேலி எழுச்சியில் அல்லலுற்றவர்க ளுக்கு உதவுவதற்காகத் தொடங்கப் பெற்ற 'திருநெல்வேலி கஷ்ட நிவர்த்தி நிதி', சுதேசிக் கப்பல் கம்பெனிக்கு உதவுதற்காகத் தொடங்கப் பெற்ற 'சுதேசிக் கப்பல் தரும நிதி' ஆகியன பற்றியும் விரிவான செய்திகள் உண்டு. முதலில் குறிப்பிட்ட நிதி தொடர்பாக, பாரதியும் பிறரும் சேர்ந்து வெளியிட்ட 'தமிழ் நாட்டு மஹா ஜனங்களுக்கு ஓர் பிரார்த்தனை' என்ற அறிக்கை 'சுதேசமித்திரன்' நாளேட்டிலிருந்து கண்டெடுக்கப்பட்டு முதன் முறையாக நூல் வடிவில் இடம் பெறுகின்றது. மேலும், இந்நிதிகளுக்காகச் செய்யப்பட்ட வசூலின் முழுவிவரங்களையும் வழங்க முயன்றுள்ளேன். அந்நீண்ட பட்டியல்கள் படிப்பவர் களுக்கு அலுப்பை உண்டாக்கக் கூடும் எனினும் பயன் கருதியே அவற்றைத் தந்துள்ளேன். தமிழ் நாட்டில் சுதேசிய இயக்கத்திற்கு ஆதரவு வழங்கியோர் யார், அதன் சமூக அடிப்படை என்ன என்பன போன்ற கேள்விகட்கு விடைகாண இவை பயன்படக் கூடும்.

'இந்தியா' இதழிலிருந்து தேர்ந்தெடுத்த கட்டுரைகளைப் பொறுத்தவரை, செய்தித் தன்மையுள்ளவற்றைக் கூடுமானவரை தவிர்த்துவிட்டு, கருத்துகளை வெளியிடுபவற்றையே சேர்க்க முயன்றுள்ளேன்.

மேலும், வ.உ.சி.யின் பெயர் இடைப்பிறவரலாக மட்டுமே குறிப்பிடப்படும் கட்டுரைகளும் விலக்கப்பட்டுள்ளன. எடுத்துக் காட்டுகளாக:

(i) 'பாரதி புதையல் பெருந்திரட்டி'ல் இடம் பெற்றுள்ள 'ஸந் நியாஸமும் சுதேசியமும்' என்ற கட்டுரை ('இந்தியா', சூன் 13, 1908).

(ii) 'இந்தியா', அக்டோபர் 10, 1908 இதழில் சுதேசியம் பற்றி வெளிவந்த நெடுங்கட்டுரையில் பின்வரும் குறிப்புக் காணப் படுகின்றது.

> சுதேசி ஸ்டீம் நாவிகேஷன் கம்பெனி தூத்துக்குடிக்கும் சென்னைக்கும் கப்பல் போக்குவரவு ஏற்படுத்தியிருக்கிற தைக் கேட்க மிகவும் ஆனந்தமாக இருக்கிறது. ஸ்ரீ சிதம்பரம் பிள்ளை தீபாந்திர தண்டனை அக்கிரமமாக அடைந்துவிட் டாரே, இனிமேல் கம்பெனியின் கதி என்ன ஆகுமோ என்றிருந்தோம். கம்பெனியின் மூலதனம் 20 லக்ஷமாக்கப் பட்டதும், கப்பல்கள் நூதனமான துறைகளுக்குப் போவதும் அந்த சக்கையை நிவர்த்தி செய்துவிட்டது. ஸ்ரீ பிள்ளையவர் களும் காவலிலிருந்து கொண்டிருக்கும்போதும் தன்னுடைய அருமை குழந்தையான கம்பெனியடைந்திருக்கும் விருத் தியை உத்தேசித்து ஆனந்தத்தையடைவார். நமது தென்னாட் டிலுள்ள தனவந்தர்கள் அந்த கம்பெனியை மேலும் மேலும் ஆதரித்து கல்கத்தா, ரங்கூன், பம்பாய், கராசி முதலிய துறைமுகங்களுக்கு அதன் கப்பல்கள் செல்லுமாறு விருத்திக் குக் கொண்டு வருவார்களாக.

அதே இதழில் ('இந்தியா', 10-10-1908) 'விபின் சந்திர பாலரின் ஐரோப்பிய யாத்திரை' என்ற கட்டுரையில் பின்வரும் குறிப்பு வருகிறது:

> ஆகா! எண்ணும்பொழுது மனந்துடிக்கின்றது! கைவிரல்கள் மரத்துப் போகின்றன! ஒன்றா இரண்டா? எத்தனை வீரர்களை இழந்துவிட்டோம்! எத்தனை மஹான்களைப் பறிகொடுத்து விட்டோம்! ஒரு காரணமுண்டா? சட்டம், நீதி, ஒழுங்கு ஏதேனுமுண்டா? பெயர் பெயராக எடுத்துச் சொல்ல வேண்டுமா? பாரத ஜனங்களே மறந்தா போய்விட் டீர்கள்? கல்லைப் போன்ற நெஞ்சமா வைத்துக் கொண் டிருக்கிறீர்கள்? திலகர், சிதம்பரம், அரவிந்தர் என்ற மனிதர் களைப் பற்றி நீங்கள் கேள்வியுற்றதாகவே ஞாபக மில்லையா?....

இதைப் போலவே, தம்முடைய 'பெண் விடுதலை (2)' என்ற கட்டுரையில் பாரதி, பின்வருமாறு குறிப்பிடுகின்றார்:

'மதராஸ் மெயில்' போன்ற ஆங்கிலேயப் பத்திராதிபதியிடம் போய் இந்தியாவிற்கு சுயராஜ்ஜியம் கொடுத்தால் என்ன நடக்கும் என்று கேளுங்கள். ''ஓஹோ! ஹோ! ஹோ! இந்தியாவிற்கு சுயராஜ்யம் கொடுத்தால் பஞ்சாபிகள் ராஜபுத் திரரைக் கொல்வார்கள். பிறகு, ராஜபுத்திரர் மஹாராஷ்டிர கூட்டத்தையெல்லாம் விழுங்கிப் போடுவார்கள். மஹாராஷ் டிரர் தெலுங்கரையும் கன்னடரையும் மலையாளிகளையும் தின்றுவிடுவார்கள். பிறகு, மலையாளிகள் தமிழ் பார்ப்பன ரையும், தமிழ் பார்ப்பனர் திராவிடரையும் சூர்ணமாக்கிவிடு வார்கள். சூர்ணித்த திராவிடர்கள் வங்காளி எலும்புகளை மாலையாகப் புனைவர்'', என்று சொல்லிப் பெருமூச்சுவிடு வார். அதே கேள்வியை நீதிபதி மணிஅய்யர், கேசவப் பிள்ளை, சிதம்பரம் பிள்ளை முதலியவர்களைப் போய்க் கேளுங்கள். ''அப்படிப் பெரிய அபாயம் ஒன்றும் உண்டா காது. ஸ்வராஜ்யம் கிடைத்தால் கஷ்டம் குறையும், பஞ்சம் வந்தால் அதைப் பொறுக்கத் திறன் உண்டாகும். அகால மரணம் நீங்கும். அவ்வளவுதான்'' என்று சொல்லுவார்கள்.

இவை போன்ற கட்டுரைகள் இத்தொகுப்பில் சேர்க்கப் படவில்லை.

இறுதியாக, இரண்டாம் பகுதியின் பிற்சேர்க்கையில், வ.உ.சி. மீது வெள்ளை அரசாங்கம் தொடுத்த வழக்கில் அவருக்கு ஆதரவாகப் பாரதி சான்று கூற முற்பட்டது தொடர்பான இரகசிய போலீஸ் அறிக்கைக் குறிப்புகள் வழங்கப் பட்டுள்ளன.

### பாரதி - வ.உ.சி. விவாதம்

இந்நூலின் மூன்றாம் பகுதியில், தமிழ் எழுத்துகளைப் பற்றிப் பாரதிக்கும் வ.உ.சிக்கும் இடையே நடந்த முக்கியமான தொரு விவாதம் முழுமையாகத் தரப்பட்டுள்ளது. இவ்விவாதம் அவ்விருவருக்கும் நெருங்கிய நண்பராக விளங்கிய சுப்பிரமணிய சிவா நடத்திய 'ஞானபாநு' இதழில் 1915ஆம் ஆண்டில் நடைபெற்றது. விவாதத்தின் கருப்பொருள் இன்றைக்கும் பொருத்தப்பாடு உடையது என்பதனை மனங்கொள்ள வேண்டும்.

### வ.உ.சி.யும் பாரதியும்:
### மண்டயம் ஸ்ரீனிவாசாசாரியார் நினைவுரை

மண்டயம் குடும்பத்தைச் சேர்ந்த ஸ்ரீனிவாசாசாரியார், வ.உ.சி. - பார்தியைப் பற்றி எழுதிய நெடுங்கட்டுரை இந்நூலின்

கடைசிப் பகுதியாக விளங்குகின்றது. மண்டயம் குடும்பத்தினர்க்கும் சுதேசி இயக்கத்துக்கும் நெருங்கிய தொடர்புண்டு. பாரதி நடைமுறை ஆசிரியராக இருந்த 'இந்தியா' இதழை நடத்தியவர்கள் இவர்களே. வ.உ.சி.யின் சுதேசிக் கப்பல் கம்பெனியிலும் பெரும் பணம் முதலீடு செய்து பொருளிழப்புக்கும் இக்குடும்பத்தினர் ஆளாயினர்.

ஸ்ரீனிவாசாசாரியார் எழுதிய நெடுங்கட்டுரையின் கையெழுத்துப் படியை நான் பார்வையிட்டுப் படியெடுத்துக்கொள்ள, திரு. வ.உ.சி. சுப்பிரமணியம் அவர்கள் சில ஆண்டுகளுக்கு முன்னர் அனுமதி வழங்கினார். அக்கையெழுத்துப்படி தம் கைவயம் எப்படி வந்தது என்பதனை அவரால் நினைவுகூர இயலவில்லை.

மண்டயம் ஸ்ரீனிவாசாசாரியார் எழுதிய பிறிதொரு நினைவுரையான 'Indian Freedom Movement and Our Family Reminiscences'' என்பதன் கையெழுத்துப் படியை, மண்டயம் திரு. பார்த்தசாரதி அவர்களிடமிருந்து கிடைக்கப்பெற்ற திரு. ஸி.எஸ். சுப்பிரமணியம் அவர்கள், அதனைப் பார்வையிடுவதற்கு அனுமதி நல்கினார். அதில் உள்ள செய்திகளும் இந்நூலில் இடம்பெற்றுள்ள கட்டுரைக்கு அரண் செய்கின்றன.

அகச் சான்றுகளிலிருந்து, இந்திய விடுதலைக்குச் சிறிது காலத்திற்கு முன்னர், **1946-47**ஆம் ஆண்டளவில், இக்கட்டுரை எழுதப்பட்டது எனத் துணியலாம்.

□ □ □

பதிப்பு நெறியைப் பொறுத்தமட்டில், மூலச் சான்றுகளிலுள்ளவாறே ஆவணங்கள் பதிப்பிக்கப்பட்டுள்ளன. எழுத்துப் பிழைகள், ஒற்றுப் பிழைகள், ஒருமை பன்மை மயக்கங்கள், பொருள் அழுத்தங்கள், நிறுத்தற் குறியீடுகள் எவையும் திருத்தப்படாமல், மூலத்தில் உள்ளவாறே வழங்குவதற்குக் கூடுமான வரை முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன. மூலப்படிகள் சிதைந்தும் தெளிவற்றும் உள்ள இடங்கள் (...) எனப் புள்ளியிட்டுக் காட்டப்பட்டுள்ளன. இன்றியமையாத பதிப்புக் குறிப்புகள் தனியே உள்ளொடுக்கியும் வேறுபடுத்தியும் காட்டப்பட்டுள்ளன.

இந்த நூலைப் போன்ற, அடிப்படை ஆவணங்களைத் தொகுத்து வெளியிடும் முயற்சிகள் பயன்தரும் என்ற நம்பிக்கை எனக்குண்டு. வ.உ.சி.யைப் பற்றிய முழு ஆய்விற்கும், பாரதி ஆய்வுக்கும் இந்நூல் சிறிய அளவிலேனும் பயன்படும் என நம்புகிறேன்.

இந்நூலின் முதல் வடிவம் பத்தாண்டுகளுக்கு முன்னர் அணியம் செய்யப்பெற்றது. பல காரணங்களால் இதன் வெளியீட்

டைத் தள்ளிப் போட்டுக் கொண்டுவர நேர்ந்தது. 'இந்தியா' முழுமையாக என்றேனும் ஒரு நாள் கிடைக்காமலா போய்விடும் என்ற எண்ணமும் ஒரு காரணம். ஆனால், இப்போது நினைத்துப் பார்க்கையில் இக்காலத்தாழ்வும் நன்மைக்கே என்று தோன்று கிறது. ஏனெனில், இந்த இடைப்பட்ட காலத்தில் இத்தொகுப்பு மேலும் செம்மையும் செழுமையும் பெற்றுள்ளதென்றே தோன்று கிறது.

சென்னை ஆ. இரா. வேங்கடாசலபதி
திசம்பர் '94

பாரதியைப் பற்றிய வ.உ.சி.யின் நினைவுக் குறிப்புகளின் தலைப்புப் பக்கம். வ.உ.சி.யின் கையெழுத்தில் உள்ளது.

ஸ்ரீ. சி. சுப்பிரமணிய பாரதியார்...

பற்றிய சில குறிப்புகள்.

---

வ.உ. சிதம்பரம் பிள்ளை எழுதியது.

---

கையெழுத்துப்படியின் முதல் இரண்டு பக்கங்கள். திருத்தங்களை வ.உ.சி. தம் கைப்படச் செய்துள்ளார்.

உ.

~~ஸ்ரீ~~ சுப்பிரமணிய பாரதியார்.

அவருக்கும் எனக்கும் நட்பு ~~பழக்கம்~~ ஏற்பட்டது.

சுப்பிரமணிய பாரதி என்னும் பெரியார் திருநெல்வேலி ஜில்லா எட்டயபுரம் சமஸ்தானம் எட்டயபுரத்தில் பிறந்தவர். அவர் தகப்பனார் பெயர் சின்னச்சாமி ஐயர். அவர் எட்டயபுரம் சமஸ்தானத்தில் ஓர் உத்தியோகம் புரிந்துகொண்டிருந்தார். அவர் காலத்தில் என் தகப்பனாரும் அந்த சமஸ்தானத்தின் வக்கீலாயிருந்தனர். என் தகப்பனாருடன் அவர் என் சொந்த ஊராகிய ஒட்டப்பிடாரத்திற்கு அடிக்கடி வருவதுண்டு. அக்காலத்தில் என் ஊரில் தாசில்தார் கச்சேரியும், தாசில்தார் மேஜிஸ்டிரேட் கோர்ட்டும் இருந்தன. அவ்விரண்டில் ஒன்றில் ஏதேனும் ஒரு ஜோலியாக அவர் என் ஊருக்கு வருவர். என் ஊருக்கு வந்த காலங்களில் அவர் என் வீட்டிலாவது, என் வீட்டிற்கு மேற்கேயுள்ள பழைய பாஞ்சாலங்குறிச்சி இத்தாபதிப் பிள்ளை வீட்டின் கட்டடத்தின் மாடியிலாவது தங்குவர். அப்போது எனக்கு வயது 15 அல்லது 16 இருக்கும். அவர் என்னுடனும் மற்றை யாரோடும் பேசிய மாதிரியிலிருந்து அவர் ஒரு பெரிய மேதாவியென்று நான் நினைத்தேன். அவரிடம் நான் சென்ற சமயங்கள் சிலவற்றில் அவருக்கு ஒரு மகன் இருப்பதாகவும், அவன் அதி புத்திசாலியெனவும், அவன் சிறு பிள்ளையாயிருந்தும் தமிழில் செய்யுள் பாடுவானென்றும் என் தகப்பனார் என்னிடம் சொல்வதுண்டு. அச்சிறு பிள்ளைதான் சுப்பிரமணிய பாரதி என்று இப்பொழுது உலகமெல்லாம் புகழ்ப் பெற்று விளங்கும் பெரியவர்.

இப்பெரியாரை நான் முதல் முதலாகப் பார்க்கும் பாக்கியம் பெற்றது அவர் சென்னையில் 'இந்தியா' என்னும் பெயர் பெற்ற தமிழ்ப் பத்திரிகையின் ஆசிரியராயிருந்து அதை நடத்தி வந்த காலத்தில்தான். அது 1906ம் வருஷ ஆரம்பமாக இருக்கலாமென்று நினைக்கிறேன். அப்போது நான் தூத்துக்குடியிலிருந்து சென்னை சென்றிருந்தேன்; திருவல்லிக்கேணியில் சுங்குராம செட்டி தெருவில் என் நண்பன் ஒருவன் வீட்டில் தங்கியிருந்தேன். அங்கிருந்து நான் பட்டணம் போகிற வருகிற வழியில் கண்ட ஒரு பெரிய வீடு "இந்தியா"வின் அதிபர் திருமலாச்சாரியார் வீடு என்று தெரிந்தேன். ஒரு நாள் மாலை 4 மணிச் சமாருக்கு நான் "இந்தியா"வின் அதிபரைப் பார்க்கக் கருதி அவர் வீட்டுள் புகுந்தேன். அங்கிருந்தோர் "அவர் மாடியிலிருக்கிறார்" என்றனர். நான் மாடிக்குச் சென்றேன். இள வயதுள்ள ஓர் ஐயங்காரைக் கண்டேன். அவர்தான் "இந்தியா"வின் அதிபர் என்று நினைத்து அவரை உசாவினேன். அவர் 'ஆம்' என்றார். அவரிடம் என் ஊரும் பேரும் சொன்னேன். உடனே அவர் மாடியின் உள்ளறையை நோக்கி "பாரதி! உங்கள்

2

ஊரார் ஒருவர் வந்திருக்கின்றனர்" என்று கூறினர். உடனே அங்கிருந்து பாரதியும் வெளியே வந்தனர். அவ்வந்தவர் "இவர்தான் 'இந்தியா'வின் ஆசிரியர் சுப்பிரமணிய பாரதி" என்றார். அவர் என்னையும் பெயரையும் உசாவினர். "தூத்துக்குடி ப்ளீடர் வக்கீல் உலகநாத பிள்ளை மகன் சிதம்பரம் பிள்ளை" என்றேன். "உங்கள் தகப்பனார் என் தகப்பனாரின் அத்தியந்த நண்பர். அவர்களை எனக்கு நன்றாய்த் தெரியும். உங்களைப் பற்றி கேள்விப்பட்டிருக்கிறேன்" என்றார் பாரதியார். நாள்தோறும் பெரும்பாலும் பாரதியாரும் நானும் சிறிது நேரம் தேசகாரியங்களைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தோம். அப்பேச்சு அவரைக் குருவாகவும் என்னைச் சீடனாகவும் நான் நினைக்கும்படி செய்தது. நாள்தோறும் மாலை 5-மணிக்குத் திருவல்லிக்கேணிக் கடற்கரைக்குச் செல்வோம். அங்கிருந்து வங்காளத்தின் காரியங்களையும் பெபின் சந்திரபாலர் முதலியோரின் பிரசங்கங்களையும் செயல்களையும் பற்றிப் பேசிக் கொண்டிருந்தோம். என் உள்ளத்தில் மின்மினிப் பூச்சி போல் ஒளிவிட்டுக் கொண்டிருந்த தேசாபிமானம் ஒரு பெரும் விளக்குப் போல ஒளிவிட்டுப் பிரகாசித்தது. அச்சமயம் கடற்கரை விளக்குகளும் ஒளிவிட்டுப் பிரகாசித்தன. நாள்தோறும் இருட்டிவிடும். பின்னர், நாள்தோறும் நான் 'இந்தியா' ஆபீஸிற்கும், 'இந்தியா' அதிபர் வீட்டிற்கும், கடற்கரைக்கும் செல்லலானேன்; அதிபரும் ஆசிரியரும் நானும் பேசலானோம். ஆசிரியரும் நானும் முன்னையே கம்பரும் சோதரருமாகி, மாமனும் மருமகனும் ஆயினோம்.

ஒரு நாள் மாலையில் நாங்கள் இருவரும் கடற்கரையில் வங்காளத்தைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தபோது, அங்கு காளி கோவிலுக்கு வெள்ளாடு பலி கொடுப்பதைப் பற்றிப் பாரதி பேசிய பேச்சிற்கு என் மனம் பூர்வமாக இணக்கம் செய்யாது. அவ்விஷயத்தை நழுவவிட்டு நான் கொடுத்த தேசாபிமானியாய் விட்டேன். அதன்மேல் அவர் என் வீட்டிற்கு வரவும், மாலையில் உண்ணவும் உறங்கவும், நான் அவர் வீட்டிற்குப் போகவும், அவரோடு உண்ணவும் உறங்கவும் ஆயினோம்; பிரான்ஸ் தேசத்துச் சரித்திரமும், இத்தாலி தேசத்துச் சரித்திரமும், அவை போன்றவும் அவர் சொல்லவும் நான் கேட்கவுமானேன். இத்தாலி தேசாபிமானி மிஸ்டர் மாஜினியின் தேசத் ஆகிய 'யங் இத்தாலி' சங்கத்தின் அங்கத்தினராகச் சேர்ந்தோர் செய்து வந்த பிரமாணம் செய்யுளை ஆங்கில பாஷையில் எனக்குப் படித்துக் காட்டினார். அதைக் கேட்டதும் நான் சொக்கிப் போனேன். அச்செய்யுளைத் தமிழ்ப் பாட்டாக மொழிபெயர்த்துத் தரவேண்டுமென்றேன். அவர் அதை அன்றே தமிழ்ப் பாட்டாக மொழிபெயர்த்துத் தந்தார். அதுதான் "பேரருட் கடவுள் திருவடியாணை" என்று தொடங்கும் பாட்டு. தேச ஆட்சியைச் சித்திரம் வைக்

# ஸ்ரீ C. சுப்பிரமணிய பாரதியாரைப் பற்றிய சில 'குறிப்புகள்

வ.உ. சிதம்பரம் பிள்ளை எழுதியது

## ஸ்ரீ சுப்பிரமணிய பாரதியார்: அவருக்கும் எனக்கும் நட்பு ஏற்பட்டது

சுப்பிரமணிய பாரதி என்னும் பெரியார் திருநெல்வேலி ஜில்லா எட்டயபுரம் சமஸ்தானம் எட்டயபுரத்தில் பிறந்தவர். அவர் தகப்பனார் பெயர் சின்னச்சாமி அய்யர். அவர் எட்டயபுரம் சமஸ்தானத்தில் ஓர் உத்தியோகம் புரிந்து கொண்டிருந்தார். அவர் காலத்தில் என் தகப்பனாரும் அந்த சமஸ்தானத்தின் வக்கீலா யிருந் தனர். என் தகப்பனாருடன் அவர் என் சொந்த ஊராகிய ஒட்டபிடாரத்திற்கு அடிக்கடி வருவதுண்டு. அக்காலத்தில் என் ஊரில் தாலுகாக் கச்சேரியும், தாலுகா மேஜிஸ்டிரேட்டுக் கோர்ட்டும் இருந்தன. அவ்விரண்டில் ஒன்றில் ஏதேனும் ஒரு ஜோலியாக அவர் என் ஊருக்கு வருவர். என்னூருக்கு வந்த காலங்களில் அவர் என் வீட்டிலாவது, என் வீட்டிற்கு மேற்கே யுள்ள பழைய பாஞ்சாலங்குரிச்சித் தானாபதிப் பிள்ளை வீட்டுக் கூடத்தின் மாடியிலாவது தங்குவர். அப்போது எனக்கு வயது 15 அல்லது 16 இருக்கும். அவர் என்னோடும் மற்றையாரோடும் பேசிய மாதிரியிலிருந்து அவர் ஒரு பெரிய மேதாவியென்று நான் நினைத்தேன். அவரிடம் நான் சென்ற சமயங்கள் சிலவற்றில் அவருக்கு ஒரு மகன் இருப்பதாகவும், அவன் அதிபுத்திசாலியென்றும், அவன் சிறு பிள்ளையாயிருந்தும் தமிழில் சுயமாகப் பாடுவானென்றும் என் தகப்பனார் என்னிடம் சொல்வதுண்டு. அச்சிறு பிள்ளைதான் சுப்பிரமணிய பாரதி என்று இப்பொழுது உலகமெல்லாம் புகழப்பெற்று விளங்கும் பெரியார்.

இப்பெரியாரை நான் முதல் முதலாகப் பார்க்கும் பாக்கியம் பெற்றது அவர் சென்னையில் ''இந்தியா'' என்னும் பெயர் பெற்ற தமிழ்ப் பத்திரிகையின் ஆசிரியராயிருந்து அதனை நடத்தி வந்த காலத்தில்தான். அது 1906-ம் வருஷ ஆரம்பமாக இருக்கலாமென்று நினைக்கிறேன். அப்போது நான் தூத்துக்குடி யிலிருந்து சென்னை சென்றிருந்தேன்; திருவல்லிக்கேணியில் சுங்குராம செட்டி தெருவில் என் நண்பன் ஒருவன் வீட்டில் தங்கியிருந்தேன். அங்கிருந்து நான் பட்டணம் போகிற வருகிற வழியில் கண்ட ஒரு பெரிய வீடு ''இந்தியா''வின் அதிபர் திருமலாச்சாரியார் வீடு என்று தெரிந்தேன். ஒரு நாள் மாலை

4 மணிச் சுமாருக்கு நான் ''இந்தியா''வின் அதிபரைப் பார்க்கக் கருதி அவர் வீட்டுள் புகுந்தேன். அங்கிருந்தோர் 'அவர் மாடியில் இருக்கிறார்' என்றனர். நான் மாடிக்குச் சென்றேன். இளவய துள்ள ஓர் அய்யங்காரைக் கண்டேன். அவர்தான் ''இந்தியா''வின் அதிபர் என்று நினைத்து அவரை உசாவினேன். அவர் ''ஆம்'' என்றார். அவரிடம் என் ஊரும் பேரும் சொன்னேன். உடனே அவர் மாடியின் உள்ளரங்கை நோக்கி ''பாரதி! உங்கள் ஊரார் ஒருவர் வந்திருக்கின்றனர்'' என்று கூறினர். உடனே அங்கிருந்து பாரதியும் வேறொருவரும் வந்தனர். அய்யங்கார் ''இவர்தான் ''இந்தியா''வின் ஆசிரியர் சுப்பிரமணிய பாரதி'' என்றார். அவர் என் ஊரையும் பெயரையும் உசாவினர். ''ஒட்டப்பிடாரம் வக்கீல் உலகநாத பிள்ளை மகன் சிதம்பரம் பிள்ளை'' என்றேன். ''உங்கள் தகப்பனார் என் தகப்பனாரின் அத்தியந்த நண்பர். அவர்களை எனக்கு நன்றாகத் தெரியும். உங்களைப் பற்றி கேள்விபட்டிருக்கிறேன்'' என்றார் பாரதியார். நால்வரும் - பெரும்பாலும் பாரதியாரும் நானும் - சிறிது நேரம் தேச காரியங்களைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தோம். அப்பேச்சு அவரைக் கம்பராகவும் என்னைச் சோழனாகவும் நான் நினைக்கும் படி செய்தது. நால்வரும் மாலை 5 மணிக்குத் திருவல்லிக்கேணிக் கடற்கரைக்குச் சென்றோம். அங்கிருந்து வங்காளத்தின் காரி யங்களையும் பெபின் சந்திரபாலர் முதலியோரின் பிரசங்கங்களை யும் செயல்களையும் பற்றிப் பேசிக் கொண்டிருந்தோம். என் உள்ளத்தில் மின்மினிப் பூச்சிபோல் ஒளிர்ந்து கொண்டிருந்த தேசாபிமான நெருப்பு விளக்குப் போல ஒளி விட்டுப் பிரகாசித்தது. அச்சமயம் கடற்கரை விளக்கு களும் ஒளிவிட்டுப் பிரகாசித்தன. நால்வரும் வீடு திரும்பினோம். பின்னர், நாள்தோறும் நான் ''இந்தியா'' அதிபர் வீட்டிற்கும், ''இந்தியா'' ஆபீஸ்க்கும், கடற்கரைக்கும் செல்லலானேன்; அதிபரும் ஆசிரியரும் நானும் பேசலானோம். ஆசிரியரும் நானும் முறையே கம்பரும் சோழனுமாகி, மாமனாரும் மரு மகனும் ஆயினோம்.

ஒருநாள் மாலையில் நாங்கள் மூவரும் கடற்கரையில் வங்காளத்தைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்த காலையில், அங்குக் காளிதேவிக்கு வெள்ளாடு பலி கொடுப்பதைப் பற்றிப் பாலர் பேசிய பேச்சிற்கு என் மாமனார் ஓர் வியாக்கியானம் செய்தார். அவ்வியாக்கியானத்தைக் கேட்டதும் நான் கொழுத்த தேசாபிமானியாய் விட்டேன். அது முதல் அவர் என் வீட்டிற்கு வரவும், என்னோடு உண்ணவும் உறங்கவும், நான் அவர் வீட்டிற்குப் போகவும், அவரோடு உண்ணவும் உறங்கவும் ஆயிருந்தோம்; பிரான்ஸ் தேசத்துச் சரித்திரமும், இத்தாலி

தேசத்துச் சரித்திரமும், அவைபோன்ற பிறவும் அவர் சொல்லவும் நான் கேட்கவுமானோம். இத்தாலி தேசாபிமானி மிஸ்டர் மாஸினியின் தேசவூழிய ''யௌவன இத்தாலி'' சங்கத்தின் அங்கத்தினராகச் சேர்ந்தோர் செய்துவந்த பிரமாணச் செய்யுளை ஆங்கில பாஷையில் என் மாமனார் எனக்குப் படித்துக் காட்டினார். அதனைக் கேட்டதும் நான் சொக்கிப் போனேன். அச்செய்யுளைத் தமிழ்ப் பாட்டாக மொழிபெயர்த்துத் தரவேண்டு மென்றேன். அவர் அதனை அன்றே தமிழ்ப் பாட்டாக மொழிபெயர்த்துத் தந்தார். அதுதான் ''பேரருட் கடவுள் திருவடியாணை'' என்று தொடங்கும் பாட்டு. தேச ஆட்சியைச் சீக்கிரம் கைக் கொள்ளுதற்குச் செய்ய வேண்டிய முயற்சிகளைப் பற்றி பேசினோம்; பிரசங்கம் செய்தோம். தேசாபிமானத்தின் ஊற்றென விளங்கும் திருவல்லிக்கேணிக் கோவிற்பக்கத்திலுள்ள மண்டையன் கூட்டத்தாராகிய திருமலாச்சாரியார், ஸ்ரீனிவாஸச் சாரியார் முதலியவர்களோடு அடிக்கடி பேசலானோம்; ஆலோசிக் கலானோம். அவ்வாலோசனையின் பயனாகத் திருவல்லிக்கேணி யில் ''சென்னை ஜன சங்கம்'' என்று ஒரு தேசாபிமானச் சங்கத்தை ஸ்தாபித்தோம். பின்னர், நான் தூத்துக்குடிக்குத் திரும்பினேன்; தேச அரசாட்சியை மீட்டும் வேலைகளில் ஈடுபட்டேன்.

### நாங்கள் சூரத்துக் காங்கிரஸ்க்குப் போனது

1907-ம் வருஷம் டிசம்பர் மாதத்தில் சூரத்தில் நடப்பதா யிருந்த இந்தியன் நேஷனல் காங்கிரஸ் மகாசபையில் அக்கி ராசனம் வகிப்பதற்குக் கல்கத்தாவிலிருந்த பெரிய சீமானும் பேர்பெற்ற வக்கீலுமான மிஸ்டர் ராஷ் பெகாரி கோஷைத் தெரிந்தெடுத்திருப்பதாகப் பத்திரிகைகளில் பிரசுரமாயிற்று. அதனைப் படித்ததும் நமது பாரதியார் சிறந்த தேசத்தொண்டு புரிந்ததன் காரணமாகத் தேசம் விட்டுக் கடத்தப்பட்டு அப்போது விடுதலையடைந்த ஸ்ரீ லாலா லஜபதி ராயை அந்த வருஷக் காங்கிரஸ் மகாசபைக்குத் தலைவராக்க வேண்டுமென்று நினைத் தார். உடனே நான் சென்னைக்கு வரவேண்டுமென்று எனக்குத் தந்தி கொடுத்தார். நான் சென்னைக்குச் சென்றேன். பாரதியார் முதலிய தேசாபிமானிகளெல்லாம் ஒன்றுகூடி ஆலோசித்தோம்; ஸ்ரீ லாலா லஜபதி ராயையே காங்கிரஸ் மகாசபைக்குத் தலைவராக்க வேண்டுமென்று ஏகமனதாகத் தீர்மானித்தோம். அதற்குரிய வேலைகளைச் செய்யும்படியான பொறுப்புப் பாரதிக் கும் எனக்கும் அளிக்கப்பட்டது. அவ்விஷயத்தைக் கொண்டு முடிப்பதற்குப் பாரதி மந்திரியும், நான் அரசனும் ஆயினோம். முதலில் ஸ்ரீ பால கங்காதர திலகரையும் ஸ்ரீ அரவிந்த கோஷையும் எங்கள் கொள்கைக்கு இணங்கும்படி செய்ய வேண்டுமென்று நினைத்தோம். இருவருக்கும் கடிதங்கள் போல

நெடுந்தந்திகள் பல அனுப்பினேன். காங்கிரஸ் மகாசபை மாநாட்டில் ஸ்ரீ லாலா லஜபதி ராய்க்கு மெஜாரிட்டி வோட்ஸ் கிடைக்கும்படியாகச் செய்வதற்காகச் சென்னை மாகாணத்திலிருந்தும் அனேக பிரதிநிதிகளைக் கூட்டிக் கொண்டு வரமுடியுமாவென்று எனக்குத் தந்திகள் கொடுத்துக் கேட்டு, அவ்வாறு செய்வதாக என் வாக்குறுதி பெற்றுக் கொண்டு, காங்கிரஸ் மகா சபைக் கூட்டத்திற்கு ஸ்ரீ லாலா லஜபதி ராயைத் தலைவராக்க வேண்டுவன செய்கிறோம் என்று அவ்விருவரும் எனக்கு முடிவான தந்தி கொடுத்தார்கள். அது விஷயமாகத் திலகரது 'கேசரி'ப் பத்திரிகையிலும் பம்பாய் மாகாணத்தின் பிற தேசீயப் பத்திரிகைகளிலும் ஸ்ரீ அரவிந்தரின் ''வந்தே மாதர''ப் பத்திரிகையிலும், வங்காள மாகாணத்தின் பிற தேசீயப் பத்திரிகையிலும், மற்றைய மாகாணங்களின் தேசீயப் பத்திரிகைகளிலும் பலமான கிளர்ச்சி செய்யப்பட்டது. ஒரு சில மிதவாதிகள் தவிர மற்றைய மிதவாதிகளும், அமிதவாதிகளும், தேசாபிமானிகளும் ஸ்ரீ லாலா லஜபதி ராயையே காங்கிரஸ் தலைவராக்க வேண்டுமென்று பத்திரிகைகளில் எழுதித் தங்கள் அபிப்பிராயத்தை வெளியிட்டார்கள். காங்கிரஸ் மகாசபைக் கூட்டத்தின் ஆரம்பத் தேதி நெருங்கிற்று. அனேக பிரதிநிதிகளுடன் நான் அத்தேதிக்குச் சில தினங்களுக்கு முன்னரே சூரத்து நகரம் வந்து சேரவேண்டுமென்று ஸ்ரீ திலகரிடமிருந்து எனக்குத் தந்தி வந்தது.

தூத்துக்குடியிலிருந்து நான் சில நண்பர்களுடன் புறப்பட்டுச் சென்னை போய்ச் சேர்ந்தேன். மண்டையன் கூட்டத்தார் வீட்டில் சென்னை ஜனசங்கத்தின் அங்கத்தினர்களாகிய சென்னை இளந் தேசாபிமானிகளெல்லாம் ஒரு கூட்டம் கூடி ஆலோசித்தோம். பாரதியார் 100 பிரதிநிதிகளுக்குக் குறையாமல் சென்னையிலிருந்து கூட்டிக்கொண்டு போகவேண்டுமென்று சொன்னார். அப்பிரதிநிதிகளில் பணம் இல்லாதவர்களுக்குப் பணம் கொடுத்துக் கூட்டிக்கொண்டு போகவேண்டுமென்றும், அவர்களைச் சூரத்திற்குக் கூட்டிப்போய் வருவதற்குரிய செலவு தொகையில் ஒரு பாதியை மண்டையன் கூட்டத் தலைவர் ஸ்ரீனிவாஸச்சாரியும், மற்றொரு பாதியை நானும் கொடுக்கவேண்டுமென்றும் எங்களுக்குள் முடிவு செய்து கொண்டோம். சுமார் 100 பிரதிநிதிகளை நாங்கள் கூட்டிக்கொண்டு வருவதாக ஸ்ரீ திலகருக்குத் தந்தி கொடுத்தோம். அப்போது ஊர்ஜிதத்திலிருந்த காங்கிரஸ் மகா சபையின் விதிப்படி சங்கங்களின் மூலமாகத்தான் காங்கிரஸ்க்குப் பிரதிநிதிகளைத் தெரிந்தெடுக்க வேண்டும். அவ்வாறே பல சங்கங்கள் மூலமாகப் பல பிரதிநிதிகளைத் தெரிந்தெடுத்துச் சென்னைக்கு அனுப்பும்படியாகத் தமிழ் நாட்டிலுள்ள பல நண்பர்களுக்குத் தகவல் கொடுத்தோம். அவர்கள் அவ்வாறே பலவூர்களிலுள்ள பல சங்கங்கள் மூலமாகப் பல பிரதிநிதிகளைத்

தெரிந்தெடுத்துச் சென்னைக்கு அனுப்பினார்கள். அவர்களில் அனேகர் சாதாரண டிரெய்ன் வழியாகச் சூரத்துக்குச் சென்றார்கள். எங்கள் சென்னைத் தலைவர் ஜி. சுப்பிரமணிய அய்யரவர்களும் சென்னையிலிருந்து சூரத்துக்குச் சென்றார்கள். ''சென்னை ஜன சங்க''த்தின் அங்கத்தினர்களாகிய இளந்தேசாபிமானிகளெல்லாம் ஒரு பெரு ரெயில் வண்டியை ரிசர்வ் செய்து சென்னையிலிருந்து சூரத்துக்குச் சென்றோம். எங்களுடன் சென்றவர்களில் சென்னை அட்வகேட் ஸ்ரீமான் S. துரைசாமி அய்யர் M.A., B.L.,ம் ஸ்ரீமான் V. சக்கரை செட்டியார் B.A., B.L,,ம் இருவராவர்.

காங்கிரஸ் மகாநாடு

பாரதியார் முதலிய சென்னைத் தேசீயப் பிரதிநிதிகள் சூரத்து நகருக்கு வெளியே காங்கிரஸ் கொட்டகையைச் சுற்றி அமைக்கப் பட்டிருந்த கூடாரங்களில் தங்கியிருந்தோம். சூரத்து நகருள் சில பங்களாக்களில் திலகர் முதலிய பம்பாய்த் தேசீயப் பிரதிநிதிகளும் வேறு சில பங்களாக்களில் அரவிந்தர் முதலிய வங்காளத் தேசீயப் பிரதிநிதிகளும் தங்கியிருந்தார்கள். காங்கிரஸ் பிரசிடெண்டாக வந்திருந்த ஸ்ரீ ராஷ்பிகாரி கோஸ் எழுதி அச்சிட்டுக் கொண்டு வந்திருந்த தமது தலைவர்-பிரசங்கப் பிரசுரத்தில் ''அமிதவாதிகள்'' என்று அப்போது சொல்லப்பட்ட தேசீயவாதிகளாகிய திலகர், அரவிந்தர், பாரதியார் குழாத்தினர்களைப் பற்றி இழிவாகச் சில வாக்கியங்கள் எழுதப்பட்டிருந்தன. அவற்றை அப்பிரசுரத்திலிருந்து நீக்கிவிட வேண்டுமென்று ஸ்ரீ ராஷ்பிகாரிக்குத் திலகரும் அரவிந்தரும் சிலரிடம் சொல்லியனுப்பினர். அவ்வாக்கியங்களை நீக்குவதற்கு அவர் இணங்கவில்லை. அவ்வாக்கியங்களை அப்பிரசுரத்திலிருந்து நீக்காவிட்டால், காங்கிரஸ் மகாசபைக் கூட்டத்தில் ராஷ்பிகாரி தலைமை வகிக்க வேண்டுமென்ற பிரேரேபணையைத் தாம் எதிர்க்கப் போவதாகத் திலகர், ஸர். பிரோஷிஷா மேத்தா, ஸ்ரீ கோக்கலே, வி. கிருஷ்ணசுவாமி அய்யர் முதலிய மிதவாதத் தலைவர்களுக்குச் சொல்லியனுப்பினார். மிதவாதத் தலைவர்கள் பலரும் கூடி யாலோசித்து அவ்வாக்கியங்களை அப்பிரசுரத்திலிருந்து நீக்க முடியாதென்று பதில் சொல்லிவிட்டனர். பின்னர்த் திலகர் காங்கிரஸ் மகாசபைக்காகப் பல மாகாணங்களிலிருந்தும் வந்திருந்த தேசீயக் கட்சிப் பிரதிநிதிகளையெல்லாம் சேர்த்து ஒரு கூட்டம் கூட்டி ஷை விஷயத்தை எடுத்துச் சொல்லி ஆலோசனை செய்தனர். அரவிந்தர், பாரதியார் முதலியோர் ராஷ்பிகாரி அவ்வாக்கியங்களை அப்பிரசுரத்திலிருந்து நீக்காவிட்டால் அவர் தலைவராயிருக்க வேண்டுமென்ற பிரேரேபணையை எதிர்த்து ஸ்ரீ லாலா லஜபதி ராய் தலைவராயிருக்க வேண்டுமென்று ஒரு பிரேரேபணை செய்ய வேண்டுமென்று சொல்லினர். அவ்வாறே

செய்வதென்றும், அதனைத் திலகரே முன்னின்று செய்ய வேண்டுமென்றும் முடிவு செய்யப்பட்டது.

திலகருக்கும் ஏனைய தலைவர்களுக்குமுள்ள வித்தியாச மொன்றை இங்குக் குறிப்பிட வேண்டியது அவசியமாயிருக் கிறது. திலகர் எந்தக் காரியத்தைச் செய்ய விரும்பினாலும், அந்தக் காரியத்தைப் பற்றி முதலில் தம்முடைய சிஷ்யர்களைக் கலந்து ஆலோசனை செய்வர். தமது அபிப்பிராயமும் அவர்கள் அபிப்பிராயமும் மாறுபடுமாயின், தமது அபிப்பிராயத்திற்கு அனுசரணையான விஷயங்களையெல்லாம் எடுத்துச் சொல்லி வாதிப்பர். தமது அபிப்பிராயம் நிராகரிக்கப்படுமாயின், தமது சிஷ்யர்கள் அபிப்பிராயப்படியே முடிவு செய்வித்து அதனையே தாம் முன்னின்று செய்வர். ஏனைய தலைவர்களோ தங்கள் சிஷ்யர்களுடைய அபிப்பிராயங்களை ஒரு சிறிதும் பொருட்படுத் தாது தமது அபிப்பிராயப்படியே காரியங்களைச் செய்வார்கள்.

மேற்சொல்லிய காங்கிரஸ் பிரசிடண்டு பிரேரேபணையைப் பற்றிய முடிவு மிதவாதத் தலைவர்களுக்குத் தெரிவிக்கப்பட்டது. உடனே அவர்கள் கூட்டம் கூடி ஆலோசனை செய்தார்கள். ஸ்ரீ லாலா லஜபதி ராய் அவ்வருஷத்துக்குக் காங்கிரஸ் மகாசபையின் தலைமைப் பதவியை ஏற்றுக் கொள்ள மறுத்து விட்டால், திலகர் கக்ஷியினர் காங்கிரஸ் தலைவரைப் பற்றி பிரேரேபணையை எதிர்க்க மாட்டார் என்ற முடிவுக்கு வந்தார் கள். பின்னர் ஸ்ரீ லாலா லஜபதி ராயைத் தருவித்து விஷயத்தை அவரிடம் மிதவாதத் தலைவர்கள் தெரியப்படுத்தினார்கள். தம்மால் காங்கிரஸில் பிளவுண்டாகாமல் பார்த்துக் கொள்வதாக அவர் மிதவாதத் தலைவர்களுக்கு பதில் கூறிவிட்டுத் திலகரிடம் வந்து நடந்ததைத் தெரியப்படுத்திக் காங்கிரஸ் மகாசபைக் கூட்டத்தில் தலைவரைப் பற்றிய பிரேரேபணையை எதிர்க்காமல் விட்டுவிடும்படியாகக் கேட்டனர். தலைவர் பிரசங்கப் பிரசுரத் தில் தம் குழாத்தினர்களைப் பற்றியெழுதியுள்ள இழிமொழிக ளைத் திலகர் எடுத்துக்காட்டினார். அவர் அவற்றைப் படித்ததும் மிக்க வருத்தமுற்றுத் தாம்போய் மிதவாதத் தலைவர்களிடம் பேசி அவ்வாக்கியங்களை அப்பிரசுரத்திலிருந்து நீக்கும்படி செய்வதாக வாக்குச் சொல்லிப் போயினர். ஆனால், அவருடைய பேச்செல்லாம் மிதவாதத் தலைவர்களுடைய செவிகளுக்குள் ஏறவில்லை. அவர் திரும்பிவந்து திலகரிடம் நடந்ததைச் சொல்லித் தம் பெயரைத் தலைவர் பதவிக்குப் பிரேரேபிக்க வேண்டாமென்று கேட்டுக் கொண்டனர்.

### காங்கிரஸில் குழப்பம்

குறித்த தேதியில் குறித்த நேரத்தில் காங்கிரஸ் மகாசபை கூடிற்று. காங்கிரஸ் தலைவரைப் பற்றிய பிரேரேபணையை

எதிர்க்க வேண்டுமென்ற நோக்கமுடைய தேசீயவாதிகள் காங்கிரஸ் கொட்டகையுள் பல பாகங்களிலும் உட்கார்ந்திருந்தோம். வரவேற்புத் தலைவர் எழுந்திருந்து தமது வரவேற்புப் பிரசங்கப் பிரசுரத்தைப் படித்து முடித்தார். பிளாட்டுப்பார மேடையிலிருந்தவர்களில் ஒருவர் எழுந்திருந்து ஸ்ரீ ராஷ்பிகாரி கோஸ் காங்கிரஸ் மகாநாட்டிற்குத் தலைமை வகிக்க வேண்டுமென்று பிரேரேபித்தார். அங்கிருந்த மற்றொரு மிதவாதத் தலைவர் எழுந்திருந்து அப்பிரேரேபணையை ஆமோதித்தார். உடனே திலகர் பிளாட்பார மேடைக்குச் சென்று அப்பிரேரேபணையைத் தாம் எதிர்ப்பதாகச் சொன்னார். பிளாட்பாரத்தில் கூச்சல் கிளம்பிற்று. பலர் பலவாறு திலகரைத் திட்டிக் கொண்டும் (Go to your seat) ''உம் இடத்திற்குப் போம்'' என்று சொல்லிக் கொண்டும் பெருங்குழப்பம் செய்தனர். தலைவரைப் பற்றிய பிரேரேபணையைத் தாம் எதிர்த்தற்குரிய காரணங்களை எடுத்துச் சொல்லுவதற்காகப் பலமுறை திலகர் எத்தனித்தார். மிதவாதிகளின் பெருங்கூச்சலால் திலகர் வார்த்தைகள் காங்கிரஸ் பந்தலில் பிரதிநிதிகள் இருந்த இடங்களுக்குக் கேட்கவில்லை. திலகரோ தம்மைப் பேச விட்டாலன்றிப் பிளாட்பார மேடையை விட்டுப் போகப்போவதில்லையென்று சொல்லித் தமது கைகளைக் கட்டிக் கொண்டு அசையாது நின்றார். இச்சமயத்தில் ராஷ் பிகாரி மேஜைமேல் ஏறி நின்று கொண்டு தமது தலைவர் பிரசங்கப் பிரசுரத்தை வாசிக்கத் தொடங்கினார். பிரதிநிதிகள் இடங்களிலிருந்து ''இன்னும் உம்மைப் பிரசிடண்டாகத் தெரிந்தெடுக்கவில்லை. உமது பிரசங்கத்தை வாசிக்க வேண்டா'' என்ற சத்தங்கள் கிளம்பின. மிதவாதிகள் பிளாட்பார மேடையில் எழுந்திருந்து நின்று கொண்டு திலகரை நோக்கி (Go to your seat). ''உம் இடத்துக்குப் போம் (Don't open your mouth) உமது வாயைத் திறக்காதேயும்'' என்று பெருங்கூச்சல் இட்டார்கள். அப்போது அவர்கள் முன்பு திலகர் நின்ற நிலை இன்றும் அன்றுபோல் என் மனக்கண்ணுக்குத் தெரிகின்றது. அன்று அவர் நின்ற நிலையை மதம்பிடித்துக் கர்ஜித்துக் கொண்டிருந்த பல நூறு யானைகளின் முன் அமரிக்கையாய் அடங்கி ஒடுங்கி நின்ற ஒரு சிங்கத்தின் நிலைக்கு ஒப்பிடலாம்.

### காங்கிரஸ் கலைக்கப்பட்டது

அச்சமயத்தில் பிளாட்பாரத்திலிருந்த மிதவாதிகள் பலர் தமது நாற்காலிகளைத் தம்தம் தலைக்கு மேலே தூக்கித் திலகர் மேலே எறிய எத்தனித்தனர். காங்கிரஸ் பந்தரில் முன்னணியிலிருந்த ஸ்ரீ கப்பர்தேயும் நமது பாரதியார் முதலிய சென்னை மாகாணப் பிரதிநிதிகள் சிலரும் அம்மிதவாதிகள்

நாற்காலிகளைத் தூக்கித் திலகர் மேல் எறிய எத்தனித்ததைக் கண்டதும் ஒரே பாய்ச்சலாய் பிளாட்பாரத்தின் மேல் பாய்ந்து திலகரைச் சுற்றி வட்டமாக நின்று கொண்டு திலகர் மேல் எறியப்பட்ட நாற்காலிகளைத் தம் கைகளால் தடுத்து பக்கத்தே தள்ளிக் கொண்டிருந்தார்கள். அப்போதும் ராஷ் பிகாரி மேஜை மேல் நின்று தமது பிரசங்கக் குறிப்பை வாசித்துக் கொண்டிருந் தார். காங்கிரஸ் பந்தரிலிருந்த தேசீயப் பிரதிநிதிகள், முக்கியமாகப் பாரதியார் முதலிய சென்னைப் பிரதிநிதிகள், (Don't read) ''வாசிக்க வேண்டா'', (Sit down) ''கீழே உட்காரும்'' என்று ராஷ் பிகாரியை நோக்கிச் சொல்லிக் கொண்டிருந்தார்கள். இந்தச் சமயத்தில் காங்கிரஸ் பந்தரின் பல மூலைகளில் முன்னரே ஒளித்து வைக்கப்பட்டிருந்த குண்டர்கள் (போக்கிறிகள்) தடிக் கம்புகள் சகிதம் புறப்பட்டுப் பிளாட்பாரத்துக்குச் சென்றார்கள். அங்குத் திலகரைச் சுற்றி வட்டமாக நின்று, மிதவாதிகளால் எறியப்பட்ட நாற்காலிகள் திலகர் மீது விழாதபடி தடுத்துக் கொண்டிருந்த தேசீயவாதிகளை — முக்கியமாகச் சென்னை தேசீயவாதிகளை — அக் குண்டர்கள் தடிக்கம்புகளால் அடித்துக் கீழே சாய்த்தார்கள். காங்கிரஸ் பந்தர்ப் பிரதிநிதிகள் இடங்களிலி ருந்து ஜோடுகளும் செருப்புகளும் பிளாட்டுபாரத்தின் மேல் நின்று தடிக்கம்புகளால் அடித்துக் கொண்டிருந்த குண்டர்கள் மேல் எறியப்பட்டன. அந்த ஜோடுகளில் இரண்டு மிதவாதிகளின் மாபெருந்தலைவர்களான இருவர் கன்னங்களில் பட்டுக் கீழே விழுந்தன. உடனே மிதவாதத் தலைவர்கள் காங்கிரஸைக் கலைக்க வேண்டுமென்று சூரத் போலீசாருக்கு அறிவித்தனர். போலீசார்கள் வந்து காங்கிரஸ் பந்தர் தமது ஆள்கையில் இருப்பதாகவும், கால் மணி நேரத்திற்குள் எல்லாரும் காங்கிரஸ் பந்தரை விட்டு வெளியேறிவிடவேண்டுமென்றும் உத்தரவு செய்தார்கள். உடனே மிதவாதத் தலைவர்களும் பிரதிநிதிகளும் குண்டர்களும் காங்கிரஸ் பந்தரை விட்டு வெளியேறிப் போய் விட்டார்கள். பிற்பாடு எங்கள் தலைவர்களும் நாங்களும் காங்கிரஸ் பந்தரை விட்டு வெளியேறி அரவிந்தர் தங்கியிருந்த பங்களாவுக்குப் போய்ச் சேர்ந்தோம்.

தேசீயப் பிரதிநிதிகள் மகாநாடு

திலகர், கப்பர்தே முதலிய பம்பாய்த் தேசீய தலைவர்களும் பிரதிநிதிகளும் அரவிந்தர் முதலிய வங்காளத் தேசீய தலைவர் களும் பிரதிநிதிகளும் பஞ்சாப் தேசீயத் தலைவர்களும் பிரதிநிதி களும், பாரதியார், துரைச்சாமி அய்யர், சக்கரைச் செட்டியார், ஸ்ரீனிவாஸச்சாரி முதலிய சென்னை தேசீயத் தலைவர்களும் பிரதிநிதிகளும் கூடி ஆலோசித்தோம். மறுநாள் மாலையில் சூரத்

நகரிலுள்ள ஒரு பெரிய கட்டிடத்தில் ''தேசீயவாதிகளின் மகாநாடு'' ஒன்று கூட்டி மேல் செய்ய வேண்டிய காரியங்களைப் பற்றி ஆலோசித்து முடிவு செய்வதாகத் தீர்மானிக்கப்பட்டது.

இங்குத் திலகருடைய வைதீகப் கோட்பாட்டைப் பற்றி ஒரு சில வார்த்தைகள் சொல்ல வேண்டுவது அவசியமாயிருக் கிறது. தேசீயத் தலைவர்களும் பிரதிநிதிகளும் அரவிந்தர் பங்களா மாடியில் கூடி ஆலோசித்துக் கொண்டிருந்தபோது திலகருக்கு ஒருவன் சாப்பாடு கொண்டு வந்தான். அவன் திலகரைப் பார்த்து வலப்பக்கத்திலுள்ள தனித்ததோர் அறையைச் சுட்டிக்காட்டி ''அங்கே கொண்டு போய் வைக்கட்டுமா'' என்று கேட்டான். அதற்குத் திலகர் ''தேச பக்தருள்ளும் ஜாதி வேற்றுமையுண்டா? இங்கே தானே வை'' என்றார். திலகர், கப்பர்தே, அரவிந்தர், பாரதியார், நான் முதலிய பல ஜாதிக்காரர்கள் ஒரே வரிசையாக உட்கார்ந்து சாப்பிட்டோம். இதனால் திலகரின் வைதீகக் கோட்பாடெல்லாம் தேசபக்தர்களுக்கு வெளியேதான் என்றுணர்க.

மேற்குறித்தபடி மறுநாள் மாலையில் தேசீயவாதிகளின் மகாநாடு நடந்தது. ஸ்ரீ அரவிந்தர் தலைமை வகித்தார். மேல் நடத்த வேண்டிய காரியங்களைப் பற்றிப் பல மாகாணத் தேசீயவாதிகளும் பேசினார்கள். மிதவாதிகளை விட்டுப் பிரிந்து தேசீயவாதிகள் வருஷந்தோறும் தனி மகாநாடு கூடி ஆலோசனை செய்து, சுய அரசாட்சி அடைவதற்குரிய வேலைத் திட்டங்களை வகுத்து வருஷம் முழுவதும் வேலை செய்து வரவேண்டுமென்று ஒரு தீர்மானம் செய்யப்பட்டது. அதற்காக, ஒவ்வொரு மாகாணத் திற்கும் ஒவ்வொருவர் காரியதரிசியாகத் தெரிந்தெடுக்கப்பட வேண்டுமென்றும் மற்றொரு தீர்மானம் செய்யப்பட்டது. அப் போது சில பிரதிநிதிகள் காரியதரிசிகளைத் தெரிந்தெடுப்பதில் ஒருவருடைய (Private character) அந்தரங்க ஒழுக்கத்தைப் பற்றிக் கவனிக்க வேண்டுமா, வேண்டாவா என்று திலகரைக் கேட்டனர். ஒருவருடைய அந்தரங்க ஒழுக்கம் அவருடைய இராஜீய வேலைகளைப் பாதிக்குமானால் மாத்திரம் அதைப் பற்றி கவனிக்க வேண்டுமேயன்றி, மற்றைப்படி கவனிக்க வேண்டு வதில்லை என்றார் திலகர். ஒவ்வொரு மாகாணத்திற்கும் ஒவ்வொரு தேசீயவாதி காரியதரிசியாகத் தெரிந்தெடுக்கப்பட் டனர். பம்பாய் மாகாணத்திற்குத் திலகரும், வங்காள மாகாணத் திற்கு அரவிந்தரும், சென்னை மாகாணத்திற்கு நானும் காரியதரிசி களாகத் தெரிந்தெடுக்கப் பெற்றோம். எங்கள் வேலைத் திட்டங் களும் குறிக்கப்பட்டன. பாரதியார் முதலிய தேசீயப் பிரதிநிதிகள் சென்னைக்குத் திரும்பி வந்து சேர்ந்தோம். திருவல்லிக்கேணிக் கடல்கரையிலும் மற்றும் பல இடங்களிலும் பாரதியாரும் நானும்

காங்கிரஸ் கலைக்கப்பட்டதையும், தேசீயவாதிகள் மகாநாடு ஸ்தாபிக்கப்பட்டதையும் அதன் வேலைத் திட்டங்களைப் பற்றி யும் பல உபந்நியாசங்கள் செய்தோம்.

## பாரதியார் திருநெல்வேலிக்கு வந்தது

பின்னர் நானும் எனது நண்பர்களும் தூத்துக்குடிக்கு வந்து சேர்ந்தோம். சூரத் காங்கிரஸ் உடைந்ததையும் தேசீயவாதிகள் மகாநாடு உண்டாயதையும் அதன் வேலைத் திட்டங்களையும் பற்றித் தூத்துக்குடியில் பல பிரசங்கங்கள் செய்தோம். தேசீய மகாநாட்டுக் காரியதரிசிகளையும் அவர் சகாக்களையும் கவர்ண் மெண்டார் கவனமாகக் கண்காணிக்கத் தொடங்கினர். வங்காளத் தில் அரவிந்தர் முதலியோர் மீதும், சென்னை மாகாணத்தில், என் வகையார்கள் மீதும் பம்பாய் மாகாணத்தில் திலகர் மீதும் இராஜத் துரோக கேஸ்கள் ஏற்பட்டன. என் வகையார்கள் மீது கேஸ் ஏற்பட்டவுடன் பாரதியார், ஸ்ரீனிவாஸச்சாரி முதலிய சென்னை நண்பர்கள் திருநெல்வேலிக்கு வந்து சேர்ந்தனர். பாளையங்கோட்டை சென்றரல் ஜயிலுள் விஜாரனைக் கைதிகளா யிருந்த என்னையும் எனது நண்பர் சுப்பிரமணிய சிவாவையும் பத்மநாபய்யங்காரையும் கண்டு உரையாடிக்களித்தனர். அப்போது தான் கலைக்டர் விஞ்சுக்கும் எனக்கும் நடந்த சம்பாஷணையென ''நாட்டிலெங்கும் சுதந்தர வாஞ்சையை நாட்டினாய் - கனல் - மூட்டினாய், வாட்டியுன்னை மடக்கிச் சிறைக்குள்ளே மாட்டு வேன் - வலி - காட்டுவேன்'' என்னும் தொடக்கத்துப் பாக்களையும், ''சொந்த நாட்டிற் பிறர்க்கடிமை செய்தே துஞ்சிடோம் - இனி - அஞ்சிடோம், எந்த நாட்டினும் இந்த அநீதிகள் ஏற்குமோ - தெய்வம் - பார்க்குமோ'' என்னும் தொடக்கத்துப் பாக்களையும் கவர்ண்மெண்டாரால் பிரசுரிக்கக் கூடாதென்று விலக்கப்பட்ட வேறு சில பாக்களையும் பாரதியார் பாடி மகிழ்ந்தனர். என் வகையார்கள் பேரில் கொண்டுவரப்பட்ட கேஸில் எங்கள் பக்கம் வக்கீல்களாக ஆஜராகி நடாத்திய திருநெல்வேலி வக்கீல்களான சாது கணபதி பந்துலு, கணபதி ராமய்யர், T.V. கிருஷ்ணசுவாமி அய்யர், ஸ்ரீவைகுண்டம் T.R. மகாதேவய்யர், சிவராமகிருஷ்ணய்யர் முதலிய தேச பக்தர்களு டன் சாது கணபதி பந்துலுவின் ஆபீஸ் மேடையில் பாரதியார் முதலிய சென்னை நண்பர்கள் ஒரு வாரம் வரையில் தங்கிக் கேஸின் நடவடிக்கைகள் நடந்த வேடிக்கைகளைப் பார்த்துத் தமாஷாகச் சம்பாஷணைகள் செய்து கொண்டும், பாட்டுகள் பாடிக்கொண்டும் காலத்தை உல்லாசமாகக் கழித்துக் கொண் டிருந்து சென்னைக்குத் திரும்பிச் சென்றனர்.

திருநெல்வேலியிலிருந்து பாரதியார் முதலியோர்கள் சென்னை போய்ச் சேர்ந்ததும் சென்னையில் ஸ்ரீ சுரேந்தரநாத் ஆரியா பேரில் இராஜத்துரோகக் கேஸ் தொடங்கப்பட்டது. பாரதியார் பேரிலும் ஸ்ரீனிவாஸச்சாரியார் பேரிலும் கவர்ண் மெண்டார் இராஜத்துரோகக் கேஸ் தொடங்கப்போவதாகவும், அவர்கள் ஜயில் செல்ல விரும்பவில்லையானால் புதுச்சேரிக்குச் சென்று விடும்படியும் பாரதியார் தேசிய கீதங்களில் மயங்கிக் கிடந்த கவர்ண்மெண்டு எக்ஸிக்கூட்டிவ் உத்தியோகஸ்தர் ஒருவர் பாரதியாருக்குத் தகவல் சொல்லி அனுப்பினர். சில காரணங் களால் அவர் பெயரை நான் இங்கு சொல்ல விரும்பவில்லை. சிறையுள் கிடந்து தேச சேவை செய்யாதிருப்பதினும் வேறு தேசம் சென்று தேச சேவை செய்து கொண்டிருப்பதே நலமென்று துணிந்து பாரதியார், ஸ்ரீனிவாஸச்சாரி முதலியோர் புதுச்சேரி போய்ச் சேர்ந்தனர். அங்கு அரவிந்தர் முன்னரே வந்திருந்தனர். வி.வி.சுப்பிரமணிய அய்யரும் அங்கு வந்து சேர்ந்தனர். ஓட்டப் பிடாரம் மாடசுவாமியா பிள்ளையும் அங்குப் போய்ப் புகுந்தனர். இந்திய தேசாபிமானிகள் கூட்டமொன்று புதுச்சேரியில் நிலை யாகத் தங்கிப் பத்திரிகைகள் வாயிலாகவும் வேறு வழிகளிலும் நமது தேச அரசாட்சியை மீட்டுவதற்குரிய வேலைகளைச் செய்து கொண்டிருந்தனர்.

*1912*-ம் வருஷம் டிசம்பர் மீ நான் கண்ணனூர் சென்றரல் ஜயிலிலிருந்து விடுதலையடைந்து என் குடும்பத்தோடு சென்னை வந்து சிந்தாதிரிப்பேட்டையில் தங்கியிருந்தேன். பாரதியார், ஸ்ரீனிவாஸச்சாரி முதலிய சென்னைத் தேசபக்தர் களைப் பார்க்க வேண்டுமென்ற அவாவின் மேலீட்டால் புதுச் சேரிக்குச் சென்றேன். பாரதியார் வீட்டைக் கண்டுபிடித்து அங்கு போய்ச் சேர்ந்தேன். பாரதியாரையும் அவர் மனைவி மக்களையும் கண்டு களித்தேன். பாரதியாரின் பாடல்களைக் கேட்டும், ஆடல்களைக் கண்டும் அவருடன் அடிசில் உண்டும் ஆவிநீர் குடித்துக் களித்தும் சில நாள் கழித்தேன். பாரதியாரும் நானும் எங்கள் நண்பர் அரவிந்தர் மாளிகைக்குச் சென்றோம். பலர் என்னிடம் சொன்னதுபோல அரவிந்தர் ஒரு ரிஷியாயிருக்க வில்லை; தேசபக்தராயும் தலைவராயுமே விளங்கினார். தேச அரசாட்சியை மீட்பதற்குரிய வழிகளைப் பற்றிப் பேசினோம். பழைய ஒரு வழியைத் தவிர வேறு வழியே இல்லையென்றுதான் அவரும் கூறினார். நண்பர் வி.வி.சுப்பிரமணிய அய்யர் பாரதியா ரின் வீட்டுக்குப் பலமுறை வந்து எங்களோடு சம்பாஷித்துக் கொண்டிருந்தனர். அவருடைய எளிய நடை உடை பாவனை களும், அவருடைய உள்ளும் புறமும் ஒத்த பேச்சும், அவருடைய

தேசாபிமான நிறைவும் என்னைக் கவர்ந்தன. கலைக்டர் மிஸ்டர் ஆஷ் கொலை சம்பந்தமாக நிகழ்ந்தன யாவும் அறிந்தேன். அக்கொலையைப் பற்றி எவ்விதத் தகவலும் அறியாத ஓட்டப் பிடாரம் மாடசாமிப் பிள்ளையையும் கண்டு பேசினேன். புதுச்சேரி யில் பாரதியார் முதலியோர்களுடன் நான் தங்கியிருந்த நாள்கள்.

தவலருந் தொல்கேள்வித் தன்மை யுடையர்
இகலிலர் எஃகுடையார் தம்முட் குழீஇ
நகலின் இனிதாயிற் காண்பாம் அகல்வானத்
தும்பர் உறையும் பதி

என்னும் பாவை அடிக்கடி நினைக்கவும் "உவப்பத்தலைக் கூடி உள்ளப் பிரிதல் அனைத்தே புலவர் தொழில்" என்னும் பாவின் உண்மைப் பொருளைக் காணவும் செய்தன. கடைசியாகப் பாரதியார் முதலிய உண்மை அறிஞர்களையும் உண்மைத் தேசாபிமானிகளையும் மிக வருத்தத்தோடு பிரிந்து சென்னைக்கு வந்து சேர்ந்தேன்.

## பாரதியாரைக் கடைசியாகக் கண்டது

பல வருஷங்களுக்குப் பின்னர் நான் சென்னையைச் சேர்ந்த பிரம்பூரில் வசித்துக் கொண்டிருந்தபோது ஒரு நாள் நான் திருவல்லிக்கேணி முதலான இடங்களுக்குப் போய்விட்டு இரவு சுமார் 10 மணிக்கு என் வீட்டுக்குப் போய்ச் சேர்ந்தேன். என் வீட்டுத் தார்சாவில் இருவர் படுத்துத் தூங்கிக் கொண்டிருந்தனர். என் வீட்டுள் சென்று தார்சாவில் தூங்கும் இருவர் யார் என்று என் மனைவியிடம் உசாவினேன். "உங்கள் மாமனார் பாரதி யாரும் அவருடன் வந்துள்ள சாமியார் ஒருவரும்" என்றனள் என் மனையாள். "எப்போது வந்தனர்?" என்றேன். "இரவு 8 மணிக்கு வந்தனர்" என்றாள். "இருவரும் சாப்பிட்டனரா?" என்றேன். "வந்ததும் உங்களை எங்கே" என்றனர். "பட்டணம் போயிருக்கிறார்கள்" என்றேன். "எப்போது வருவார்கள்?" என்றனர். "10 மணிக்கு வருவார்கள்" என்றேன். "எங்களுக்கு முந்திச் சோறுபோடு" என்றார். போட்டேன். இருவரும் சாப்பிட் டனர். நீங்கள் வந்தவுடன் தம்மை எழுப்பும்படி சொல்லிவிட்டுப் படுத்துக் கொண்டனர்" என்றாள். நான் என் சாப்பாட்டை முடித்துக் கொண்டு தார்சாவுக்கு வந்து "மாமா! மாமா!" என்றேன். இருவரும் எழுந்தனர். க்ஷேமம் விசாரித்தேன். க்ஷேமத்தையும் வந்த வரலாற்றையும் கூறினர் மாமா. புதுச்சேரி யில் வசித்துக் கொண்டிருந்த இந்திய நண்பர்களின் க்ஷேமமாதிய வற்றைப் பற்றி உசாவினேன். மாமா பதில் சொல்லினர். "சுவாமிகள் யார்" என்றேன். "ஒரு பெரியவர்" என்றார் மாமா.

மாமா முகத்தில் ஒரு வேறுபாட்டைக் கண்டேன்; பழைய உற்சாகத்தையும் மலர்ச்சியையும் காண்டிலேன். அவர் பேச்சும் ஒரு புது மாதிரியாயிருந்தது. அப்போது காரணம் தெரிந்திலேன். சில பேசிவிட்டுத் துயின்றோம்.

மறுநாட் காலையில் நாங்கள் எழுந்தவுடன் பாரதியார் ''இந்த சாமியாருக்கு இன்று எண்ணெய் ஸ்நானம் செய்து வைத்து வேறு வேஸ்டி கொடுக்க வேண்டுமென்று எனக்குக் கட்டளை யிட்டனர். அந்தச் சாமியார் கறுப்பு மேனியில் கால் அங்குலக் கனம் அழுக்குப் படிந்திருக்கக் கண்டேன். காலைக் காப்பி சாப்பிட்டபின் கௌபீனம் கட்டிக் கொள்ளும்படி செய்து சாமியாரின் அரை வேஸ்டியைக் களைவித்தேன். அரைஞாணில் ரூபா முடிச்சுகள் பல இருந்தன. அவற்றையெல்லாம் அவிழ்ப் பித்து வைத்துக் கொண்டு வேலைக்காரர் இருவரால் அவருக்கு எண்ணெய் ஸ்நானம் செய்வித்து அவர் ரூபாய்களுடன் வேறு வேஸ்டி கொடுத்தேன். மூவரும் சாப்பிட்டோம். சிரம பரிகாரத் தின் பொருட்டு மூவரும் படுத்துறங்கினோம். மாலை சுமார் 3 மணிக்கு அவர்களிருவரும் உல்லாசமாகப் பேசும் சத்தம் கேட்டு நான் கண் விழித்தேன். ஒரு தகர டப்பாவிலிருந்து ஒரு லேகியத்தில் ஆளுக்கு ஒரு எலுமிச்சங் காயளவு எடுத்து வாயில் போட்டனர். ''அது என்ன'' என்றேன். அது மோக்ஷலோகத்திற்கு கொண்டு போகும் மருந்து என்றார் மாமா. ''பாவிகளா! எலுமிச்சங் காயளவா?'' என்றேன். ''உனக்குப் பயந்துதான் இச்சிறிய அளவு கொள்கின்றோம்'' என்றனர் மாமா. மாமா முகத்தின் வேறுபாடுக்கு இம்மருந்துதான் காரணம் போலு மென்று கருதினேன். பல பேசியும் பல பாடியும் அன்று மாலையையும் இரவையும் மறுநாட் காலையையும் என் வீட்டில் கழித்தோம். சாமியார் சரீர கனத்திலும், லேகியம் தின்றதிலும் தவிர, மற்ற பேச்சு முதலியவற்றில் மக்காகவேயிருந்தார். அறிவில் மேதாவியாகிய நம் பாரதியாருக்கு இம்மக்கிடத்தில் எப்படிப் பற்றுண்டாயிற்றென்று அதிசயித்தேன். மறுநாள் மத்தி யானச் சாப்பாட்டுக்கு மேல் பாரதியாரின் அத்தியந்த நண்பரான ஜார்ஜ் டவுனிலிருந்த வக்கீல் S. துரைச்சாமி அய்யர் வீட்டுக்குச் சென்றோம். அய்யர் வீட்டில் இல்லை. நாங்கள் மூவரும் அய்யர் வீட்டு மாடியில் கிடந்த கட்டில்களில் படுத்துக் கண் துயின்றோம். மாலை 3 மணிச் சுமாருக்கு முதல் நாள் போலச் சாமியாரும் மாமாவும் உற்சாகமாகப் பேசும் சத்தம் கேட்டு நான் கண்விழித் தேன். முதல் நாள் போலவே இருவரும் தகர டப்பாவிலிருந்த லேகியத்தை எடுத்து வாயில் போட்டனர். மாலையில் வக்கீல் அய்யர் வந்து சேர்ந்தனர். சிறிது நேரம் அவருடன் நான் வார்த்தையாடிக் கொண்டிருந்து விட்டு மூவரிடமும் அனுமதி

பெற்றுக் கொண்டு நான் பிரம்பூர் வந்து சேர்ந்தேன். பின்னர் நான் ''சுதேசமித்திரன்'' ஆபீஸ்குப் போயிருந்த சில சமயங்களில் என் அருமை மாமாவைக் கண்டு பேசியிருக்கிறேன். கடைசியாக மாமா வானுலகம் சென்றார் என்று கேட்டு துக்கக் கடலில் ஆழ்ந்து கரையேறினேன். அவர் இவ்வுலகை விட்டுப் போய்விட்டாலும் அவருடைய தேசீய கீதங்களும் மற்றைய பாடல்களும் கதைகளும் இவ்வுலகம் உள்ள அளவும் நிலை நிற்குமென்பதில் ஐயம் இல்லை. அவருடைய பெயர் தேசாபிமானிகளுடைய சரித்திரத்தில் மட்டுமல்லாமல் கவிகளுடைய சரித்திரத்திலும் முதன்மையான இடத்தைப் பெறும். அவருடைய பாடல்களின் அருமையையும் பெருமையையும் சிறிது இயம்ப வேண்டுமென்று நினைத்தேன். ஆற்றலின்மையாலும் அவகாசமின்மையாலும் அவ்வேலையில் புகாது நின்று பாரதியாரின் பாடல்களையே நம் தேசத்து மக்கள் படிக்க வேண்டுமென்று கோருகின்றேன்.

கையெழுத்துப் படி

வ.உ.சி.யின் மைந்தர் மறைந்த திரு. வ.உ.சி. சுப்பிரமணியம் அவர்கள் தம் தந்தையார் பாரதியைப் பற்றி எழுதிய குறிப்புகளை 'வி.ஓ.சி. கண்ட பாரதி' என்ற சிறு நூலாக 1946இல் வெளியிட்டார். 1991இல் அவர் மறைவதற்குச் சில ஆண்டுகளுக்கு முன்பு, இதன் மூலக் கையெழுத்துப் படியைப் பார்வையிட்டுப் படியெடுத்துக் கொள்ள இத்தொகுப்பாசிரியர்க்கு அனுமதி வழங்கினார். மேலும், இந்தியா விடுதலை பெறுவதற்கு முன்பு அச்சிறுநூலை வெளியிட்டதால், அதில் சில மாற்றங்களைத் தாம் செய்ததாகவும், எனவே அதனை மூலப்படியில் உள்ளவாறு மறுபதிப்பிட வேண்டும் எனவும் கூறினார். அதன்படி, வ.உ.சி.யின் நினைவுக் குறிப்புகள் இங்கு வழங்கப்படுகின்றன.

கையெழுத்துப் படியில் ''ஸ்ரீ C. சுப்பிரமணிய பாரதியாரைப் பற்றிய சில குறிப்புகள். வ.உ. சிதம்பரம் பிள்ளை எழுதியது'' என்ற தலைப்பு வ.உ.சி.யின் கையெழுத்தில் காணப்படுகின்றது. மொத்தம் பதினெட்டு முழுப் பக்கத் தாளில் (தலைப் பக்கம் நீங்கலாக), மூவேறு கையெழுத்துகளில் மூலப்படி அமைந்துள்ளது. திருத்தங்களை மட்டும் வ.உ.சி. தம் கைப்படச் செய்துள்ளார். மூலப்படியில் அடிக்கோடிடப்பட்டவை தடித்த எழுத்தில் கொடுக்கப்பட்டுள்ளன. அடிக்கோடிட்டதற்குக் காரணம் புலப்படவில்லை; அதில் சீர்மையும் இல்லை.

## 'சுய்சரிதை'யிலிருந்து

அஞ்சாமை, கல்வி, அடக்கம், கருணை
எஞ்சாமல் நிரம்பிய என் வள்ளிநாயகம்
இலகுநம் தேயம் இன்புற வுழைக்குந்
திலகன், அரவிந்தன், கப்பர்டே, மூஞ்சி,
சீனிவாசன், பாரதி, செப்பரும் பிறசிலர்
நானிவண் உணர்ச்சியால் நட்ட நண்பினர்.

வ.உ.சி. சுயசரிதை, *1946*

வ.உ.சி. சிறையிலிருந்தபோது, பரலி சு. நெல்லையப்பர் கேட்டுக் கொண்டதற்கிணங்க முழுவதும் அகவற்பாவினால் எழுதப்பெற்ற சுயசரிதையில் மேற்காணும் குறிப்புக் காணக் கிடக்கின்றது. இது எழுதப்பட்ட காலம் 1912க்கு முன்பு. *1936* நவம்பரில், வ.உ.சி.யின் மறைவையொட்டி பரலி. நெல்லையப்பரின் 'லோகோபகாரி' வார இதழில் இச்சுய சரிதை தொடராக வெளிவந்தது. அதன் பின்னர், 1946இல் வ.உ.சி. சுப்பிரமணியம் அவர்கள் இதனை நூலாக்கிப் பதிப்பித்தபோது இக்குறிப்பு வெளியான பகுதிக்குக் கொடுத்த தலைப்பு, 'மாண்பு நிறைந்த நண்பர்கள்'.

# 'சிவநேசனு'க்குக் கடிதம்

பலவான்குடி 'சிவநேசன்' ஆசிரியர் அவர்களுக்கு,

ஐயா,

சிவநேசனாகவோ, தமிழ்நேசனாகவோ, அவ்விருபொருள் நேசனாகவோ என்னை மதித்து என்னிடமிருந்து யாதொரு கைமாறும் கருதாது, 'சிவநேசன்' வாரந்தோறும் என்னைக் காணும்படி நீங்கள் செய்ததற்காக யான் உங்கள்பால் நன்றி செலுத்தக் கடமைப் பட்டுள்ளேன்.

'சிவநேசன்' தமிழ் நடையைப் படிக்குந்தோறும் யான் அடையும் இன்பத்திற்கு அளவேயில்லை. அவ்வின்பமே 'சிவ நேசனை'ப் பற்றிப் பின்வரும் வரிகளை எழுதும்படி தூண்டிற்று.

எனது நண்பர் C. சுப்பிரமணிய பாரதியார் இவ்வுலகை நீத்த பின்னர் யான் இனிய தமிழ் நடைக் குறிஞ்சியைக் காணாது, கடிய தமிழ் நடைப் பாலையில் அமர்ந்து வருந்திக் கொண்டிருந் தேன். அவ்வருத்தத்தையெல்லாம் உங்கள் 'சிவநேசன்' நீக்கி விட்டது

தமிழ்மொழி நடையின் இனிமையை யாரேனும் காண விரும்புவாராயின், அவர் 'சிவநேச'னைப் படிக்கவேண்டுமெனத் தெரியப்படுத்திக் கொள்கிறேன்.

'சிவநேச'னில் சிவப்பொருளைக் கண்டிலீரோ என வின வின், அகத்தின் ஆட்டத்தையே எப்போழ்தும் சூழக்கண்டு கொண்டிருக்கும் யான் சிவப்பொருளை எங்ஙனம் காணுதல் கூடும்?

சிற்சில சமயங்களில் 'சிவநேச'னில் காணப்படும் பொருள் கள் எனது உள்ளத்தைக் கவர்கின்றன; உருக்குகின்றன. அவற்றில் ஒன்று ஆவணி மீ கஉ-வ வெளிவந்த 'சிவநேசன்' அ-ம் பக்கத்திலுள்ள ஸ்ரீ சுவாமி விவேகானந்தர் வாக்கு. என் போன்ற சீர்திருத்தக்காரருக்கு அஃது ஒப்புயர்வற்ற ஓர் மருந்தாக விளங்கு கின்றது. அதனை இச்சமயம் வெளியிட்டதற்காக யான் பேருவகை யெய்துகின்றேன்.

கோவிற்பட்டி
*29-8-'28*

உண்மையுள்ள
வ.உ.சிதம்பரம் பிள்ளை

சிவநேசன், விபவ, ஆவணி *19* (செப்டம்பர் *1928*)

# வ.உ.சி. மறைந்தபொழுது

The Secretaries, Tamil Nadu Congress Committee, write-

The death of Mr. V.O. Chidambaram Pillai is indeed an irreparable loss to the country. One is really struck by the report that, even in his deathbed, the great patriot longed to hear the songs of Bharati, and was expressing his firm belief that India would get Swaraj early. The great sacrifices of the departed patriot and his valuable services to the country cannot be forgotten by the people of Tamil Nadu.

We earnestly appeal to the public to liberally contribute to the Chidambaram Pillai Purse Fund, which should give the needed help to his children in this, the hour of their distress.

*The Hindu,* November 20, 1936

லோகோபகாரி, பிப்ரவரி 28, 1937 இதழில் வெளியான வ.உ.சி. சுயசரிதையில் பாரதி பற்றிய குறிப்பு பயின்றுவரும் பகுதி.

அஞ்சாமை கல்வி அடக்கம் கருணை
எஞ்சாமல் நிரம்பிய என்வள்ளி நாயகம்
இலகுகம் தேயம் இன்புற உழைக்குந்
திலகன், அரவிந்தன், சுபர்தி, மூஞ்சி,
சீனிவாசன், பாரதி, செப்பருட் பிறசிலர்

இந்தியா, பிப்ரவரி 20, 1907 இதழில் சுதேசிக் கப்பல் கம்பெனி பற்றிய கட்டுரை

**Swadesi Steam**
**Navigation Company**
**Tuticorin**

தூத்துக்குடி சுதேசிய
ஸ்டீமர் கம்பெனி

தூத்துக்குடியை தென் இந்தியாவின்
பாரிஸால் என்று கூறலாம். அதிலும்மு
க்கியமாக, ஸ்ரீ. வி. ஓ. சிதம்பரம் பிள்ளை
சுதேசியத்தின் பொருட்டெடுத்துவரும்
முயற்சிகள் மிகவும் வியந்து பேசுதற்
குரியன. ஸ்டீமர்கள் விலைக்கு வாங்குவ
திலே ஆரம்பத்தில் [illegible] பட்டிரு
க்கும் கம்பெனியாருக்கு [illegible]
ஏற்பட்ட [illegible] அதன்பேரில் [illegible] கம்
பெனியின் [illegible] யாகிய ஸ்ரீ
V.O. சிதம்பரம்பிள்ளை எவ்வளவு சிரமங்
கொண்டாலும் [illegible] வாங்காமல்
திரும்புவதில்லை என்று மனவுறுதி
யுடன் பம்பாய்க்குப் புறப்பட்டனா
ராம். [illegible]
கம் நிறைவேறி விட்டது பற்றி மிக
வும் சந்தோஷமடைகின்றோம். செ
ன்னை சுதேசி [illegible]க்கு
ஸ்ரீ. சிதம்பரம்பிள்ளை பின்வருமாறு எ
ழுதியிருக்கின்றார்

## Swadeshi Steamer Company

## ஓர் புதிய சுவதேசிய புகைக் கப்பல் கம்பெனி

தூத்துக்குடியிலே சுதேசிய முயற்சியை மேற்கொண்டு நடத்தி வரும் நம்மவர்கள் இப்போது புதிதாக 'சுதேசிய ஸ்டீமர் கம்பெனி' (Swadeshi Steamer Navigation Company) என ஒன்று ஸ்தாபிக்கக் கருதியிருப்பதாக முன்னமே அறிவித்திருக்கின்றோம். இப்போது அந்த கம்பெனியின் ஆரம்பப் பிரயத்தனங்கள் தொடங்கிவிட்டன. அதன் கொள்முதல் ரூ.5,00,000. இவ்வைந்து லக்ஷம் ரூபாயும் பங்கொன்று 25 ரூ. வீதம் 20,000 பங்குகளாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றது. இக்கம்பெனியில் பங்குகள் எடுத்துக் கொள்வோரெல்லாம் இந்தியர்களாகவாவது, லங்கைத் தீவினரா வது, பர்மா தேசத்தவராவது அல்லது ஜப்பானியராவது இருத்தல் வேண்டும். கம்பெனியின் நடவடிக்கைகளைப் பார்த்து வரும் பொருட்டு மெஸ்ஸர்ஸ் எ.ஆர்.ஹாஜி பக்கீர் முகம்மது செயிட் அண்டு ஸன்ஸ் கம்பெனியார் காரியதரிசிகளாக நியமிக்கப்பட் டிருக்கின்றார்கள். ஆனரபில் குருசுவாமி அய்யரவர்கள், எம். கிருஷ்ண நாயரவர்கள், பாரிஸ்டர் பால் பீடர் பிள்ளையவர்கள், ஓ.வி.சிதம்பரம் பிள்ளையவர்கள் என்போரே லீகல் அட்வைசர் கள் (legal advisers). நேஷனல் பாங்க் ஆப் இந்தியா (National Bank of India) இக்கம்பெனியாரது பாங்கர்கள். கம்பெனியினது ரிஜிஸ்தர் இருப்பிடம் தூத்துக்குடியில் கிரேட் காடன் ரோட்டில் இருக்கின்றது.

தூத்துக்குடிக்கும், கொழும்புக்கும் வியாபாரத்தையும் பிரயா ணத்தையும் இலகுப்படுத்துவதும், போக்குவரத்தை சரசமாக்கிடு வதுமே இந்தக் கம்பெனியாரது முக்கிய கருத்து. கம்பெனியின் மெம்பர்கள் அதாவது பங்காளிகள் கம்பெனியின் நன்மையைக் கருதி தம்மாலியன்றதைச் செய்யவேண்டுமென்பது அவசியம். தாம் போகும்பொழுது கம்பெனியார் கப்பல்களிலேயே பிரயா ணம் செய்ய வேண்டும். இவ்விதமாய் பங்காளிகள் ஒருங்கே சேர்ந்து தமது கம்பெனியின் நன்மைத் தேட முயற்சி செய்ய வேண்டுமென்பது மிக்க நன்மை பயக்கக் கூடியதே. கம்பெனி யில், ஜப்பானியர் பங்கெடுத்துக் கொள்வதில் நமக்கு மிகுந்த உபயோகமிருக்கின்றது. பங்கெடுத்துக் கொள்வதில் மாத்திரமல் லாமல் அவர்கள் நம்மவரில் சிலருக்கு கப்பல் வேலையைக் கற்பிப்பார்கள். கம்பெனியினது பங்குகளில் 8,000 பங்குகள் ஹாஜி மகம்மது பகீர் செயிட் அண்டு ஸன்ஸ் எடுத்துக் கொண்டதாகத் தெரிய வருகிறது. பாக்கியாயிருக்கும் பங்குகளில்

டைரெக்டர்கள் 2,000 பங்குகள் எடுத்துக் கொண்டால் பாக்கி 10,000 பங்குகள் தானிருக்கின்றன. இவற்றில் நம்மவரில் அநேகர் பங்குகள் எடுத்துக் கொள்வாரென்பதற்கு சந்தேகமில்லை. இதனை ஏற்படுத்திய தேசாபிமானிகள் சிறிதேனும் புறங்காட்டாமல் தைரியத்துடன் முன்சென்று தம் காரியத்தைச் செய்து முடிப்பாரென்றே நம்புகின்றோம்.

இந்தியா, செப்டம்பர் 1, 1906

## சுதேசீய ஸ்டீம் நாவிகேஷன் கம்பெனி

•

தூத்துக்குடிக்கும் கொழும்புக்குமிடையே ஸ்டீமரோட்டுவ தற்காக ஸ்தாபிக்கப்பட்டிருக்கும் மேற்படி சுதேசீய கம்பெனி 16-ம் தேதியன்று ரெஜிஸ்டர் செய்யப்பட்டது. பங்கொன்றுக்கு 25 ரூபாய் வீதம் 40,000 பங்குகள் சேர்ந்து 2 லக்ஷம் ரூபாய் முதலுடன் இந்தக் கம்பெனி ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது.

பங்காளிகளனைவரும் ஆசியா கண்டத்தவர்களாகவே இருக்க வேண்டுமல்லாது ஐரோப்பியர்களிடமிருந்து பங்குகள் பெற்றுக் கொள்ளப்படமாட்டா.

இந்தக் கம்பெனியின் பிரெஸிடெண்ட் மிஸ்டர் பாண்டித் துரைத் தேவர் (பாலவனத்தம் ஜமீன்தார்). மெஸர்ஸ் ஹாஜி பகீர் மகமது சேட் கம்பெனியாரே செக்ரடெரிகள். அஸிஸ் டெண்ட் செக்ரிடெரியாக தூத்துக்குடி வக்கீல் மிஸ்டர் சிதம்பரம் பிள்ளை நியமிக்கப்பட்டிருக்கிறார். தூத்துக்குடி நேஷனல் பாங்கி யாரே இந்தக் கம்பெனியின் பொக்கிஷதாரராவார்கள். இவர் களின் ஆபீஸ் தூத்துக்குடி பெரிய காட்டன் ரோட் 85-ம் இலக்கத்தில் இருக்கின்றது.

டைரக்டர்களிலே ஒரு கோடீசுரப் பிரபுவும் ஒரு ஜமீந்தாரும், மதிப்புக் கொண்ட 13 பாங்கர்களும் வர்த்தகர்களுமிருக்கிறார்கள். பங்குகளின் பொருட்டு அப்ளிகேஷன்கள் வந்து குவிந்த வண்ண மாயிருக்கின்றன வென்பதறிந்து சந்தோஷமடைகிறோம்.

இந்தியா, அக்டோபர் 20, 1906

# Swadesi Steam Navigation Company Tuticorin

## தூத்துக்குடி சுதேசிய ஸ்டீமர் கம்பெனி

தூத்துக்குடியை தென்னிந்தியாவின் பாரிஸால் என்று கூறலாம். அதிலும் முக்கியமாக ஸ்ரீ வி.ஓ. சிதம்பரம் பிள்ளை சுதேசியத்தின் பொருட்டு எடுத்துவரும் முயற்சிகள் மிகவும் வியந்து பேசுதற்குரியன. ஸ்டீமர்கள் விலைக்கு வாங்குவதிலே ஆரம்பத்தில் மேற்கூறப்பட்டிருக்கும் கம்பெனியாருக்குச் சிறிது சிரமம் ஏற்பட்டது. அதன்பேரில் ஷை கம்பெனியின் துணைக் காரியதரிசியாகிய ஸ்ரீ V.O. சிதம்பரம் பிள்ளை எவ்வளவு சிரமங் கொண்டேனும் கப்பல்கள் வாங்காமல் திரும்புவது கிடையா தென்ற மனவுறுதியுடன் பம்பாய்க்குப் புறப்பட்டனராம். கடைசி வரை இவர் மனநோக்கம் நிறைவேறிவிட்டது பற்றி மிகவும் சந்தோஷமடைகின்றோம். சென்னை 'சுதேசமித்திரன்' பத்திரி கைக்கு ஸ்ரீ சிதம்பரம் பிள்ளை பின்வருமாறு எழுதியிருக்கின்றார்:

''நமது சுதேசீய ஸ்டீமர் நேவிகேஷன் கம்பெனி லிமி டெட்க்கு சென்ற டிசம்பர் மாதம் 22-ந் தேதியில் கிரையத்துக்கு வாங்கப் பெற்ற ஸ்டீமர், நிகழும் ஜனவரி மாதத்தில் தூத்துக்குடி வந்து சேருமென சுதேச பத்திரிகைகளில் கூறியிருந்தோம். ஆனால் ஸ்டீமரின் சொந்தக்காரர் ஸ்டீமரை புதுப்பித்து நமக் கனுப்ப வேண்டுமெனக் கருதி, ஸ்டீமரை செப்பனிடுங் களத்துக் கனுப்பி ஸ்டீமரில் சில வேலைகள் செய்த நிமித்தமாக ஸ்டீமர் முன்குறித்த தேதியில் ஐரோப்பாவை விட்டுப் புறப்படவில்லை. இப்பொழுது ஸ்டீமரின் வேலைகளெல்லாம் முடிந்துவிட்டன வென்றும், ஸ்டீமர் வருகிற பிப்ரவரி மாதம் 4-ந் தேதியில் ஐரோப்பாவினின்றும் புறப்பட்டு மணி 1 ½க்கு 12 அரை மைல் விரைவில் பம்பாய்க்கு பிப்ரவரி மாதம் முடிவுக்குள் வந்து சேருமென்றும் ஸ்டீமரின் சொந்தக்காரர்களுக்கு தந்திகளும் நிருபங்களும் வந்திருக்கின்றன. நிகழும் ஜனவரி மாதம் 24-ந் தேதியில் கிரையத்துக்கு வாங்கப் பெற்ற ஸ்டீமரும் இன்னும் இரண்டு தினங்களில் கிரையத்துக்கு வாங்கப் பெறும் இரண்டு ஸ்டீம் லாஞ்சுகளும் பிப்ரவரி மாதம் 10-ந் தேதிக்குள் ஐரோப் பாவை விட்டுப் புறப்பட்டு, பிப்ரவரி மாதம் முடிவுக்குள் பம்பாய் வந்து சேரும். மார்ச்சு மாதம் முதல் கம்பெனியின் ஸ்டீமர்கள் தூத்துக்குடிக்கும், கொழும்புக்கும் தினசரி நடை பெறும் ஸ்டீமர்களுடையவும், ஸ்டீம் லைஞ்சுகளுடையவும் பெயர்களையும் இருப்பிடங்களையும் குறித்துத் தற்காலஞ் சொல்லாதிருத்தல் நலமென்று தோன்றியதாக இதுகாறும்

அவைகளைப் பத்திரிகைகளில் வெளிப்படுத்தாது விட்டனம். இன்னும் சில தினங்களில் ஸ்டீமர்கள், ஸ்டீம் லாஞ்சுகள் சம்பந்தமான யாவற்றையும் நமது ''மித்திரனில்'' வெளிப்படுத்தக் காத்துக் கொண்டிருக்கின்றோம்.''

இந்தியா, பிப்ரவரி 2, 1907



இந்தியா, மே 25, 1907 இதழில் வெளியான கருத்துப்படம்.

# இந்தியா.

சனிக்கிழமைதோறும் வெளியாகும்.

[பு 2 [illegible] வைகாசி மீ 12உ மே [illegible] 1907 [illegible] 3]



# The Illustration
## சித்திரம்

''சுதேசியக் கப்பல் வந்தே மாதரக் கொடியுடன் வருதல், இந்திய ஜனங்களின் மகிழ்ச்சி.''

தூத்துக்குடி ஸ்வதேசீய ஸ்டீம் நேவிகேஷன் கம்பெனியார் ஸ்டீமர்கள் கொண்டு வந்திருக்கும் மங்களகரமான செய்தியைக் கருதி நாம் ''சுதேசிக் கப்பல்கள்'' என்ற சித்திரம் பதிப்பித்திருக்கின்றோம். தூத்துக்குடியாரின் அரிய முயற்சிக்கு நமது நாட்டிலுள்ளோர் அனைவரும் பொருளாலும், வாக்காலும் வேறுவகையாலும் துணைபுரியக் கடமைப் பட்டிருக்கிறார்களென்பதை இங்கே வலியுறுத்துகின்றோம்.

இந்தியா, மே *25, 1907*

*முன் பக்கத்திலுள்ள கருத்துப்படத்துக்கு ஆசிரியப் பகுதியில் பாரதியால் எழுதப்பட்ட விளக்கம் இது.*

# புதிய சுதேசிக் கப்பல்

தூத்துக்குடி சுதேசிக் கப்பற் கம்பெனியைச் சேர்ந்த கப்பல்களிரண்டுள் ஒன்றாகிய 'காலியா' இப்போது தூத்துக்குடிக் கும் கொழும்புக்கும் ஓடிக் கொண்டிருப்பது நேயர்களறிந்த விஷயம். மற்றொன்றாகிய 'லாவோ' சென்ற செவ்வாய்க்கிழமை யன்று தூத்துக்குடி வந்து சேர்ந்து நேற்று தினம்தான் கொழும்புக் குப் போயிருப்பதாகத் தந்தி கிடைத்திருக்கின்றது. அனேக ஜனங்கள் வந்து பார்த்து மிகுந்த திருப்தியடைந்தார்களாம். *42* முதல் வகுப்புப் பிரயாணிகளுக்கும், *24* இரண்டாம் வகுப்புப் பிரயாணிகளுக்கும், *1300* சாதாரணப் பிரயாணிகளுக்கும் போது மான வசதிகளிருந்தன. இது தவிர *4,000* மூட்டை சரக்குகளுமேற்ற லாமாம். வெகு காலமாய்ப் புத்திர பேறின்றி அருந்தவம் செய்து வந்த பெண்ணொருத்தி ஏக காலத்தில் இரண்டு புத்திரர்களைப் பெற்றால் எத்தனை அளவற்ற ஆனந்தமடைவாளோ அத்தனை ஆனந்தத்தை நமது பொது மாதாவாகிய பாரத தேவியும் இவ்விரண்டு கப்பல்களையும் பெற்றமைக்காக அடைவாளென் பது திண்ணமே. ஸ்ரீ V.O. சிதம்பரம் பிள்ளையும் அவருடனின் றுதவிய் மற்ற நண்பர்களும் தாம் பிறந்து வளர்ந்த தாய்நாட் டிற்குச் செய்ய வேண்டிய கடமைகளைச் செய்து விட்டார்கள்.

இத்துடன் நாம் ஒரு விஷயத்தைப் பற்றி கேட்க விரும்புகின் றோம். அதாவது இந்தக் கப்பல்களுக்கு இப்பொழுது கொடுக்கப் பெற்றிருக்கும் பெயர்களே எப்பொழுதுமிருப்பனவா? அல்லது சுதேசியத்துக்கிணங்க வேறு பெயர்கள் கொடுக்கப்படுமா? நமது கொள்கைகளுக்கிணங்கப் பெயர்களை மாற்றிக் கொள்வது பொருத்தமென்றே எண்ணுகிறோம். இவ்வித அபிப்பிராயம் கம்பெனியார்களுக்கிருக்கும் பக்ஷத்தில் 'சிவாஜி' 'தாதாபாய்' 'பாலகங்காதர' அல்லது 'திலகர்', 'கைக்குவார்' இந்த நான்கு பெயர்களுள் இரண்டை எடுத்துக் கொள்ளலாமென்று பிரேரேபிக் கின்றோம். எடுத்துக் கொண்டவை போக மீந்த பெயர்களை இரண்டு புகை வள்ளங்களுக்குமிடலாம்.

இந்தியா, சூன் *15, 1907*

## Our Congress Tour
## எங்கள் காங்கிரஸ் யாத்திரை

சென்னைப் பட்டணத்து சென்ட்ரல் ஸ்டேஷனிலிருந்து 21-ம் தேதி சனிக்கிழமையன்று மாலை சென்னைப் பட்டணத்துப் புதிய கட்சிப் பிரதிநிதிகளிலே சுமார் 30 பேர் புறப்பட்டோம். தஞ்சாவூர் கே. ராமஸாமி அய்யர், தூத்துக்குடி ஸ்ரீ சிதம்பரம் பிள்ளை, சென்னைப் பட்டணத்திலிருந்து ஸ்ரீ சக்கரைச் செட்டி, பி.ஏ., பி.எல்., ஸ்ரீ துரைசாமி அய்யர், எம்.ஏ., பி.எல்., ஸ்ரீ சங்கர நாராயணய்யர், ஸ்ரீ வெங்கடரமண ராவ், ஸ்ரீ யதிராஜ் சுரேந்திரநாத், நான் முதலியவர்களும், திருவல்லிக்கேணியிலிருந்து சில பிரபுக்களும் வெளியூர் கனவான்கள் சிலரும் எங்கள் கூட்டத்திலே சேர்ந்திருந்தனர்.

... திங்கட்கிழமை காலை, பம்பாய் நகரத்தில் வந்திறங்கினோம். ரெயில்வே ஸ்டேஷனுக்கருகேயுள்ள 'ஸர்தார் கிரகம்' என்ற ஒரு வசதியிலே கொண்டு எங்களை ஸ்ரீ வி.ஓ. சிதம்பரம் பிள்ளை இறக்கி விட்டார்.

அவர் வியாபார சம்பந்தமாக அடிக்கடி பம்பாய்க்கு வந்து பழக்கமுடையவராதலால், எங்களுக்குக் காண்பித்த வசதி மிகவும் நல்லதாக அமைந்திருந்தது...

□ □ □

... திலகரைச் சுற்றி நின்று அவருக்கு ஹானி வராமல் பாதுகாத்த வீரர்களின் கூட்டத்திலே சேர்ந்திருந்த சென்னை பிரதிநிதிகளிலே இரண்டு பேருக்குப் பலமான அடிபட்டது. இன்னும் எத்தனையோ பிரதிநிதிகள் பலமான அடியுண்டும் காயப்பட்டும் விழுந்தனர். ஆனால் தமக்கு எத்தனை அடிபட்ட போதிலும் திலகரைக் காக்க வேண்டுமென்று அசையாமல் நின்ற இந்தப் பிரதிநிதிகளின் திடத் தன்மையை எண்ணும் போது உடல் புல்லரித்து மிகுந்த மகிழ்ச்சியுண்டாகிறது. பஞ்சாப் க்ஷத்திரிய ரத்தினமாகிய ஸ்ரீ பகத் என்பவர் தமது இரண்டு கைகளே ஆயுதமாகக் கொண்டு போலீஸாரின் அடிகளையும், நிதானஸ்தர்கள் வீசிய நாற்காலிகளையும் தாங்கிய வீரத் தன்மை சொல்லுந் தரமன்று. நிதானக் கட்சித் தலைவர்கள் கலக மூட்டிவிட்டுப் பின்வாயில் வழியாகத் தமது பிராணன் கற்கண்டாக நினைத்துத் தப்பியோடி விட்டார்கள். உயர்ந்த பட்டதாரிகளும் கல்விமான்களும், ஸ்ரீமான்களுமாகிய சில பிரதிநிதிகளைப் போலீஸார் கைதிகளாகப் பிடித்துச் சென்று விட்டார்களென்று வதந்தியுண்டாயிற்று.

27-ம் தேதி மாலை எங்கள் கூடாரத்திலேயிருந்த குழப்பமும் பரபரப்பும் வருணித்து முடியத்தக்கவையன்று. ''தூத்துக்குடிச் சிதம்பரம் பிள்ளை யெங்கே?'' என்று ஒரு நண்பர் என்னிடம் மஹா ஆத்திரத்தோடு வந்து கேட்டார். ''ஆஹா, அவரைத் தவறிவிட்டல்லவோ வந்து விட்டோம்?'' என்று நான் நினைத்து வருத்தமடைந்தேன். காங்கிரஸ் பந்தலிலே பெரிய மீசைகளும் ''புஸ்தி''களும் வைத்துக் கொண்டு தென்னாட்டில் (திருப்பூரில் என்று ஞாபகம்) வந்து நெடுநாளாக வர்த்தகத் தொழில் நடத்திவரும் ஒரு ஹிந்துஸ்தானி ''லாலா'' சில போலீஸாரை அழைத்துக் கொண்டு வந்து, என்னையும், ஸ்ரீ சிதம்பரம் பிள்ளையையும் வேறு சிலரையும் அப்போலீஸாரிடம் காண் பித்து, ''இவர்களெல்லாம் புதிய கட்சியார்கள். இவர்களை அரெஸ்ட் செய்யும்'' என்று சொல்லியது என் காதில் பட்டது. ஆனால் அந்த சமயத்தில் போலீஸார் பிரசங்க மேடையின் மேலிருந்த ஆரவாரத்தை நோக்கிச் சென்று விட்டார்கள். எங்களைக் கவனிக்கவில்லை. அப்பால் பந்தலில் கலவரம் அதிகப்படவே நாங்கள் ஒருவரிலொருவர் பிரிந்து போய் இன்னார் இன்ன இடமிருக்கிறார்களென்று தெரிந்து கொள்ள முடியாமல் போய்விட்டது.

ஆதலால் ஒரு வேளை போலீஸார் பின்னிட்டு ஸ்ரீ சிதம்பரம் பிள்ளை, ஸ்ரீ துரைசாமி அய்யர், சுரேந்திரநாத் யதிராஜ், திருவல்லிக்கேணி கிருஷ்ணமாச்சாரி முதலியவர்களைப் பிடித்துக் கொண்டு போயிருக்கக் கூடும் என்ற சந்தேகம் எனக்கு உண்டாயிற்று. போலீஸார் பிடித்துக் கொண்டு போய் எனது நண்பர்களுக்கு எவ்விதமான தீங்கும் செய்ய முடியாது என்பதை நான் அறிவேன்; என்றபோதிலும் மனதிலே ஆத்திரம் பொறுக்க முடியவில்லை. அவர்களைக் கண்டுபிடிக்க வேண்டுமென்று இடத்துக்கிடம் சுற்றிப் பார்த்தேன். எங்கும் அகப்படவில்லை. நாகப்பூர் பிரதிநிதிகளின் கூடாரத்திலே, ஸ்ரீமான் திலகர் முதலிய வர்கள் வந்து தாமதிப்பதாகத் தெரிந்தது. மேத்தாவின் போலீ ஸாரும் குண்டர்களும் போய் நமது மஹரிஷியை நெருங்காத வண்ணம் கூடாரத்தைச் சூழ்ந்து, சுதேசியப் பிரதிநிதிகள் காவல் காத்துக் கொண்டிருந்தார்கள். அவர்களிடம் கேட்டுக் கொண்டு அந்தக் கூடாரத்துக்குள்ளே ஸ்ரீ சிதம்பரம் பிள்ளை முதலியவர்கள் இருக்கக் கூடுமென்று போய்ப் பார்த்தேன். அங்கும் இல்லை. பிறகு அங்கிருந்து வெளியேறி எங்கள் வசதிக்கு வந்தபோது யதிராஜ், கிருஷ்ணமாச்சாரி இருவரையும் கண்டேன். சிதம்பரம் பிள்ளை, துரைசாமி அய்யர் இரண்டு பேரும் காங்கிரஸ் பந்தலுக்கு வெளியே வந்துவிட்டதாகவும், அவர்களுக்கு எவ்வித மான சங்கடமும் நேரிடவில்லையென்றும், அவர்களைத் தாம்

நேரிலே கண்டதாகவும் ஒருவர் சொன்னார். எங்கள் மனம் ஒருவாறு அமைதியடைந்தது...

பாரதி புதையல் பெருந்திரட்டு
பதிப்பாசிரியர்: ரா.அ. பத்மநாபன்

**சூரத் காங்கிரஸ் மாநாட்டிலிருந்து திரும்பியவுடனே, 1908ஆம் ஆண்டின் தொடக்கத்தில் 'எங்கள் காங்கிரஸ் யாத்திரை' என்ற சிறுநூலைப் பாரதியார் எழுதி வெளியிட்டார். அதனை ரா.அ. பத்மநாபன், தமது 'பாரதி புதையல்' தொகுதியில் மறுபதிப்புச் செய்துள்ளார். பின்னர், அது 'பாரதி புதையல் பெருந்திரட்டு' என்ற பெருநூலிலும் இடம் பெற்றது. அதிலிருந்து வ.உ.சி. பற்றிய குறிப்புகள் தொகுக்கப்பட்டு இங்குத் தரப்பட்டுள்ளன. சூரத் மாநாடு பற்றி வ.உ.சி. எழுதியவை இந்நூலின் முதற்பகுதியில் காண்க. மேலும், திலகரைப் பற்றி வ.உ.சி. ஆங்கிலத்தில் எழுதிய நினைவுக் கட்டுரையிலும் இது பற்றிக் குறிப்புகள் உண்டு. அக்கட்டுரை இந்நூலின் தொகுப்பாசிரியரால் தமிழில் பெயர்க்கப்பட்டுள்ளது ('நாவாவின் ஆராய்ச்சி' (26), சனவரி, 1989).**

# கலெக்டர் வின்ச்
# ஸ்ரீ சிதம்பரம் பிள்ளைக்குச் சொல்லுதல்

('நந்தன் சரித்திர'த்திலே ஆண்டை நந்தனுடைய சிதம்பர வாஞ்சையை மற்றப் பறையர்கள் வந்து சொல்லக் கேட்டு மஹா கோபங்கொண்டு நந்தனை நோக்கி, 'சேரிமுற்றுஞ் சிவபக்தி பண்ணும்படி விட்டையாம் அடியிட்டையாம்'' என்பது முதலான வார்த்தைகள் கூறிப் பயமுறுத்துகிறான். அதன் குறிப்பைத் தழுவித் திருநெல்வேலி ஜில்லா கலெக்டராகிய வின்ச், ஸ்ரீ சிதம்பரம் பிள்ளைக்குக் கூறியதாகப் பின்வரும் கண்ணிகள் எழுதப்பட்டுள்ளன.)

தண்டகம் - ஆதி தாளம்

சேரிமுற்றும் சிவபக்தி பண்ணும்படி
விட்டையாம் - அடி - யிட்டையாம்
(என்ற வர்ணமெட்டு)

1. நாட்டிலெங்கும் சுதந்திர வாஞ்சையை
நாட்டினாய் - கனல் - மூட்டினாய்
வாட்டி யுன்னை மடக்கிச் சிறைக்குள்ளே
மாட்டுவேன் - வலி - காட்டுவேன்.
(நாட்டி)

2. கூட்டங் கூடிவந் தேமா தரமென்று
கோஷித்தாய் - எமைத் - தூஷித்தாய்
ஓட்ட நாங்க ளெடுக்க வென்றே கப்பல்
ஓட்டினாய் - பொருள் - ஈட்டினாய்.
(நாட்டி)

3. கோழைப்பட்ட ஜனங்களுக் குண்மைகள்
கூறினாய் - சட்ட - மீறினாய்
ஏழைப் பட்டிங் கிறத்த லிழிவென்றே
யேசினாய் - வீரம் - பேசினாய்.
(நாட்டி)

4. அடிமைப்பேடிகள் தம்மை மனிதர்கள்
ஆக்கினாய் - புன்மை - போக்கினாய்
மிடிமை போதும் நமக்கென்றிருந்தோரை
மீட்டினாய் - ஆசை - யூட்டினாய்.
(நாட்டி)

5. தொண்டென் றேதொழி லாக்கொண் டிருந்தோரைத்
தூண்டினாய் - புகழ் - வேண்டினாய்
கண்ட கண்ட தொழில்கற்க மார்க்கங்கள்
காட்டினாய் - சோர்வை - யோட்டினாய். (நாட்டி)

6. எங்கு மிந்த ஸ்வராஜ்ய விருப்பத்தை
ஏவினாய் - விதை - தூவினாய்
சிங்கம் செய்யுந் தொழிலைச் சிறுமுயல்
செய்யவோ - நீங்கள் - உய்யவோ?
(நாட்டி)

7. சுட்டு வீழ்த்தியே புத்தி வருத்திடச்
சொல்லுவேன் - குத்திக் - கொல்லுவேன்
தட்டிப் பேசுவோ ருண்டோ? சிறைக்குள்ளே
தள்ளுவேன் - பழி - கொள்ளுவேன்.
(நாட்டி)

## கலெக்டர் வின்சுக்கு
## ஸ்ரீ சிதம்பரம் பிள்ளை சொல்லிய மறுமொழி

சொந்த நாட்டிற் பரர்க்கடிமை செய்தே
துஞ்சிடோம் - இனி - யஞ்சிடோம்
எந்த நாட்டினு மிந்த அநீதிகள்
ஏற்குமோ? - தெய்வம் - பார்க்குமோ? (1)

வந்தே மாதர மென்றுயிர் போம்வரை
வாழ்த்துவோம் - முடி - தாழ்த்துவோம்
எந்த மாருயி ரன்னையைப் போற்றுதல்
ஈனமோ? - அவ - மானமோ? (2)

பொழுதெல்லா மெங்கள் செல்வங்கொள்ளை கொண்டு
போகவோ? - நாங்கள் - சாகவோ?
அழுதுகொண் டிருப்போமோ? ஆண்பிள்ளைகள்
அல்லமோ? - உயிர் - வெல்லமோ? (3)

நாங்கள் முப்பதுகோடி ஜனங்களும்
நாய்களோ? - பன்றிச் - சேய்களோ?
நீங்கள் மட்டு மனிதர்க ளோவிது
நீதமோ? - பிடி - வாதமோ? (4)

பார தத்திடை யன்பு செலுத்துதல்
பாபமோ? - மனஸ் - தாபமோ?
கூறு மெங்கள் மிடிமையைத் தீர்ப்பது
குற்றமோ? - இதிற் - செற்றமோ? (5)

ஒற்றுமை வழி யொன்றே வழியென்ப
தோர்ந்திட்டோம் - நன்கு - தேர்ந்திட்டோம்
மற்று நீங்கள் செய்யுங்கொடு மைக்கெலா
மலைவுறோம் - சித்தம் - கலைவுறோம். (6)

சதையைத் துண்டுதுண் டாக்கினு முன்னெண்ணம்
சாயுமோ? - ஜீவன் - ஓயுமோ?
இதையத்துள்ளே யிலங்கு மஹாபக்தி
யேகுமோ? - நெஞ்சம் - வேகுமோ? (7)

ஜன்மபூமி, *1909*, ப. *20-23*

இவ்விரண்டு பாடல்களும் 'இந்தியா' ஏப்ரல் *4, 1908* ஆம் இதழில் வெளிவந்ததாக அன்றைய அரசாங்கம் தயாரித்த *Madras Native Newspaper Reports* 1908 குறிப்பிடுகின்றது. ஆனால், இவ்விதழ் இதுவரை கிடைக்கப் பெறவில்லை. 'ஜன்ம பூமி' என்ற பாரதியின் நூலில் இடம் பெற்றவாறு இப்பாடல்கள் இங்குப் பதிப்பிக்கப்பட்டுள்ளன. 'ஜன்ம பூமி' *1909*ஆம் ஆண்டுப் புதுவையில் இருந்து வெளிவந்தது. இது பாரதியின் சுதேச கீதங்களின் இரண்டாம் தொகுப்பாகும். இந்நூலுக்குப் பின்வரும் விளம்பரம் பிப்ரவரி *6, 1909* 'இந்தியா' இதழில் வெளிவந்தது:

ஜன்ம பூமி
(ஸ்வதேச கீதங்கள்)

'ஸ்வதேச கீதங்கள்' என்ற நூல் வெளியேறிய பிறகு ஸ்ரீ சுப்பிரமணிய பாரதியால் எழுதப்பட்ட பாக்களும் கீர்த்த னங்கள் முதலியவையும் அடங்கியது. முதற்பாகத்தைவிட மாதுரியத்திலும் சுதேச பக்தியிலும் சிறப்பு வாய்ந்தது. அச்சடித்துத் தயாராய் விட்டது. வேண்டியவர்கள் புதுச்சேரி 'இந்தியா' ஆபீஸில் ஸ்ரீ ஸ்ரீநிவாஸாசாரியாருக்கு எழுதிப் பெற்றுக் கொள்க. இதன் விலை அணா *3*.
இப்புத்தகத்தில், எங்கள் தாய், சிதம்பரம் பிள்ளை பாடல்கள், ஸ்வதந்திரப் பள்ளு, ரவிவர்மா மீது பாடல், ஸ்வதந்திர தாகம், திருத்தசாங்கம் நந்தனார் சரித்திரத்தினின் றும் அனுகரணப் பாடல்கள் முதலிய பல புதிய கீதங்கள் நிறைந்திருக்கின்றன.

''சிதம்பரம் பிள்ளை பாடல்கள்'' என்பது மேற்கண்ட வின்ச் - வ.உ.சி. பாடல்களைக் குறிப்பிடுகின்றது. ''ஸ்வதந் திர தாகம்'' பாடலாவது தற்போது 'சுதந்திரப் பயிர்' எனப்படும் 'தண்ணீர் விட்டோ·வளர்த்தோம்...'' பாடலாகும். இப்பாடலைப் பற்றிய குறிப்புகளை இந்நூலின் மற்றோரிடத் தில் காணலாம் (பக்கம் *80*). இந்த இரு பாடல்களும் ஆஷ் கொலை வழக்கில் தடயங்களாகப் பதிவு செய்யப்பட்டன. இப்பாடல்களை மேற்கோள் காட்டிய நீதிபதி சர் சங்கரன் நாயர், தம்முடைய தீர்ப்பில் ''இந்தக் கசப்பான பகைமையின் நேரிடையான பின்விளைவே ஆஷ் கொலை'' என்று குறிப்பிட்டார் (G.O. No. 474-75, Judicial, dated 23-3-1912).

## Tinnevelly Trial A Farce

## திருநெல்வேலி ராஜதுரோகக் கேஸ் ஓர் வினோதக் கூத்து

*மிஸ்டர்* N.K. *ராமசாமி அய்யர்...* தஞ்சாவூர் ஹைக் கோர்ட்... ஹிந்து பத்திரிகைக்குப் பின்வரும் தந்தியனுப்பியிருக்...

*ஏப்ரல் 13-ந்* தேதி ஸ்ரீ சிதம்பரம் பிள்ளை எனக்கு ''இங்குள்ள (திருநெல்வேலியிலுள்ள) வக்கீல்கள் என் பக்கம் ஆஜராக அஞ்சுகிறார்கள். தங்களைக் காட்டிலும் நல்ல வக்கீல் வேறில்லை என்று நான் எண்ணுகிறேன். கேஸ் முடிவுவரை தாம் இங்கு வந்திருக்க வேண்டும்'' என்று தந்தி கொடுத்தார்.

சென்னை ஜன சங்கத்தாரும் நான் இந்தக் கேஸின் பொருட்டாகத் திருநெல்வேலிக்குப் புறப்பட வேண்டுமென்று எனக்கு தந்தியனுப்பினார்கள். அதன்படியே நான் இங்கு வந்து இனாமாக ஆஜரானேன். மார்ச் 30-ம் தேதியன்று ஸ்ரீமான் பிள்ளையை ஜெயிலில் சந்தித்தேன். அப்போது ஸ்ரீ பிள்ளையின் நண்பர்கள் சிலர் திருநெல்வேலி வக்கீல்கள் சிலரைக் கொண்டு வருவதாகச் சொன்னார்கள்..... நானே கேஸ் நடத்தி வந்தேன். நான் செய்த முயற்சியெல்லாம் வியர்த்தமாகிவிட்டது. இன்று (13-ம் தேதியன்று) ஸ்ரீ பிள்ளை எனக்குப் பின்வருமாறு எழுதியிருக்கிறார். ''தங்களை என் பொருட்டு ஆஜராக வேண்டிக் கொண்டபோது, மாஜிஸ்ட்ரேட் நாம் சொல்வதைக் காதில் போட்டுக் கொள்ளவேனும் செய்வாரென்று நினைத்தேன். சென்ற சில தினங்களின் அனுபவத்திலிருந்து மாஜிஸ்ட்ரேட் வக்கீல்க ளைக் கேட்பதிலும், சாக்ஷி பதிவு செய்து கொள்வதிலும் எனக்கு விரோதமாயிருப்பது தெளிவாகிறது. தாம் இங்கே தாமதிப்பதில் இனிப் பயனில்லை. தங்களது வரும்படிக்கு நஷ்டமேயொழிய வேறொன்றுமில்லை. இந்த விசாரணை வெறும் வினோதக்கூத்து. தாம் இனி ஊருக்குப் போகலாம்.'' ஸ்ரீ பிள்ளையெழுதிய ஷை கடிதத்தை நான் அவருடைய சம்மதியின் பேரில் பத்திரிகைக ளுக்கு அனுப்புகிறேன். நானும் திருநெல்வேலியிலிருந்து ஊருக் குப் புறப்படுகிறேன்.

□ □ □

. ஸ்ரீ சிதம்பரம் பிள்ளை ஷை விசாரணையைக் ''கேலிக் கூத்து'' என்று சொல்லியது முழுதும் ஒக்கும். கேஸ் நடவடிக்கை களைப் படித்துப் பார்க்கும் போது வெகு ஆச்சரியமாக இருக்கிறது. ஸ்ரீ சிதம்பரம் பிள்ளை பேசியதில் ராஜ துரோக மொன்றும் இல்லாவிட்டாலும், இவரது பிரசங்கத்தினால்தான்

கலகம் உண்டாயிற்றென்று ஸ்தாபிக்கப் பார்க்கிறார்கள். ஸ்ரீ பிள்ளையின் கதியையும் அவருடைய பெருந்தன்மையையும் கவனிக்கும்போது அளவற்ற மனக்குழப்பம் ஒரு புறத்திலும் சந்தோஷம் ஒரு புறத்திலுமாக உதிக்கின்றன.

இந்தியா, ஏப்ரல் *18, 1908*
தலையங்கக் குறிப்பு

இக்கட்டுரை வெளிவந்த இதழ் சிதிலமடைந்த நிலையில் இருப்பதால், தெளிவில்லாத பகுதிகள் (...) புள்ளியிட்டுக் காட்டப்பட்டுள்ளன.

## திருநெல்வேலிக் கஷ்ட நிவர்த்தி நிதி

### தமிழ் நாட்டு மஹா ஜனங்களுக்கு ஓர் பிரார்த்தனை

மஹா ஜனங்களே, தூத்துக்குடியிலும் திருநெல்வேலியிலும் நடந்துவரும் சம்பவங்கள் உங்கள் அனைவர்க்கும் தெரியாதன வல்ல. நமது ஸ்வஜனங்களில் சிலர் திடீரென்று சுடப்பட்டு மாண்டு போனார்கள். இன்னும் நூற்றுக்கு மேலான ஜனங்கள் அரெஸ்ட் செய்யப்பட்டும், அரஸ்ட் செய்யப்படும் நிலைமை யிலும் இருக்கிறார்கள். இதற்குமேலும் இவர்களுக்கு என்னென்ன கஷ்டங்கள் ஏற்படப் போகின்றனவோ அறியோம். இவற்றினின் றும் எத்தனையோ குடும்பத்தார்கள் சொல்ல முடியாதனவும், ஆற்ற முடியாதனவுமாகிய கஷ்டங்களுக்குள்ளாகித் துடித்துக் கொண்டிருப்பார்களென்பது நாங்கள் கூற வேண்டுமா? இக் குடும்பக்காரர்களின் கஷ்டங்களிலே பெரும்பாலும் ஈசன் பார்த்து தான் நீக்க வேண்டுமேயல்லாது, மனிதர்கள் நீக்கக் கூடியன வல்ல. ஆனால் இவர்களுக்கு மனிதர் செய்யக்கூடிய உதவி ஒன்றுண்டு. மிக ஏழைகளாக இருக்கும் குடும்பத்தாருக்குப் பொருள் உதவி செய்வது நம்மால் சாத்தியமான காரியம். வீட்டில் சம்பாத்தியம் செய்யும் வாலிபர்களை இழந்து நிற்கும் விருத்தாப் பியமான தாய் தந்தைகளுக்கும், கதியற்ற மனைவி மக்களுக்கும் நாம் செய்யும் திரவிய சகாயம் கொஞ்சம் ஆறுதலாக இருக்கக் கூடும். அடைபட்டிருப்பவர்களிலே ஏழைகளாயிருப்போரை ஜாமீனில் விடுவிப்பதற்கும் (அவர்களுக்கு விருப்பமுண்டானால்) கேஸ் நடத்துவதற்கும் பொருளுதவி இன்றியமையாததாகும்.

தமிழ்நாட்டு மகாஜனங்களே, உங்களுடைய சுதேச பக்தியை யும் ஸ்வஜனாபிமானத்தையும், ஒற்றுமையறிவையும் பரீட்சை செய்வதற்குக் கடவுள் ஓர் தக்க தருணம் அனுப்பியிருக்கின்றார். இப்பொழுது சென்னையில் ''திருநெல்வேலி கஷ்ட நிவிருத்தி நிதி'' என்பதாக ஒரு நிதி ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது. அதற்குத் தமிழ் நாடு முழுமையினின்றும் எல்லோரும் தத்தம்மால் இயன்ற மட்டும் பணமனுப்பி, ஜகதீசனுடைய ஆசீர்வாதத்தையும், பாரத மாதவின் அருளையும் பெற்று வாழ வேண்டுமென்று பிரார்த் தனை செய்கிறோம்.

இங்ஙனம்,
தங்கள் சகோதரர்களாகிய

1. மு. ரா. கந்தசாமிக் கவிராயர்,
 'விவேகபானு'ப் பத்திராதிபர், மதுரை

2. சாது கணபதி அய்யர், பி.எ., பி.எல்.,
வக்கீல், திருநெல்வேலி

3. எஸ். என். திருமலாசாரியார்,
திருவல்லிக்கேணி

4. ஸி. சுப்பிரமணிய பாரதி,
மயிலாப்பூர்

5. எஸ். ஸ்ரீநிவாஸாச்சாரியார். பி.எ.,
திருவல்லிக்கேணி

6. பி. திருமாலாசாரியார், பி.எ., பி.எல்.,
காரியதரிசி, 'சென்னை ஜன சங்கம்'

7. என். கே. ராமசாமி ஐயர்,
வக்கீல், தஞ்சாவூர்

8. டி.ஆர். மகாதேவய்யர்,
வக்கீல், ஸ்ரீவைகுண்டம்

9. குருமலை - சுந்தரம் பிள்ளை,
உதவிப் பத்திராதிபர், 'சுதேசமித்திரன்', சென்னை.

குறிப்பு: பணம் அனுப்புவோர் திருவல்லிக்கேணியில் 'சென்னை ஜன சங்கம்' காரியதரிசிக்கு அனுப்ப வேண்டும். பண வரவுகள் 'இந்தியா', 'சுதேசமித்திரன்', 'ஹிந்து', 'பேட்ரியட்' இந்த நான்கு பத்திரிகைகளிலும். பிரசுரம் செய்யப்படும்.

சுதேசமித்திரன், ஏப்ரல் 2, 1908

# திருநெல்வேலிக் கஷ்ட நிவிருத்தி நிதி

''தமிழ்நாட்டு மஹாஜனங்களுக்கு அறிக்கை'' என்று நமது பத்திரிகையில் இரண்டு முறை பிரசுரமான விஷயத்தை நேயர்கள் மறுபடி படித்து சிந்திக்க வேண்டியது. திருநெல்வேலித் தேசாபிமானிகளுக்கு நாமனைவரும் நமது கடமையைச் செலுத்துவதில் தாமதம் புரிதல் கூடாது.

இந்த நிதிக்கு பணம் உதவிய
உபகாரிகளின் ஜாப்தா

| | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|
| முன் வெளியிட்ட தொகை | 41 | 5 | 5 |
| கோவிந்தசாமி பிள்ளை, திருத்துறைப்பூண்டி | 2 | 0 | 0 |
| சி.த. நாடிமுத்துச் செட்டியார், மானைக்கால் | 2 | 2 | 0 |
| ஈ. பராங்குசாசாரியார் | 0 | 8 | 0 |
| கெ.எம். சின்னரங்கய்ய கவுண்டர், கம்பளியம்பத்தி, ஈரோடு தாலுகா | 2 | 0 | 0 |
| வி. வெங்கடேச அய்யர், பண்ணுருட்டி | 0 | 4 | 0 |
| ராகவேந்திரராவ், திருவல்லிக்கேணி | 0 | 12 | 0 |
| ஸி. சுப்பிரமணிய பாரதி | 10 | 0 | 0 |
| எம்.கோபாலகிருஷ்ணய்யர், மதுரை | 1 | 0 | 0 |
| மொத்தம் | 59 | 15 | 5 |

இதன்றியும், சுதேசமித்திரன் பத்திராதிபர், சிந்தாதிரிப்பேட்டை ஸாரதா விலாச சங்கத்தார் என்பவர்கள் பிரத்தியேகமான நிதிகள் இதே நோக்கத்துடன் சேகரித்து வருகின்றனர். அவர்களது முயற்சிகள் நன்கு முடிக.

இந்தியா, ஏப்ரல் 18, 1908

# திருநெல்வேலிக் கஷ்ட நிவிருத்தி நிதி

சென்ற வாரக் கணக்கு ரூபா 59-15-5. ''சுதேசமித்திரன்'' வசூல் 149-15-0. மொத்தம் 209-14-5.

1. சென்னை ஜன சங்கத்தார் தூத்துக்குடி ஸ்ரீகுருநாதய்யர் குடும்பத்துக்கு ரூ. 20 (இருபது) அனுப்பியிருக்கிறார்கள்.
2. ஷை சங்கத்தார் ஸ்ரீ பத்மநாபய்யங்கார் குடும்பத்துக்கு ரூ. 20 (இருபது) அனுப்பியிருக்கிறார்கள்.
3. சுதேசமித்திரன் பத்திரிகை ஆபீஸிலிருந்து திருநெல்வேலியில் ஸ்ரீமான் சிதம்பரம் பிள்ளையின் வக்கீலாகிய ஸ்ரீ சாது கணபதி அய்யரின் பெயருக்கு ரூ. 100 (நூறு ரூபாய்) அனுப்பப்பட்டிருக்கிறது. ''சுதேசமித்திரன்'' பத்திராதிபர் இவ்விஷயத்தில் சிரத்தையெடுத்து வருவதின் பொருட்டு நன்றி பாராட்டுகிறோம்.

கோயமுத்தூரிலே ஸ்ரீ சிதம்பரம் பிள்ளை கேஸின் பொருட்டுக் கல்கத்தாவிலிருந்து வக்கீல் ஸ்ரீ சௌதரியை வரவழைக்க வேண்டுமென்ற நோக்கத்துடன் பண வசூல் ஆரம்பித்து, சுமார் 150 ரூபாய் வரை சேகரிக்கப்பட்டிருப்பதாகத் தெரிகிறது. ஆனால், சென்னை முதலிய மற்ற இடங்களிலிருப்பவர்கள் சௌதரியை அழைப்பது அதிகச் செலவுக்கிடமாகுமென்று கருதுகிறார்கள். இதுபற்றி நமது கோயமுத்தூர் சகோதரர்கள் தமது வசூலை நிறுத்திவிட மாட்டார்களென்று நம்புகிறோம். எந்த வக்கீல் வந்த போதிலும், எவர் வரா விட்டாலும், திருநெல்வேலிச் சகோதரர்களுக்கு நாமனைவரும் நம்மால் இயன்ற உதவி செய்து தீர வேண்டுமென்பதில் ஆக்ஷேபமில்லை. இந்த சமயத்தில் நாம் பிரிவுபட்ட ஆலோசனைகளால் நமது பொது முயற்சியைத் தளரவிடலாகாது. கோயமுத்தூர் நண்பர்கள் ஊக்கத்துடன் இன்னும் பொருள் சேர்த்துத் திருநெல்வேலிக்கு நேராகவேனும், சென்னை ஜன சங்கத்தார் மூலமாகவேனும் அனுப்பும்படி பிரார்த்தனை செய்கிறோம்.

இந்தியா, ஏப்ரல் 25, 1908

## திருநெல்வேலி கஷ்ட நிவிருத்தி நிதி

### சென்னை ஜன சங்கம் வசூல்

| | | | |
|---|---|---|---|
| முன் பிரசுரிக்கப்பட்டது | 61 | 14 | 11 |
| என். பி. அருணாசலம், ஸிலோன் | 7 | 0 | 0 |
| வி. பெருமாள், ஸிலோன் | 1 | 0 | 0 |
| ஏ. கோபாலசாமி நாயுடு | 1 | 0 | 0 |
| பெருமாள் கங்காணி | 1 | 0 | 0 |
| தி.மு. பகவதி, திரூர் | 1 | 0 | 0 |
| வ.சி. நாராயண நம்பூரி | 1 | 0 | 0 |
| இ.ஏ. கிருஷ்ணய்யர் | 0 | 8 | 0 |
| வி. முனுசாமி முதலியார் | 0 | 8 | 0 |
| சுப்பிரமணிய பிள்ளை | 0 | 4 | 0 |
| சே. ராமநாத அய்யர் | 1 | 0 | 0 |
| பா. குங்சுணி நாயர் | 0 | 4 | 0 |
| பி.வி. நாராயண அய்யர் | 0 | 4 | 0 |
| வெங்கிடாசல அய்யர் | 0 | 2 | 0 |
| மங்கலசாமி பிள்ளை | 0 | 2 | 0 |
| ம. ஸ்ரீனிவாசய்யங்கார், முசிரி | 0 | 7 | 0 |
| கே.வி. லஷ்மணராவ் | 4 | 0 | 0 |
| ஒரு சிநேகிதர் | 5 | 0 | 0 |
| சுப்பராமய்யர் | 0 | 8 | 0 |
| பிச்சய்யகாரு | 1 | 0 | 0 |
| ஸ்ரீனிவாசாசாரி | 0 | 8 | 0 |
| என். சிங்கு | 1 | 0 | 0 |
| டி. பாஷியம் நாயுடு | 0 | 8 | 0 |
| கோபிநாத பண்டாலே | 1 | 0 | 0 |
| குமாரசாமி முதலியார் | 0 | 8 | 0 |
| மூர் மார்க்கட்டில் சேர்த்தது | 12 | 12 | 0 |
| கன்னையலால் | 1 | 0 | 0 |
| டி. கிருஷ்ணசாமி முதலியார் | 1 | 0 | 0 |
| ம. ஜயராம் சிங் | 1 | 0 | 0 |
| மூர் மார்க்கட்டில் சேர்த்தது | 2 | 5 | 5 |
| டி. முத்துராம் பிள்ளை | 1 | 0 | 0 |
| டி. ஹிராமன் லால் | 1 | 0 | 0 |
| பழைய விளக்கம் கோயில்பட்டி | 5 | 0 | 0 |
| மூர் மார்க்கட்டில் சேர்க்கப்பட்டது | 1 | 8 | 0 |

| | | | |
|---|---|---|---|
| ஒபவ ரெட்டியார் | 50 | 0 | 0 |
| மாது ஸ்ரீ தி.மு. மங்கயர்க்கரசியம்மாள் | 1 | 0 | 0 |
| ஸ்ரீ அரப்பெருந்தேவியம்மாள் | 1 | 8 | 0 |
| மொத்தம் | 169 | 15 | 4 |

இந்தியா, மே 2, 1908

## ஸ்ரீமான் சிதம்பரம் பிள்ளை

இம் மஹானது கேஸ் இன்னும் இழுத்துக் கொண்டே போகிறது. இவர் மேலுள்ள முதலாவது ராஜதுரோகக் கேஸில் பிராஸிக்யூஷன் தரப்பு விசாரணை முடிந்து போய் விட்டது. இரண்டாம் ராஜதுரோகக் கேஸ் (ஸ்ரீ சுப்பிரமணிய சிவன் ராஜதுரோகக் குற்றம் செய்ததாகவும் அதற்கு ஸ்ரீ சிதம்பரம் பிள்ளை உடந்தையாக இருந்ததாகவும் கற்பிக்கப்பட்டிருக்கும் கேஸ்) விசாரணை இந்த வாரத்திலே தொடங்கியிருக்கிறார்கள். இது நிற்க.

''கர்ம வீரர்'' என்றும், ''பிரதம ஆரிய புருஷர்'' என்றும், உயர்ந்த பரித்தியாகி என்றும் அரவிந்த கோஷ் முதலிய பெரியோர்களாலே பாராட்டப்பட்ட ஸ்ரீமான் சிதம்பரம் பிள்ளையின் பெருந் தன்மையையும், தேசப்பற்றையும் உத்தேசித்து நமது தமிழ் நாட்டோர் அவர் விஷயத்தில் எம்மட்டுச் சிரத்தை பாராட்டக் கடமைப்பட்டிருக்கிறார்களோ, அம்மட்டு சிரத்தை பாராட்டமாலிருப்பது தவறென்பதாகவே நினைக்கிறோம். ஸ்ரீ சிதம்பரம் பிள்ளை யார் பொருட்டு இரவு பகலாக உழைத்தாரோ அவர்கள் கூடப் பயத்தினாலோ அல்லது சோம்பரினாலோ மூச்சுக் காட்டாமல் பின் வாங்கி நிற்கிறார்கள். சுதேசிய ஸ்டீம் நாவிகேஷன் கம்பெனிக்கு ஸ்ரீ சிதம்பரம் பிள்ளையே பிதாவென்று கூறுதல் தகும். ஷெ கம்பெனியார் இப்போது இன்னும் பலமான அபிவிருத்திகள் செய்வதற்குரிய பிரயத்தனங்களை நடத்தி வருகிறார்களென்று கேட்டுச் சந்தோஷிக்கிறோம். ஆனால் இவர்கள் சிதம்பரம் பிள்ளைக்குத் தக்கவாறு நன்றிக் கடமை செலுத்தாவிட்டால் இவர்களுடைய முயற்சிகளின் மீது தரும தேவைக்குச் சினம் பிறக்கும். ''என்பிலதனை வெயில் போலக் காயுமே, அன்பிலதனை அறம்.''

மேற்படி கம்பெனிப் பங்காளிகளில் ஒவ்வொருவரும் தலைக்கு 4 அணா வீதம் போட்டால் எவ்வளவோ பெரிய நிதி சேர்க்கலாம். இவ்விஷயம் அவசியம் நடத்தித் தீர்வதற்குரியது. கம்பெனியின் அனுகூலத்துக்கும் க்ஷேமத்துக்கும் இது இன்றியமையாததாயிருக்கும். இதில் கம்பெனியின் பெருத்த பங்காளி எவரேனும் இந்த விஷயத்தில் முற்பட்டு நின்று பாடுபடுவார்களென்று நம்புகிறோம்.

இந்தியா, ஏப்ரல் *25, 1908*
தலையங்கம்

'வந்தே மாதரம்' என்ற தம் இதழில் *(27-3-1908)* அரவிந்தர் 'Well Done, Chidambaram' என்றொரு கட்டுரையை எழுதினார். அதில் "the first complete example of an Aryan reborn" என்று வ.உ.சி.யைப் பாராட்டியிருந்தார்.

# Our Special Commissioner's Report from Tinnevelly
# திருநெல்வேலிக்குச் சென்றிருக்கும் நமது பிரதிநிதியின் அறிக்கை

திருநெல்வேலிக்கு இவ்வாரத்திலே நமது ஆபீஸிலிருந்து ஒரு ஸ்பெஷல் கமிஷனர் சென்றிருக்கிறார். அவர் அனுப்பி யிருக்கும் அறிக்கை பின்வருமாறு:

நான் ஞாயிற்றுக்கிழமை (26-ம் தேதி) மாலை திருநெல்வே லிக்கு வந்து சேர்ந்தேன். வந்தவுடனே திருநெல்வேலியில் சுடப்பட்டு இறந்த சுதேசிகளின் பெயர்களை விசாரித்தேன். இங்குள்ள வக்கீல்களும் மற்றப் பெரிய மனிதர்களும் இதுவரை இவ்விஷயத்தைப் பற்றி விசாரணை செய்யாமலிருப்பது வெகு ஆச்சரியமாயிருக்கின்றது. அது சாமான்யமான விசாரணைக்குத் தகுதியற்ற விஷயமென்று நினைத்து விட்டார்கள் போலும்! அதை விசாரணை செய்யப் புகுந்த க்ஷணத்திலேயே தமக்கு ஏதேனும் ஆபத்து வரக்கூடுமென்று அஞ்சினார்கள் போலும்! நான் விசாரித்ததில் இதுவரை ஒரே ஒரு மனிதனுடைய பெயர் மட்டிலும் தெரிந்திருக்கிறது. இவன் பெயர் ஆறுமுகம் பிள்ளை. இவன் வண்ணாரப்பேட்டை ஸ்பெஷல் ஸெட்டில்மெண்ட் ஆபிஸில் சேவக வேலை பார்த்து வந்தானாம். இவன் நல்ல சாது என்றும் இவனிடத்தில் கலக சுபவாமே கிடையாதென்றும் சொல்லுகிறார்கள். இவனைச் சுட்டுக் கொலை செய்ததைப் பற்றி என்னிடம் பேசியவர் மிகவும் பரிதாபம் பாராட்டினார். இன்னும் மற்ற மூன்று பெயர்களையும் அவர்களுடைய குடும்ப விருத்தாந் தங்களையும் தீர விசாரணை புரிந்த பின் எழுதுகிறேன்.

### பொதுஜன பீதி

பொதுஜனங்கள் நடுக்கத்தில் இருப்பார்களென்று நான் சென்னையில் வைத்து நம்பியிருந்தேன். ''பெரிய மனிதர்கள்'' என்று சொல்லிக் கொள்ளும் சிலரைத் தவிர மற்ற ஸாமானிய ஜனங்கள் அதிக அச்சநிலையில் இருக்கவில்லை. கலகம் நடந்து அதிகாரிகளின் பராக்கிரமச் செய்கைகளெல்லாம் நடந்து முடிந்த காலத்தில் பீதி அதிகப்பட்டிருந்ததாகவே தெரிகிறது. இரண்டு மூன்று தினங்களுக்குத் தெருக்களிலே மனிதர்களின் நடமாட்ட மில்லாமல் ஊர் ''மாரணபுரம்'' போல் இருந்ததாம். ஆனால் அந்த பீதி இப்பொழுது தெளிந்து போய்விட்டது. ஜனங்கள் வழக்கம் போலவே தமது காரியாதிகளில் பிரவேசித்து நடத்தி

வருகிறார்கள். தெருக்களிலே போலீஸ் கோஷங்களைக் காண வில்லை. பாளையங்கோட்டையிலிருக்கும் பூனிடிவ் போலீஸார் மட்டும் அங்கங்கே இடையிடையில் சுற்றி வருவதாகத் தெரிகிறது.

திங்கட்கிழமை காலை ஜெயிலில் போய்
தேசாபிமானிகளைச் சந்தித்தது

திங்கட் கிழமை காலை பாளையங்கோட்டை ஜெயிலுக்குப் போய்ச் சேர்ந்தேன். அங்குள்ள அதிகாரிகளின் அனுமதியின் பேரில் உள்ளே சென்று ஸ்ரீ சிதம்பரம் பிள்ளை, ஸ்ரீ சுப்பிரமணிய சிவன் இருவரையும் கண்டு பேசினேன். ஸ்ரீ சிதம்பரம் பிள்ளையை முன்பு நான் தூத்துக்குடியிலே அவருடைய அரிய பிரசங்கங்களை ஆயிரக்கணக்கான ஜனங்கள் கேட்டுப் புகழ்ச்சி கூறிக் கொண்டிருந்த காலத்தில் பார்த்த போது அவருடைய முகம் எவ்வளவு பிரசன்னமாகவம் தேஜஸுடனும் விளங்கியதோ அதே மாதிரியிலேயே இப்பொழுதும் இருக்கக் கண்டேன். உடனே எனக்கு,

மெய்த்திருப்பத மேவென்ற போழ்தினும்
இத்திருத்துறந் தேகென்ற காலையும்
சித்திரத் தினலர்ந்த செந்தாமரை
யொத்திருக்கு முகத்தினை யுன்னுவாள்

என்ற கம்பராமாயணப் பாட்டு ஞாபகத்திற்கு வந்தது. அதிகாரிகள் இவர் தலைமீது செக்ஷன் கணக்கான கேஸ்களைக் கொண்டு சுமத்தியிருக்க ஜெயிலிலே அதிபாதகமான குற்றவாளி களுடன் சேர்ந்து அடையுண்டவராக இருக்கவும், இவருக்கு விரோதமாக இதுவரை சொல்லப்பட்டிருக்கும் சாக்ஷிகள் வெகு பலமாகவும், இவருக்கு பயத்தை விளைவிக்கக் கூடியனவாகவும் இருக்கவும், இவர் சிறிதேனும் முகவாட்டமில்லாமலும் சோர் வில்லாமலும் வீர மூர்த்தியாக விளங்கிய அற்புதத்தை என்னால் வருணிக்க முடியாது.

ஸ்ரீ சிவனும் சந்தோஷமாகவேதான் இருந்தார். ஆனால் அவர் தாடி மீசைகள் எடுத்து விட்டபடியால் முகம் சிறிது மாறுபாடா கத் தெரிந்தது. ஸ்ரீமான் பிள்ளையும் சிவனும் தங்களுடைய சொந்தக் காரியங்களைப் பற்றி மட்டிலுமே என்னோடு வார்த்தை யாடாமல் உலகப் பொது விஷயங்களைப் பற்றி வெகு உல்லாசமாகப் பேசிக் கொண்டிருந்தார்கள். இதனிடையே ஸ்ரீ குருநாத அய்யரும் வந்து சேர்ந்தார். இவர் என்னைக் கண்ட வுடனே, ''வந்தே மாதரம்'' என்று முழங்கிய தொனி சிறைக் கூடம் முழுதிலும் கேட்டிருக்கும். மேலும் இவர் இந்த க்ஷத்திரிய

நடையும் க்ஷத்திரியப் பார்வையும் எப்படிப் பெற்றாரென்பது எனக்குத் தெரியவில்லை. இது நிற்க. ஸ்ரீ குருநாத அய்யர் கலகத்தன்று காலை ஒன்பது' மணி ரயிலுக்குத் திருநெல்வேலியிலிருந்து ஏதோ அவசர வேலையாகத் தூத்துக்குடிக்கப் போய்விட்டாரென்றும் கலகச் சமயத்தில் அவர் இங்கிருக்கவேயில்லையென்றும் போலீஸார் அவரை அநீதியாக அடைத்து விட்டார்களென்றும் ஊர்க்காரர்கள் பேசிக் கொள்ளுகிறார்கள்.

(வரும்)

இந்தியா, மே 2, *1908*

இக்கட்டுரையில் குறிப்பிடப்பெறும் 'விசேஷப் பிரதிநிதி' பாரதி ஆவார். 26 ஏப்ரல் 1908-ஆம் நாள் மாலை பாரதி திருநெல்வேலி வந்தடைந்த செய்தி இரகசிய போலீஸ் குறிப்புகளிலிருந்தும் உறுதிப்படுகின்றது (காண்க: பிற்சேர்க்கை 2). இக்கட்டுரை 'வரும்' என்ற குறிப்போடு முடிகின்றது. இதன் தொடர்ச்சி வெளிவந்த 'இந்தியா' இதழ்கள் இதுவரை எவர்க்கும் கிடைக்கப் பெறவில்லை. பாளையங்கோட்டைச் சிறையில் வ.உ.சியைத் தாம் சந்தித்தது பற்றிப் பாரதி தம் சொற்பொழிவொன்றில் குறிப்பிட்டதாக அந்நாளைய போலீஸ் அறிக்கை ஒன்று கூறுகிறது. அது வருமாறு:

> மே 10,1908ஆம் நாள் மாலையில் சென்னை ஜன சங்கத்தின் பொதுக்கூட்டம் திருவல்லிக்கேணியில் நிகழ்ந்தது. அதில் சுப்பிரமணிய பாரதி பின்வருமாறு ஆங்கிலத்தில் பேசினார். நான் திரு. சிதம்பரம் பிள்ளையைக் கண்டு பேசியபோது, தாம் சென்னை ஜன சங்கத்தைத் தொடங்கியவர்களுள் ஒருவர் என்றும், அதனுடைய குறிக்கோளை அடைந்தே தீர வேண்டும் என்றும் சிறைவாசம் பற்றித் தாம் சிறிதும் கவலைப்படவில்லை என்றும் அவர் கூறினார். (Police Report dated 12-5-1908, G.O. No. 923, Judicial and Confidential, dated 4-7-1908)

*1908* மார்ச் திங்கள் 12ஆம் நாள் வ.உ.சி.யும் சுப்பிரமணிய சிவாவும் பத்மநாப அய்யங்காரும் கைது செய்யப்பட்டதைத் தொடர்ந்து, திருநெல்வேலியிலும் தூத்துக்குடியிலும் மக்களிடையே பெரும் எழுச்சி ஏற்பட்டது. அரசாங்க அலுவலகங்கள் தாக்கப்பட்டுத் தீக்கிரையாயின. போலீசார் நடத்திய துப்பாக்கிச் சூட்டில் ஐவர் மாண்டனர். எழுச்சியில் ஈடுபட்ட மக்களைத் தண்டிப்பதற்காக அரசாங்கம் தண்டக் காவல் படையை நிறுத்தியது. ('திருநெல்வேலிக் கஷ்ட நிவர்த்தி நிதி' என்பது இவ்வெழுச்சி தொடர்பாகச் சேர்க்கப்பட்ட நிவாரணநிதி ஆகும்.) இவ்வெழுச்சியில் நிகழ்ந்தவற்றையும் அதைப்பற்றி வ.உ.சி. மேற்கொண்ட நிலைப்பாட்டினையும் அறிய இந்நூலின் தொகுப்பாசிரியர் எழுதிய 'வ.உ.சி.யும் திருநெல்வேலி எழுச்சியும்' என்ற நூலைக் காண்க.

## திலகருக்குக் கடிதம்

THE 'BALA BHARATA' OFFICE
Triplicane, Madras,
Dated 29th May 1908

To
Sriman B.G. Tilak,
Poona.

Dear Guruji,

I have received a letter from Pandit Krishna Varma asking us to open a Hindi class in Madras, under the auspices of the Chennai Jana Snagham. I hope it will be fairly well-attended in due course of time. I shall report its progress, later on.

We have decided to hold a National Provincial Conference in Madras on the lines marked out in the Calcutta Congress. What about the next Congress? What has become of out Nationalist Committee? Our Secretary Mr. Chidambaram is just now you know where: Please ask Mr. Kelkar to correspond with our Sangham about the matter.

Your Sincerely,

C. Subramania Bharati.

பாரதியின் கடிதங்கள்
*பதிப்பாசிரியர்: ரா.அ. பத்மநாபன்*

# சுதேசியக் கப்பல்கள்

பாரத தேசம் வர்த்தக சம்பந்தமான மட்டிலே சுயாதினமடைய வேண்டுமானால் அதற்கு மூன்று விஷயங்கள் அவசியமாகும்

1. கைத் தொழில்களேற்படுத்துதல்.
2. சில்லரை வியாபாரங்களைச் சுதேசியமாகத் திருப்புதல்.
3. கைத் தொழில் நடக்கும் ஸ்தலங்களினின்றும் வியாபாரம் நடக்கும் ஸ்தலத்திற்கு சாமான்கள் கொண்டு செல்லும் வண்டி, கப்பல் முதலிய வாகனாதிகளைச் சுதேசிய நிர்வாகத்துக்குட்படுத்துதல்.

இம்மூன்று விஷயங்களிலே அத்தியாவசியமானது கடைசியாகக் கூறப்பட்டதேயாகும்.

ஏனென்றால் வாகன சவுகரியங்கள் சுதேசியத்தின் விரோதிகளுடைய வசப்பட்டிருக்கும்வரை முதலிரண்டு விஷயங்கள் ஸ்திர ஜீவனடைய மாட்டா. அவைகளுக்கு விபத்துக்கள் நேர்ந்து கொண்டேயிருக்கும். கீழ் பெங்காளத்திலே ஜனங்கள் கல்கத்தாவிலிருந்து சுதேசிய ஸாமான் தருவிக்கத் தொடங்கியபோது ரயிலும், கப்பல் தோணி முதலியனவும் எதிர்ப்பக்கத்தார் கைவசகமாக இருந்தபடியால் நேரிட்ட கஷ்ட நஷ்டங்கள் நமக்குத் தெரியாதனவல்ல.

இனி, சுதேசியம் ஊர்ஜிதமடையும் காலத்தில் நமது சரக்குகளை இடமாற்றம் விஷயத்தில் நமக்கு எதிர்பக்கத்தார் என்னென்ன விதமான இடையூறுகள் செய்தல் சாத்தியாகுமென்பதற்கு ஷ கீழ் பெங்காள விஷயத்தை ஓர் முன்னடையாளமாக எடுத்துக் கொள்ளலாம்.

ரெயில் பாதையை சுதேசிய அதிகாரத்துக்குட்படுத்தல் இப்போது நமக்கு சாத்தியமாக மாட்டாது. நாம் அரசியல் மாறுபாட்டையடைந்த பின் செய்ய வேண்டிய காரியமாகும். இந்த விஷயத்தில் நாம் எவ்வளவோ காரியம் சாதிக்க முடியும். தரையிலே ஆறுகளிலும், கடலிலும் மூலைக்கு மூலை ஸ்டீமர்களோட்டுவதற்குக் கம்பெனிகள் ஸ்தாபிப்பது நம்மால் நிறைவேற்றக் கூடிய விஷயம். இதை நமது நாட்டார் அதிசுலபமாக அறிந்து கொண்டு விட்டார்கள். புதிய கிளர்ச்சி தொடங்கியதற்கு முதற் சின்னமாக பெங்காளத்தில் சிட்டகாங்கிலேயும், நமது பக்கத்தில் தூத்துக்குடியிலேயும் ஸ்டீமர் கம்பெனிகள் ஏற்பட்டு அதி சீக்கிரத்தில் ஜயமடைந்து விட்டன. எத்தனை தேசபக்தியின் பேரிலும் சுயநல மறுப்பின் பேரிலும் இந்தக் கம்பெனிகள் ஸ்தாபனமாகிப் பிரபலமடைந்தன வென்பதை நாம் கூற வேண்டியதில்லை. இது போலவே, ரங்கூனிலிருந்து கராச்சி

வரையிலும், கராச்சியிலிருந்து பாரசீகக் கடல் வரையிலும் கப்பற் கம்பெனிகள் இடத்துக்கிடம் ஏற்படுத்தப்படுமாயின் மிகுந்த அனுகூலம் உண்டாகும்; நமது ஜாதீய முயற்சி இடையிலே சேதப்படாமல் நிறைவேற ஹேது உண்டாகும்.

□ □ □

தூத்துக்குடியிலுள்ள ஸ்டீமர் கம்பெனிக்குப் பிதா ஸ்தானம் வகித்திருந்தவராகிய ஸ்ரீமான் சிதம்பரம் பிள்ளை நமதிடையி லிருந்து அவருடைய பரோபகாரமாகிய முயற்சிகள் செய்வதற் கிடமில்லாமல் விலக்கப் பெற்றுவிட்டனர். அவருடைய ஆசை மகளாகிய ஷை கம்பெனியை இக்காலத்தில் வைத்து சம்ரக்ஷணை செய்ய வேண்டியது பாரதவாஸியாகிய ஒவ்வொருவனுக்கும் தலைப் பொறுப்பாகும்.

அவர் இல்லாத சமயத்தில் நமது கவனக் குறைவால் அந்தக் கம்பெனிக்கு ஏதேனும் சஞ்சலம் ஏற்பட்டுவிடும் பக்ஷத்தில் நமது ஜாதீய கௌரவத்துக்கு அதைப் போன்ற குறைவு வேறே கிடையாது. சென்னப் பட்டணத்து உள்ளூர்க்காரர் இந்த விஷயத்தில் மிகவும் சிரத்தைக் குறைவுடன் இருப்பது பற்றிக் கல்கத்தா 'வந்தே மாதரம்' பத்திரிகை பரிஹஸித்துப் பழி கூறுகின்றது. தூத்துக்குடி தேசாபிமானிகளின் ஊக்கத்தையும் பெங்களாத்துப் பணத்தையுமே முக்கிய ஆதாரங்களாகக் கொண்டு தூத்துக்குடிக் கம்பெனி நடைபெறுகின்றது.

சென்னப் பட்டணத்திலே செல்வம் நிதானஸ்தர்கள் வசமே அதிகப்பட்டிருக்கிறது. அவர்களுடைய தேசபக்தியோ வாய்மட் டில் நிற்பதேயல்லாமல், பணம் கேட்டவுடனே பின்வாங்கும் இயற்கையுடையது. பெங்காளத்திலும் தூத்துக்குடிப் பிரதேசத்தி லும் நிதானஸ்தர்களால் வெறிஞரென்று பழிக்கப்படும் உண்மை யான தேசபக்தர்களிருப்பதால் அவர்கள் தன்னலங் கருதாமல் தேச நலத்தின் பொருட்டு ஸகலத்தையும் தத்தம் செய்து பாடுபடுகின்றார்கள்.

பஹிஷ்கார ''பயித்திய''மில்லாமல் லார்டு மிண்டோ சொல்லியபடி ''சாது சுதேசியம்'' (Honest Swadeshi) கைப்பற்றி யிருப்பதாகச் சொல்லும் சென்னை நிதானஸ்தர்கள் மேலே ''வந்தே மாதரம்'' பத்திரிகை எழுதியிருக்கும் வசை வார்த்தை உண்மையா இல்லையா என்பதைப் பற்றி யோசனை புரிவார்க ளென்று நம்புகிறோம்.

*இந்தியா, ஜூன் 13, 1908*

## சிறைக்குளகப்பட்டிருக்கும் தேசபக்தர்கள்

நவம்பர் மாதம் இரண்டாம் தேதியன்று இங்கிலிஷ் கவர்ன்மெண்டார் திலகர் முதலிய தேச பக்தர்களைச் சிறையினின்றும் விடுதலை செய்துவிடுவார்களென்று ஆங்கிலேயர்களின் குணமறியாத பல பேதை ஜனங்கள் நம்பி எதிர்பார்த்திருந்தார்கள். சென்னப்பட்டணத்திலகூட ஷெ தினத்தில் யதிராஜ் முதலியவர்களை விடுதலை செய்துவிடுவார்களென்று நம்பி அனேகர் மழை வெள்ளத்தைக் கூட கவனியாமற் சிறை வாயிலிலே போய் காத்திருந்த பின், துக்கத்துடன் திரும்பி வீடு வந்து சேர்ந்ததாக அறிகின்றோம். சென்ற சில மாதங்களாகவே, திலகர், சிதம்பரம் பிள்ளை முதலிய பெரியோர்களுக்கு விதிக்கப்பட்டிருக்கும் மிருகத்தனமான தண்டனையை நாகரிகமுடைய ஆங்கிலேய கவர்ன்மெண்டார் ரத்து செய்துவிடுவார்களென்ற ஆசை சில வகுப்பினருள்ளே பரவி வந்தது.

இங்கிலந்துக்கு போய்வந்த சில வீண் டம்பக்காரர்கள் நான் போய் மார்லியை நேரே பார்த்தேன். அவர் இந்திய ஜனங்களிடம் மிகுந்த அனுதாபமுணர்த்திப் பேசுகின்றார். ஜனங்களைப் பயமுறுத்தும் பொருட்டாகவே இவ்விதக் கொடூர தண்டனைகள் தேசபக்தர்களுக்கு விதிக்கப்படுகின்றன. இதில் மார்லிக்குக் கொஞ்சமேனும் சம்மதம் கிடையாது. நவம்பர் மாதத்தில் மார்லி ராஜதந்திரத்தின் பொருட்டு அடைக்கப்பட்டிருக்கும் கைதிகளையெல்லாம் விடுதலை செய்து விடப்போகிறார். இது நிச்சயம் என்று பலவிதமான பொய்க் கதைகளைப் புனைந்து ஜனங்களுக்குள்ளே பரப்பி வந்தார்கள். எதையும் எளிதில் நம்பக்கூடிய நமது ஜனங்கள் ஷெ பொய்க்கதைகளை நம்பியேமாந்து போய் விட்டார்கள். இங்கிலிஷ் பத்திரிகைகளில் எழுதப்பட்ட பல வர்த்தமானங்களைப் பார்க்க அந்தத் தப்பு நம்பிக்கை உறுதியடைய இடமுண்டாயிற்று. ஆங்கிலேயர்களும் இந்த ஜனங்கள் சும்மா நம்பிக் கொண்டிருக்கட்டுமென்று வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தார்கள். இப்போது ராஜதந்திர சம்பந்தமாக அடைபட்டிருக்கும் கைதிகளை விடுதலை செய்வதில்லையென்று நிச்சயமாய்விட்டது. மற்றப்படி சாமானியக் குற்றவாளிகளை விடுவதென்ற விஷயத்தை விளக்கி ஓர் பயனற்ற விளம்பரம் பிரசுரப்பட்டிருக்கின்றது. அதை மொழி பெயர்த்தெழுவது வீண் வேலையாதலால் நாம் அங்ஙனம் செய்யவில்லை.

ஸ்வாதீனம் விரும்பும் இந்தியர்களை ஆங்கிலேயர்கள் ஒருபோதும் க்ஷமிக்க மாட்டார்கள். ஜனங்களுக்கு ஹிதம் உபதேசிக்கும் பெரியோர்களை ஆங்கிலேய கவர்ன்மெண்டார் எக்காலத்திலும் தாக்ஷிணியத்துடன் நடத்த மாட்டார்கள். இருபது

வயதுகூட ஆகாத வாலிபர்களில் எத்தனை பேர் சுதேசியத்தில் இச்சை பாராட்டியதின் பொருட்டு ஆங்கிலேயரின் சிறைச்சாலை களிலே அகப்பட்டுப் பழுத்துச் சாகிறார்கள்.

இவர்கள் மீதெல்லாம் ஆங்கிலேயர்க்கு ஒருபோதும் தயவு பிறக்கப் போவதில்லை. ஈசனுக்குத் தயை பிறக்க வேண்டும். பாரத தேசத்து மஹாஜனங்களில் திருவுள்ளமிரங்க வேண்டும். இதையொழிய நமது தேசபக்தர்களுக்கு வேறு கதியில்லை.

ஆங்கிலேய ராஜாவின் 'கருணை'யினால் திருடர்களும், முடிச்சுமாறிகளும், கொலைஞர்களும் விடுதலையடையவார் களேயல்லாது, சுதேசியப் பற்றுடையவர்கள் எக்காலத்திலும் விடுதலையடையப் போவதில்லை.

கருணை வடிவங் கொண்டவராகிய லாலா லாஜ்பத் ராய் இவ்விஷயத்தை நன்கு தெரிந்தவராயினும், நம்மவரிடமுள்ள அபிமான மிகுதியினால், இங்கிலந்தில் போய் நமது தேசத்தில் சுதேசியத்தின் பொருட்டு சிறைப்பட்டிருக்கும் வாலிபர்களையும் பெரியோரையும் விட்டுவிட வேண்டுமென்று மன்றாடி வரு கிறார். சில வாரங்களின் முன்பு 'டெயிலி நியூஸ்' என்ற லண்டன் பத்திரிகைக்கு லாஜ்பத்ராய் எழுதியிருக்கும் கடிதத்திலே பெருமை மிக்க திலகரையும் அருமை வாய்ந்த சிதம்பரத்தையும் (The great Tilak and the good Chidambaram) மற்றும் தீனநாதர் பிண்டிதாஸ் முதலிய யாதொரு குற்றமும் செய்யாத வாலிபர் களையும் விடுதலை செய்யக்கூடாதா? என்று எழுதியிருக்கிறார். லாலா லாஜ்பத் ராய் நிதானக் கட்சியைச் சேர்ந்து கொண்ட போதிலும் உண்மையான தேசபக்தியுடையவராதலால் அவர் மனம் நமது பக்ஷத்தினரிடம் இவ்வளவு இளக்கமடைகிறது. திலகரையும் அவர் கூட்டத்தாரையும் கவர்ன்மெண்டார் சுருக்கத் தில் வேலை முடித்து விடுவார்கள் என்று குதூகலத்துடன் எழுதிக் களித்த வி. கிருஷ்ணசாமி அய்யரின் இன்னத்திலே லாஜ்பத் ராய் சேர்ந்தவரல்லர். அவர் இப்போது இங்கிலாந்தில் செய்து வரும் முயற்சி பயன்படக் கூடியதன்று எனினும், அதனின்றும் அவருடைய ஹிருதய நயம் வெளிப்படுகின்றது.

இந்தியா, நவம்பர் *14, 1908*

# தேசபக்தர் ஸ்ரீ சிதம்பரம் பிள்ளை

தேசபக்தரான ஸ்ரீயுத சிதம்பரம் பிள்ளை ராஜத்துரோக ஜாதித்துவேஷக் குற்றங்கள் சாட்டப்பட்டு (6) ஆறு வருடம் தீபாந்தரசிக்ஷை விதிக்கப் பெற்றிருக்கிறார்.

தற்சமையம் சிறைப்படுத்தியிருக்கும் கோயம்புத்தூர் ஜெயில் அதிகாரி அவரைக் கைகால் விலங்கிட்டுக் கேவலம் மிருகம் போல் எண்ணெய் ஆட்டும் செக்கிழுக்கும்படி செய்திருக்கிறா ராம்! நடு வெயிலில் தீப்பறக்கும் செக்கிழுத்துக் கஷ்டமடைகிறா ராம்! அந்தோ! இக்கொடிய துன்பத்தை நினைக்கும்போதே நெஞ்சுருகுகிறதே!! இங்கெழுதும்போதே கை நடுங்குகிறதே!!! இக்கொடுந் துன்பத்தைச் சகிக்கும் தேசபக்தர் பாடு எங்ஙனமோ கடவுளேயறிவர். கைதிகட்கு எத்தனையோ விதமான வேலைகளி ருக்க இத்தேசபக்தருக்கு நாற்கால் மிருகங்களும் துன்புறக்கூடிய எண்ணெய் யந்திரம் சுழற்றும் வேலையா கொடுக்க வேண்டும்! அவர் கைகால்கட்கு விலங்கிடுவதேனோ? இத்தகைய கொடிய சிக்ஷைகள் இத்தேசபக்தருக்குச் செய்ய வேண்டுமென்று பட்டது அச்சிறைச்சாலை அதிபரின் புத்தி கூர்மை போலும்! இராஜத் துரோக ஜாதித்துவேஷக் குற்றங்கள் செய்ததாகக் கருதுகின்றபடி யால் தன்னையும் (வெள்ளையரானபடியால்) துவேஷித்ததாகக் கருதித் தருணம் வாய்த்ததென்று இவ்விதமான மிருகங்களும் துன்புறக்கூடிய கடின வேலையை இத்தேச பக்தருக்கிட்டுப் பழிக்குப் பழி வாங்குகிறார் போலும்! இவண் சிறைச்சாலை அதிபர் சுத்த வீரரே!! இச்சிறைச்சாலை அதிபர்க்கு எல்லாம் வல்ல இறைவன் திருவருள் வீங்குக!!!

துன்பம் சகியான்

இந்தியா, நவம்பர் 28, 1908

# ஸ்ரீ சிதம்பரம் பிள்ளை
# கோயமுத்தூர் ஜெயில் கலகத்தைப் பற்றிச் சொல்லிய சாக்ஷியம்

கோயமுத்தூர் ஜெயிலிலே சில வாரங்களின் முன்பு நடந்த கலகத்தின் சம்பந்தமாக ஜில்லா ஜட்ஜின் கோர்ட்டிலே ஸ்ரீ சிதம்பரம் பிள்ளை 'டிபன்ஸ்' தரப்பில் சாக்ஷியம் சொல்லி யிருக்கிறார். அதனை முழுமையும் மொழிபெயர்த்து மற்றொரு பக்கத்திலே பிரசுரம் செய்திருக்கிறோம். அதை நேயர்கள் மிகவும் ஆவலுடன் படிப்பார்களென்பதில் சந்தேகமில்லை. ஸ்ரீமான் சிதம்பரம் பிள்ளை தாம் இத்தனை பெரிய கஷ்ட தசையிலிருக் கும் போதுகூட உலகத்தார் படும் கஷ்டங்களைப் பார்த்து நெஞ்சிரங்குதலாகிய அவருடைய இயற்கை எப்போதுமிருந்தது போலவே, சிறிதேனும் அளவு குறையாமலிருக்கிறது. கோயமுத் தூர்ச் சிறைச்சாலையின் நிலைமையைப் போலவேதான், பிரிட் டிஷ் இந்தியாவிலுள்ள மற்றெல்லாச் சிறைச்சாலைகளிலும் இருக்கக் கூடுமென்று நாம் ஊஹிப்பது தவறாக மாட்டாது. அந்தச் சாக்ஷியத்திலே சொல்லப்பட்டிருக்கும் விவரங்களைப் படிக்கும் போது ஒவ்வொரு உண்மையான பாரதவாஸியினு டைய நெஞ்சமும் கொதிப்படையத் தக்கதாயிருக்கிறது. இது நிற்க.

இனி ஜெயில் வார்டர் ஒருவன் ஸ்ரீ சிதம்பரம் பிள்ளையைச் சிறிது அவமதிப்பாக நடத்த ஆரம்பித்த பொழுது, அவனுக்கு அவர் கொடுத்த எச்சரிக்கையும், கோர்ட்டிலே சர்க்கார் வக்கீல் சொல்லிய சில அதிகப் பிரசங்கித்தனமான வார்த்தைகளுக்குப் பிள்ளையவர்கள் கொடுத்த மறுமொழியும் ''அரைக்கினும் காரகில் பொல்லாங்கு கமழாது, உருக்கினுஞ் செம்பொன் தன்சுடர் குன்றாது'' என்ற பெரியோர் வசனங்களுக்குத் தக்க திருஷ்டாந்தமாகின்றன. ஸ்ரீ சிதம்பரம் பிள்ளை கைதியாயிருக்கும் போதுகூட, அவர் கொண்டிருக்கும் மன நிலைமையுடன், நம் போலிகளின் மனநிலையை ஒப்பிட்டு நோக்குமிடத்து நமக்குப் பின்வரும் தாயுமானவர் பாடல் நினைப்பிற்கு வருகின்றது.

கலங்காத நெஞ்சுடைய ஞானதீரர்
கடவுளுன்னைக் காணவே காயமாதி
புலங்கானார், நானொருவன் ஞானம்பேசிப்
பொய்க்கூடு காத்ததென்ன புதுமை கண்டாய்!

இந்தியா, டிசம்பர் 12, 1908

# ஸ்வதந்திர தாகம்

## (கண்ணிகள்)

1. தண்ணீர்விட் டோவளர்த்தோம்? சர்வேசா, இப்பயிரைக்
கண்ணீரால் காத்தோம்; கருகத் திருவுளமோ?
2. எண்ணமெலா நெய்யாக, எம்முயிரி னுள்வளர்ந்த
வண்ணவிளக் கிஃது மடியத் திருவுளமோ?
3. ஓரா யிரவருட மோய்ந்து கிடந்தபினர்
வாராது போலவந்த மாமணியைத் தோற்போமோ?
4. தர்மமே வெல்லுமெனுஞ் சான்றோர்சொற் பொய்யாமோ?
கர்ம விளைவுகள்யாங் கண்டதெல்லாம் போதாதோ?
5. மேலோர்கள் வெஞ்சிறையில் வீழ்ந்து கிடப்பதுவும்
நூலோர்கள் செக்கடியில் நோவதுவுங் காண்கிலையோ?
6. எண்ணற்ற நல்லோ ரிதயம் புழுங்கியிரு
கண்ணற்ற சேய்போற் கலங்குவது காண்கிலையோ?
7. மாதரையு மக்களையும் வன்கண்மை யாற்பிரிந்து
காத லிளைஞர் கருத்தழிதல் காணாயோ?
8. எந்தாய்நீ தந்த இயற்பொருளெ லாமிழந்து
நொந்தார்க்கு நீயன்றி நோவழிப்பார் யாருளரோ?
9. இன்பச் சுதந்திரநி னின்னருளாற் பெற்றதன்றோ?
அன்பற்ற மாக்க ளதைப்பறித்தார் காவாயோ?
10. வானமழை யில்லையென்றால் வாழ்வுண்டோ? எந்தை சுயா
தீனமெமக் கில்லையென்றால் தீனரெது செய்வோமே?
11. நெஞ்சகத்தே பொய்யின்றி நேர்ந்ததெலா நீதருவாய்
வஞ்சகமோ, எங்கள் மனத்தூய்மை காணாயோ?
12. பொய்க்கோ வுடலும் பொருளுயிரும் வாட்டுகிறோம்?
பொய்க்கோ தீராது புலம்பித் துடிப்பதுமே?
13. நின்பொருட்டு நின்னருளால் நின்னுரிமை யாம் கேட்டால்
என்பொருட்டு நீதான் இரங்கா திருப்பதுவே?
14. இன்று புதிதா யிரக்கின்றோ மோ? முன்னோர்
அன்றுகொடு வாழ்ந்த அருமையெலா மோராயோ?
15. நீயும் அறமு நிலைத்திருத்தல் மெய்யானால்
ஓயுமுன ரெங்களுக்கிவ் வோர்வரநீ நல்குதியே.

இந்தியா, டிசம்பர் 19, 1908

பாரதியின் 'ஜன்ம பூமி' யில் (1909) இப்பாடல் பின்னர் வெளியாகியுள்ளது. அதற்கும், 'இந்தியா' இதழில் வெளி வந்த வடிவத்திற்கும் இடையே வேறுபாடுகள் சில காணப் படுகின்றன. அவையாவன:

கண்ணி (6) கண்ணற்ற சேய்போற் கலங்குவதுங் காண் கிலையோ?

(9) இன்பச் சுதந்திர நின் இன்னருளாற் பெற்ற தன்றோ?

(13) நின்பொருட்டு நின்னருளால் நின்னுரிமை யாங் கேட்டால்.

இப்பாடலில் பல இடங்களில் பன்மை விரவிவந்தாலும், வ.உ.சி. செக்கிழுத்ததை மனத்தில் கொண்டே பாரதியார் இதனை எழுதினார் எனலாம்.

*14-11-1908* 'இந்தியா' இதழில் பின்வரும் செய்தி வெளியானது:

ஐயோ! உனக்கு இரங்குவார் யாருமில்லையா?

ஸ்ரீமான் சிதம்பரம் பிள்ளையின் தர்ம பத்னியாகிய ஸ்ரீமதி மீனாக்ஷியம்மாள் கோயமுத்தூரிலிருந்து 'ஹிந்து' வுக்குத் தந்தி கொடுத்திருப்பது — ''தீபாந்திர சிக்ஷை விதிக்கப் பெற்ற என் கணவருக்கு முதல் மாதங்களில் கடுங்காவலுக்கு உட்பட்டவர்களுக்குள்ள கடுஞ்சிக்ஷை கிடையாது. அப்படியிருந்தும் அவரை எண்ணெய்ச் செக்கில் எரிகிற வெயிலில் காய்ந்த கல்லையும் கட்டையையும் தள்ளிப் பகலெல்லாம் வேலை செய்யச் செய்திருக்கிறார்கள். அவர் லகுவாய் நடக்கக் கூடாவண் ணம் கால்களில் ஒரு பெரிய இரும்புச் சங்கிலியைப் பூட்டி விட்டார்கள். சிக்ஷையை வெண்காவலாகவா யினும் மாற்ற வேண்டுமென்று 'சக்கரவர்த்தி'க்குத் தந்தி கொடுத்திருக்கிறேன். இதுவரை பதில் இல்லை. இங்கே இப்படிக் கொடூரமாக ஹிம்சைப் படுத்தித் தொந்தரிக்கா மல் உடன் தீபாந்திரத்திற்குக் கப்பலேற்றி விடவேணு மென்று நினைக்கிறேன்.''

இவ்வறிக்கை வெளியான பிறகு *28-11-1908* 'இந்தியா' இதழில் 'தேசபக்தர் ஸ்ரீ சிதம்பரம் பிள்ளை' என்ற தலைப்பில் வ.உ.சி. செக்கிழுத்தது பற்றிக் கட்டுரை வெளியானது. (இக்கட்டுரை இந்நூலில் சேர்க்கப்பட்டுள்ளது - பக்கம் 76). இதைத் தொடர்ந்து 'தண்ணீர் விட்டோ வளர்த்தோம்' பாடல் *19-12-1908* 'இந்தியா' இதழில் வெளிவருகிறது. இந்த வரிசையைப் பார்க்கையில் வ.உ.சி.யை மனத்தில் கொண்டே பாரதியார் இப்பாடலை எழுதினார் என்பது புலப்படும்.

## தூத்துக்குடி சுதேசியக் கப்பல் கம்பெனி

சுதேசிக் கப்பல் பொது ஜன சகாயம் என்ற காற்று வீசாதபடியால் மேலோட்டமில்லாமல் தள்ளாடிக் கொண்டிருக்கிறது. இவ்வளவு சிரமப்பட்டு நல்ல நிலைக்கு வந்த கம்பெனி இன்னும் சுமார் 2 லக்ஷம் ரூபாய் எங்கேனும் கிடைக்குமானால் பிறகு எக்காலத்திலும் மரண பயமின்றி ஸ்திரமாயிருக்கும்.

இப்போது ஓர் சில சில்லரைத் தொந்தரவுகள் இருப்பதாகக் கேள்வி. இவற்றைக் கம்பெனிப் பொறுப்பாளிகள் க்ஷணத்திலே நிவிருத்தி செய்து விடக்கூடும். ஆனால், அப்போதப்போது வரும் தொந்தரவுகளை அப்போதப்போது சிரமப்பட்டு நீக்கிக் கொண்டிருந்தால் போதுமா?

இன்னும் சில வாரங்கள் கழித்து மறுபடியும் ஏதேனும் ஓர் கஷ்டம் நேரிடும். இப்படி நித்திய கண்டமாக எவ்வளவு காலம் நடந்து வரமுடியும்? ஒரே மொத்தமாக இரண்டு மூன்று மாதங்களில் 2 லக்ஷம் ரூபாய் வந்தாலொழியக் கம்பெனிக்கு ஸ்திர ஜீவன் உண்டாக வழியில்லை. இந்த 2 லக்ஷம் எங்கிருந்து வரும்? நாட்டுக் கோட்டைச் செட்டிமார் கொடுப்பார்களா? வீண் புகழுக்கும் ஏமாற்றும் வக்கீல்களுக்கும் சோம்பேறிச் சத்திரங்களுக்கும் கொடுப்பார்கள். ஜமீந்தார்களிடத்திலிருந்து வருமா? தாசிகளுக்கும் கள்ளுக்கடைக்கும் டம்பத்திற்கும் கலெக்டர் விருந்துக்குமே ஜமீந்தார்களின் பணம் அர்ப்பிதமாயிருக்கின்றது. சாவுக்கார்கள், மிராஸ்தார்கள், உயர்ந்த உத்யோகஸ்தர்கள், பிரபுக்கள் எல்லா ஸ்வாமிகளும் ஒன்று போலவேதான். இவர்களெல்லாம் தேசத்திலிருந்து பணம் பறித்துத் தமது வயிற்றிலே போட்டுக் கொள்வார்களேயன்றித் தேச நன்மைக்கு அரைக்காசு கூட விரயம் செய்ய மாட்டார்கள். இவர்களையெல்லாம் நம்புவதில் பயனில்லை.

ஏழைகள், அன்றாடகம் ஜீவனம் செய்வோர், வக்கீல் குமாஸ்தாக்கள், சொற்பத் தொழிலாளிகள் ஆகிய நாமெல்லோருமே சேர்ந்து இந்தப் பெரு முயற்சியை அழிந்துவிடாமல் காப்பாற்ற வேண்டும். நம்மையெல்லாம் நம்பித்தான் சிதம்பரம் பிள்ளை இந்தக் கம்பெனியை ஆரம்பித்தார். பணமெல்லாம் நம்மிடத்திலேதான் வாங்கினார். அவரும் நம்மைப் போன்ற ஏழையே. ஜமீந்தார்கள், பிரபல ஸாவுகார்கள் இவர்களுடைய முகத்திலேயே அவர் விழிப்பது வழக்கமில்லை. நாம்தான் ஒரே ஊக்கமாக மறுபடியும் மூச்சைப் பிடித்துக்கொண்டு 'ஏலேலோ' பாடிக் கப்பலை மேலே அபிவிருத்தியடையும்படி தள்ள வேண்டும். இந்த உபந்யாசம் எழுதும் நாம் மிகுந்த ஏழை. எனினும் நமது சொற்ப வரும்படியிலிருந்து கம்பெனி ஏஜெண்

டாகிய தூத்துக்குடி வக்கீல் வெங்கட்டராமய்யரிடம் ரூபாய் 5 கொடுத்திருக்கிறோம். இதற்கு ரசீது வாங்கவில்லை. ரசீது நமக்கெதற்கு? தேசம் வாழ்ந்தால் போதாதா? நமது ஜாதீய கவுரவத்திற்கு நாசம் வராமலிருந்தால் போதாதா? தூத்துக்குடி கம்பெனி நமது முதற் பெருந்தொழில் முயற்சி. இதைக் கைவிட்டுவிட்டால் நம்மைப் பிறகு உலகத்தில் யாரும் நம்பவே மாட்டார்கள். உலகத்தாரெல்லாம் சிரிப்பார்கள். நம்மை நாமே நம்பாத ஸ்திதிக்கு வந்துவிடும். ஆகையால் இதைப் படிக்கும் ஒவ்வொருவரும் எழுதுபவரைப் போலவே (கப்பல் காரியதரிசிக் கேனும் 'இந்தியா' ஆபீஸ் ஸ்ரீநிவாஸாசாரியாருக்கேனும்) இந்த க்ஷணமே தமது கையிலகப்பட்டதை - அது அரைக் காசாயிருந்தாலும் சரி - அனுப்பி நமது மாதாவின் மானத்தைப் பாதுகாக்க வேண்டும்.

□ □ □

தமிழ் நாட்டிலே 160 லக்ஷம் ஜனங்கள் இருக்கிறார்கள். இதில் 159 $^1/_2$ லக்ஷத்தைக் கழித்து விட்டுப் பாக்கி அரை லக்ஷம் ஜனங்கள் தலைக்கு 4 ரூபாய் விழுக்காடு கொடுக்கும் பக்ஷத்தில் இந்த சுதேசிக் கப்பல் கம்பெனியின் நோக்கம் நிறைவேறிவிடும்.

நாம் மேற்கூறப்பட்ட ஆலோசனையைப் பற்றிக் கம்பெனி பிரதிநிதியாகிய ஸ்ரீ வெங்கட்டராமய்யரிடம் பிரஸ்தாபித்தோம். அவர் ''வெறும் இனாமாகக் கம்பெனியார் பணம் வாங்கிக் கொண்டு ரசீது கூடத் தராமலிருப்பது வியாபார முறையாக மாட்டாது. இவ்வாறு சேரும் பொது நிதியை நீங்கள் கம்பெனியா ரிடம் மொத்தமாகக் கொடுத்து, அதைச் சில ''ட்ரஸ்டி''களின் மேற்பார்வைக்குள் விட்டுவிட வேண்டும். கம்பெனியார் அதைப் பங்குப் பணமாகப் பாவித்து அதற்குள்ள லாபத்தை நமது மாணாக்கர்களை ஜப்பானுக்கனுப்பல் முதலிய முக்கிய விருத்தி களிலே செலவிடும் படி ஏற்பாடு செய்யலாம்'', என்று சொல்லு கிறார். எப்படி ஏற்பாடு செய்தாலுமே சரி. அதைப் பற்றியெல் லாம் நமக்கு கவனமில்லை.

சுதேசியக் கப்பல் கம்பெனிக்குப் பணம் போய்ச் சேர வேண்டும். இல்லாவிட்டால் நமது ஜாதீய மானம் அழிந்து போய் விடும். கிராமங்களில் வசூலாகும் மொத்தத் தொகை களைப் பற்றிய கணக்கு ''இந்தியா'' பத்திரிகைக்கு அனுப்பப்பட வேண்டும். நமது ஆபீஸ் ஸ்ரீ ஸ்ரீநிவாஸாசாரியார் தனியாக ஒரு நிதி சேகரிக்கிறபடியால் அவர் பெயருக்குப் பணம் அனுப்ப விரும்புபவர்கள் அவ்வாறே செய்யலாம். இதை ஓர் பாங்கியில் அப்போதப்போது போட்டு வைத்துக் கொஞ்சம் பெருந்தொகை

யானவுடன் தூத்துக்குடிக்கு அனுப்பக்கூடும். எத்தனையாயிர விதமான ஏற்பாடு செய்வீர்களோ, நமக்குத் தெரியாது. எப்படியாயினும் 3 மாதங்களுக்குள்ளே 2 லக்ஷம் தூத்துக்குடியில் சுதேசியக் கப்பல் ஆபீஸுக்கு வந்து விட வேண்டும்.

''நாஷனல் பண்ட்'' என்ற சுதேசிய நிதி சென்னப் பட்டணத்தில் சேர்க்கப்படுகின்றது. அதிலிருந்து தூத்துக்குடி சுதேசியக் கப்பல் கம்பெனிக்கு என்ன உதவி செய்யப்பட்டிருக்கிறதென்பதை நாம் அறிய விரும்புகின்றோம். இவ்விதமான ஜாதீய காரியங்களுக்கு உபயோகப்படாமல் போகும் விஷயத்தில் அந்தப் பணத்தை எதற்காகச் சேர்க்கிறார்கள்?

□ □ □

சென்னைப் பட்டணத்தில் ஸ்ரீ வி. கிருஷ்ணசாமி அய்யர் முதலியவர்கள் 'வர்ஜனம்' என்ற சொல்லே கலக்காத சுத்த சுதேசியத்துக்கே தாம் அனுகூலமாயிருப்பதாகச் சொல்லுகிறார்கள். அவர்கள் கையில் ஜனங்களிடமிருந்து திரட்டப் பெற்ற பணம் மிகுதியாக இருக்கிறது. கோர்ட்டுக்கு அடிக்கடி வரக்கூடிய வியாபாரக் கூட்டத்தார் முதலியவர்கள் மீது அவர்களுக்கு மிகச் செல்வாக்கிருக்கிறது. தூத்துக்குடி கம்பெனி சுத்தமான சுதேசியந் தானே? இதற்கு அவர்கள் குறை வராமல் ஏன் பார்க்கக் கூடாது? வீண் பேச்சு! இந்த நடிப்புக்காரர்களிடம் சகாயம் எதிர்பார்ப்பது பிழை. தேசம் ஏழைகளின் தேசம். இந்த முயற்சி ஏழைகளின் முயற்சி. இதற்கு ஏழைகளாகிய நாமெல்லோருமே துணை செய்ய வேண்டும்.

இந்தியா, சனவரி 30, 1909

# ஸ்ரீமான் சிதம்பரம் பிள்ளை

சென்ற மீ 15௳ கோயமுத்தூர் ஜெயிலில் ஓர் கதை நடந்தது. அதாவது அவ்விடம் முன் நடந்த கலகத்தில் ஸ்ரீமான் சிதம்பரம் பிள்ளையும் சேர்ந்தவராகவிருக்கலாமென்றும் அவருக்கு வெளியிலிருந்து ஏதோ ரகசியக் கடிதங்கள் வருகின்றனவென்றும் அங்கிருக்கும் வார்டரில் ஒருவன் அவருக்கு உடந்தையாயிருந்து வேலை செய்கிறானென்றும் சந்தேகித்தார்களாம். அதை அறியும் பொருட்டு, அவ்வார்டருக்கு இரவு டியூடியைக் கொடுத்து அவன் உள்ளே போகும் போது மடியைச் சோதித்தாகவும், அப்பொழுது அவனிடத்தில் மூன்று கடிதங்கள் அகப்பட்டதாகவும், அதில் ஒன்று அம்மகானின் மனைவியிடத்தினின்றும், இரண்டாவது அவ்வூரிலுள்ள ஓர் ஏஜெண்டுவிடமிருந்தும், மூன்றாவது துண்டுக் கடிதத்தில் ஏதோ ரூபாய் 10 முன்பணம் பெற்றுக் கொண்டதாகவும், இன்னும் 10 ரூபா வேண்டுமென்று குறிப்பிட்டிருந்ததாகவும் இருந்தது. இம் மூன்று கடிதங்களிலும் கையொப்பமிட்டிருக்கவில்லையென்றும் தெரிகிறது. முதல் கடிதத்தில் அவரது மனைவியார் குடும்பச் சமாசாரத்தைக் குறித்தும் அவரிடமிருந்து வந்த கடிதத்தைப் பெற்றுக் கொண்டதாகவும் எழுதியிருக்கிறதாம். இரண்டாவதில் 'மூவரின் அப்பீலைப் பற்றிக் கவனிக்கிறேன், உமது கடிதம் சேர்ந்தது. சில்லரை விஷயங்களையும் கவனிக்கிறேன்' என்றிருந்ததாம். ஆனால் வேறு ஒன்றும் கலக வழக்குச் சம்பந்தமாய் காணப்படவில்லையாம்.

**இந்தியா**, *பிப்ரவரி 6, 1909*

வ.உ.சி. கோவைச் சிறையில் அடைபட்டிருந்த போது கடிதங்கள், தின்பண்டங்கள், பத்திரிகைகள், கமுக்கமாகக் கடத்தப்பட்டன. ராமையா கவுண்டர் என்ற வார்டர் அவ்வாறு வ.உ.சி.க்காக அவற்றைக் கடத்தும் போது கையும் களவுமாகப் பிடிபட்டார். மூன்று கடிதங்கள் அவரிடமிருந்து கைப்பற்றப்பட்டன. இந்நூலாசிரியர் தொகுத்த 'வ.உ.சி. கடிதங்கள்' எனும் நூலில் அவை இடம் பெற்றுள்ளன.

இந்தியா, பிப்ரவரி 13, 1909 இதழில் வெளியான கருத்துப்படம்.

# இந்தியா.

சனிக்கிழமைதோறும் வெளியாகும்.

[illegible]





[illegible]

# தூத்துக்குடி சுதேசிக் கப்பல்

## சித்திரம்

பாரத மாதா - இதற்கு நீங்களெல்லோரும் உதவி புரியுங்கள். இது க்ஷேமமடைய வேண்டுமென்பது எனது சித்தம். இந்த முயற்சி மென்மேலும் அபிவிருத்தி யடைவதனின்றும் எனக்குப் பல சுகங்களுண்டாகும். இது வாழ்க.

ஜனங்கள் - ததாஸ்து!

## சித்திர விளக்கம்

பாரத மாதா நமது ஜனங்களை நோக்கி சுதேசியக் கப்பலுக்கு உதவி செய்யும்படி கட்டளையிடுவதாக இவ்வாரத்தில் சித்திரம் பதிப்பிக்கப்பட்டிருக்கிறது. தெய்வம் முன்னே வந்து நின்று பேசுவதில்லை. ஹிருதயத்தில் பேசும். அது போலவே நமது மாதா நம்மவர்களின் ஹிருதயத்தில் பேசத் தொடங்கிவிட்டாள். நாம் சரியான படி செவி கொடுத்து அவள் கட்டளைப்படி நடக்க வேண்டும்.

புதுச்சேரியில் நமது ஆபீஸைச் சேர்ந்த சில வாலிபர்கள் சுதேசியக் கப்பல் தர்மநிதியின் பொருட்டுப் பணம் சேகரிக்க ஒரு உண்டியல் பெட்டி கொண்டு சில கடைக்காரரிடம் போனார்கள். அப்போது வீதியில் ஒரு எளிய ஸ்திரி இவர்களிடம் ''எதற்கையா பணம் வசூலிக்கிறீர்கள்?'' என்று கேட்டாள். இவர்கள், ''தூத்துக்குடியிலே ஓடும் சுதேசியக் கப்பலுக்கு'' என்றார்கள். உடனே அவள் மன மகிழ்ச்சியுடன் ஒரு காசு பெட்டிக்குள் போட்டுவிட்டு, ''ஐயோ பாவம், வேலை செய்யுங்கள், உங்கள் காரியம் கைகூடும்'' என்று சொன்னாள். மற்றொரு ஏழை ஸ்திரி இதைப் பார்த்து, ''ஐயா, என்னிடம் காசில்லை. விலைக்குக் வாங்கிக் கொண்டு வந்தேன். கத்தரிக்காய்கள் இருக்கின்றன. அவற்றை வாங்கிக் கொள்ளுவீர்களா?'' என்றாளாம்.

அதற்கு நமது வாலிபர்கள் ''வேண்டாமம்மா! உன் போன்ற நல்ல சித்தமுடையவர்களின் ஆசீர்வாதமிருந்தாலே எங்கள் முயற்சி வெற்றியடைந்து விடும். நீ ஏழை. உன் குழந்தைகளுக்குக் கொண்டு போகும் காய்கறியை நாங்கள் வாங்கலாமா?'' என்று சொல்ல அந்த ஸ்திரீ அன்புடன் வாழ்த்திவிட்டு சென்றாள்.

இதனையெல்லாந்தான் நாம் 'மாதாவின் கட்டளை' என்கிறோம்.

**இந்தியா, *பிப்ரவரி 13, 1909***

முன் பக்கத்திலிருக்கும் கருத்துப்படத்துக்குப் பாரதி எழுதிய சித்திர விளக்கம் இது.

## தூத்துக்குடி சுதேசியக் கப்பல்
### (தரும நிதி)

'காலியா' என்ற கப்பல் சென்னப் பட்டணத்தில் சில தேசாபிமானிகளின் முயற்சியால் முற்றிலும் கடனிலிருந்து மீட்கப்பட்டு விட்டதென்ற முன்னமேயே சொல்லியிருந்தோம். நாம் விளம்பரம் செய்திருந்த தர்ம நிதிக்குப் பணம் வந்து கொண்டேயிருக்கின்றது. அதன் கணக்கு மற்றொரு பக்கத்திலே கொடுத்திருக்கிறோம். நம்மிடம் வருவது போலவே தூத்தக்குடி யில் காரியதரிசியிடம் வரும் பணத்திற்கும் நமது பத்தரிகையிலே கணக்குப் பிரசுரம் செய்யும்படி ஏற்பாடு செய்திருக்கிறோம்.

□ □ □

இந்தத் தரும நிதி கொஞ்சம் வளர்ந்தவுடனே பங்குகளாகக் கம்பெனிக்குப் போகும். அப்பங்குகள் தமிழ்நாட்டு மஹாஜனங் களுக்குரியவை. நிதிக்குப் பணம் கொடுத்தவர்களிலே முக்கிய மான சிலரை ட்ரஸ்டிகளாக நியமித்து, அப்பங்குகளினால் வரக் கூடிய லாபத்தை, தொழில் நூற்பயிற்சி முதலிய பொது விஷயங் களுக்குச் செலவிடத் தீர்மானித்திருக்கிறது. நமது பத்திரிகையில் பிரசுரமான முதல் வியாசத்தைத் துண்டுப் பத்திரங்களாக அச்சடித்து நாடு முழுவதும் பரப்ப வேண்டுமென்பது எமது கருத்து. அந்தத் துண்டுப் பத்திரங்கள் வேண்டுபவர்கள் நமது ஆபீசுக்குப் எழுதிப் பெற்றுக் கொள்ளலாம்.

□ □ □

இரண்டு மாதத்திற்குள் இரண்டு லக்ஷம் வர வேண்டும். அதை நினைக்கும் போது இந்த இரண்டு வாரங்களில் சேர்ந்த தொகை மிகச் சிறியது. அதற்குக் காரணம் இதுவரை விளம்பரங் கள் திசைக்குத் திசை அனுப்பப்படாமலிருப்தேயாகும். அடுத்த வாரத்தில் இத் தொகை மிகப் பெருக்கமடைந்திருக்குமென்று நிச்சயிக்கிறோம். மேலும் ''அல்பாரம்ப க்ஷேமகர' என்று பெரியோர் சொல்லியிருக்கிறார்கள்.

□ □ □

பொது ஜனங்களுக்கு சுதேசீயக் கப்பல் இதுவரை சில மாதங்கள் ஓடியிருப்பதிலிருந்து எவ்வளவு லாபம் தெரியுமா? நமது கம்பெனியாரும் இதையெதிர்த்துப் போட்டிக் கம்பெனியா ரும் சாமான் கூலியும், யாத்திரைக் கூலியும் குறைவுபடுத்தியதி

லிருந்து மட்டும் பொது ஜனங்களுக்கு சுமார் 10 லக்ஷம் ரூபாய் லாபமென்று கணக்கிடப்படுகின்றது. இதைத் தவிர இம்முயற்சி பலிதமாவதனால் நமது நாட்டிற்கு நானாவிதங்களிலும் ஏற்படக் கூடிய நன்மைகள் அளவிட்டுக் கூற முடியாதன. இதற்கு நாம் ஒவ்வொருவரும் தலைக்கு 1 ரூபாயேனும் கொடுப்பது பெரிதா?

இந்தியா, *பிப்ரவரி 13, 1909*

*வ.உ.சி. சிறைப்பட்டதும் சுதேசி கப்பல் கம்பெனி வீழ்ந்து விட்டது. 1908 மார்ச் முதல் 1909 மார்ச் முடிய அக்கம்பெனி ரூ. 4,59,989 அணா 5 பைசா 10 நஷ்டமடைந்தது. 'இந்தியா', 4 செப்டம்பர் 1909 இதழில் வெளிவந்த விவரம் வருமாறு:*

> *1909-ம் ௵ மார்ச்சு மீ 31௳ வரையில் எடுத்த கோஷ்பாரா கணக்கு மூலதனம்: பங்கு 1-க்கு ரூபாய் 25 வீதம் 80,000 பங்குகளுக்கு ரூபாய் 20,00,000. இன்னும் சேராத மீதி பங்குகளின் தொகையும் தவணையில் செலுத்தப்படாத பணமும் ரூ. 12, 33, 205. பூறா வசூலான தொகை மொத்தம் ரூ. 7,66,795. செல்லும் புள்ளிகளும் ரூ. 1,96,800-0-8. திட்டக் கணக்கு ரூ. 28-2-7. ஆக மொத்தம் ரூ. 12,63,623-3-3.*
>
> *இதற்கு சொத்தும் நிலுவையும்: காலியா, லெவோ (கப்பல்), மிரண்டா லாஞ்சு எனும் புகைப் படகு, படகு ஆபீஸ் சாமான்கள் எல்லாம் சேர்ந்து ரூ. 6,50,153-13-4. கம்பெனிக்கு பல புள்ளிகளிலிருந்து வர வேண்டியது ரூ. 88,413-1-1. கையிருப்பு ரொக்கம் ரூ. 5-10-5. ஆரம்பச் செலவு ரூ. 65,601-4-7. லாப நஷ்டக் கணக்கு ரூ. 4,59,989-5-10. ஆக மொத்தம் ரூ.12,63,623-3-3.*

*மேலே கொடுக்கப்பட்டுள்ள கணக்கு, சுதேசி ஸ்டீம் நாவிகேஷன் கம்பெனியின் 31-3-1909 ஆம் தேதிய ஐந்தொகை ஆகும்.*

## ''இந்தியா'' சுதேசிக் கப்பல் தருமநிதி

கங்கை வெள்ளம் வேண்டுமென்று வானத்தை அண்ணாந்து பார்த்துக் கொண்டிருக்கும் பகீரதன் தலைமீது ஒரு சிறிய தூற்றல் உதிர்ந்தது போலச் சென்ற 10 தினங்களில் நமது சுதேசிக் கப்பல் தரும நிதிக்குக் கீழே குறிப்பிட்டிருக்கும் அதி சொற்பமான தொகை சேர்ந்திருக்கிறது. ஆனால், இது பெரும்பாலும் புதுச்சேரியிலே மட்டும் சேர்த்தது. அரையணாவும் காலணாவு மாக வசூலிக்கப்பட்டது. அடுத்த வாரத்தில் இன்னும் கொடுப்ப தாகப் பல நண்பர்கள் வாக்களித்திருக்கிறார்கள். வெளியூர்களுக்கு விளம்பரங்களும் மனிதர்களும் அனுப்பத் தாமதப்பட்டபடியால் சரியானபடி தொகை சேரவில்லை. எனினும், புதுச்சேரியைப் போல இத்தனை சொற்பத் தொகையேனும், தென்னிந்தியா விலுள்ள ஒவ்வொரு பட்டணத்திலும் கிராமத்திலும் வருமானால் நமது நோக்கம் 10 தினங்களில் கைகூடிவிடும். ஆரம்பத்தில் தூற்றல்களாக இருந்த போதிலும் பகீரதன் கொண்டிருந்த தெய்வ பக்தியால் அவனுக்குக் கங்காப் பிரவாஹம் வந்தே தீர்ந்தது. சுதேசிக் கப்பல் கம்பெனியார் பாரத நாட்டுப் பொது ஜனங் களிடம் அழியாத பக்தி பூண்டிருக்கிறார்கள். அவர்களுடைய எண்ணமும் நிறைவேறியே தீரும்.

வசூல் விபரம்
புதுச்சேரி

| | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|
| ஸி. சுப்பிரமணிய பாரதி | 5 | 0 | 0 |
| வந்தே - சுப்பிரமணிய அய்யர் | 1 | 0 | 0 |
| சண்முக நாடார் | 0 | 8 | 0 |
| குருசாமி நாயுடு | 1 | 0 | 0 |
| ஸா. குப்புசாமி அய்யர் | 10 | 0 | 0 |
| ஸா. சாம்பமூர்த்தி அய்யர் | 5 | 0 | 0 |
| சுந்தரமய்யர் | 0 | 2 | 0 |
| ராகவ செட்டி | 0 | 1 | 0 |
| கோவிந்தசாமிராஜுலு | 0 | 1 | 0 |
| துரைசாமி செட்டியார் | 0 | 1 | 0 |
| க.அ. முருகைய செட்டியார் | 0 | 1 | 0 |
| சிவசிதம்பரம் செட்டியார் | 0 | 1 | 0 |
| கந்தசாமி செட்டியார் | 0 | 1 | 0 |
| யாக்கோப் சேட் | 0 | 2 | 0 |
| கோவிந்த உடையார் | 0 | 1 | 0 |

| | | | |
|---|---|---|---|
| பா. இராமகிருஷ்ண நாயுடு | 0 | 1 | 0 |
| கோபால கிருஷ்ணசாமி செட்டியார் | 0 | 1 | 0 |
| லெ. ர. கோவிந்தசாமி செட்டியார் | 0 | 1 | 0 |
| பி. சாம்பசிவ நாயக்கர் | 0 | 4 | 0 |
| ஓர் சுதேசி | 0 | 4 | 0 |
| "இந்தியா" ஆபீஸ் சிப்பந்திகள் | 5 | 14 | 0 |
| பொ. கிருஷ்ணசாமி செட்டியார் | 0 | 4 | 0 |
| சின்னத்தம்பி செட்டியார் | 0 | 4 | 0 |
| ஸ்ரீ ராமய்யர் (மேலையூர்) | 10 | 0 | 0 |
| தேச பக்தர்கள் (2 பேர்) | 2 | 0 | 0 |
| துபாஷ் | 4 | 0 | 0 |
| டி. குப்புசாமி ஐயர் | 1 | 0 | 0 |
| முருகேசப் பிள்ளை | 2 | 0 | 0 |
| பழனி. சின்னயா நாயுடு | 10 | 0 | 0 |
| ராஜமய்யர் | 1 | 0 | 0 |
| ராமசந்திரய்யர் | 1 | 0 | 0 |
| சில்லரை வசூல் | 2 | 11 | 2 |
| தம்புசாமி நாயுடு | 0 | 2 | 0 |
| வெ.கு. முருகைய செட்டியார் | 0 | 1 | 0 |
| பார்த்தசாரதி பிள்ளை | 0 | 4 | 0 |
| ஆக மொத்தம் | 64 | 6 | 2 |

இந்தியா, பிப்ரவரி 13, 1909

| | | | |
|---|---|---|---|
| சென்ற வார வசூல் | 64 | 6 | 2 |
| ஸ்ரீ ஸ.குப்புசாமி ஐயர் கிடங்கு சிப்பந்திகள் | 13 | 0 | 0 |
| வையாபுரி கந்தசாமி செட்டியார் | 10 | 0 | 0 |
| தேச பக்தர்கள் | 7 | 8 | 0 |
| நா.ம.சுந்தரராமய்யர் அண்டு சன்ஸ் | 5 | 0 | 0 |
| ரா. கிருஷ்ணய்யர் | 1 | 0 | 0 |
| கே. ராமசாமி அய்யர் | 0 | 8 | 0 |
| ரெங்கநாதன் | 0 | 8 | 0 |
| என்.ஆர். குப்புசாமி | 0 | 8 | 0 |
| ந. கிருஷ்ணமாச்சாரியார் | 0 | 4 | 0 |
| | 102 | 10 | 2 |

இந்தியா, பிப்ரவரி 20, 1909

| | | | |
|---|---|---|---|
| முன் வசூல் | 102 | 10 | 2 |
| ஸ்ரீ கலவை சங்கர செட்டியார் | 4 | 0 | 0 |
| சைகோன் ஷாப் எல். அப்பாயி நாயுடு | 1 | 0 | 0 |
| சோமசுந்தரம் பிள்ளை | 0 | 4 | 0 |
| திருச்சி என். சுப்பராய நாயுடு | 2 | 0 | 0 |
| பிரெஞ்சு மாணாக்கர்கள் | 5 | 12 | 0 |
| இ.வி. கிருஷ்ணசாமி அய்யர் | 2 | 0 | 0 |
| மேலப்பாலையூர் கிருஷ்ணசாமி அய்யர் | 1 | 0 | 0 |
| ஷை எஸ். ராமய்யர் | 1 | 0 | 0 |
| ஷை சுப்பிரமணியய்யர் | 0 | 8 | 0 |
| கே.சிங்காரவேலுப் பிள்ளை | 0 | 8 | 0 |
| ராமசந்திரய்யர் | 0 | 4 | 0 |
| தியாகராஜப்பிள்ளை | 2 | 0 | 0 |
| எஸ். பஞ்சாபகேசய்யர் | 0 | 4 | 0 |
| வேதாந்த ராமானுஜாசாரியார் | 0 | 8 | 0 |
| எஸ்.கிருஷ்ணசாமி ஐயர் | 0 | 8 | 0 |
| ஸ்ரீநிவாசவரதாசாரியார் | 0 | 8 | 0 |
| போ. சேஷம் செட்டியார் | 0 | 8 | 0 |
| பிரம்பூர் திருவேங்கிடத்தய்யங்கார் | 0 | 4 | 0 |
| கோபாலசாமி செட்டியார் | 0 | 4 | 0 |
| நாலூர் துரைசாமி | 0 | 2 | 0 |
| இஞ்சிக்கொல்லை ரெகுநாத அய்யர் | 0 | 2 | 0 |
| கே.வி. தைலாலிட்சன் | 0 | 8 | 0 |
| டி. சாமினாதய்யர் | 2 | 0 | 0 |
| உமர்ஹத்தா ராவுத்தர் | 3 | 0 | 0 |
| டி.ஜே. ராமசந்திரய்யர் | 1 | 0 | 0 |
| ஓர் அபிமானி | 1 | 0 | 0 |
| நூர் மஹம்மது ஈசப் | 0 | 8 | 0 |
| சில்லரை வசூல் | 0 | 2 | 9 |
| ஓர் சுதேசி | 1 | 0 | 0 |
| ஆக மொத்தம் | 135 | 0 | 11 |

இந்தியா, பிப்ரவரி 27, 1909

| | | | |
|---|---|---|---|
| முன்வசூல் | 135 | 0 | 11 |
| சுப்பிரமணிய சாஸ்திரிகள் | 3 | 0 | 0 |
| வெ.கா. அண்ணாமலை செட்டியார் | 1 | 0 | 0 |

| | | | |
|---|---|---|---|
| கிருஷ்ணசாமிராவ் | 1 | 0 | 0 |
| வேணுகோபால் நாயுடு | 1 | 0 | 0 |
| அரசஞ்சண்முகனார் | 0 | 8 | 0 |
| ஓர் சந்நியாசி | 0 | 8 | 0 |
| மாணிக்கம் பிள்ளை | 0 | 8 | 0 |
| நாகப்ப செட்டியார் | 0 | 8 | 0 |
| ஆர்.வி. கோவிந்தசாமி நாயுடு | 0 | 4 | 0 |
| சத்யவாகீஸ்வரய்யர் | 2 | 0 | 0 |
| திருவேங்கடம் பிள்ளை | 0 | 8 | 0 |
| சபாபதி செட்டியார் | 0 | 4 | 0 |
| ராகவ பிள்ளை | 0 | 2 | 0 |
| தேச பக்தன் | 0 | 2 | 0 |
| சுந்தர முதலியார் | 0 | 4 | 0 |
| கோபால தேசிகாசாரியார் | 0 | 2 | 0 |
| தேச பக்தர்கள் | 1 | 4 | 0 |
| அ. வெங்கடேஸ்வரய்யர் | 0 | 8 | 0 |
| மகாமகம் வசூல் | 14 | 8 | 0 |
| ஆக மொத்தம் | 162 | 14 | 11 |

இந்தியா, மார்ச் 13, 1909

| | | | |
|---|---|---|---|
| முன் வசூல் | 162 | 14 | 11 |
| கதிரேசஞ் செட்டியார் | 5 | 0 | 0 |
| பீ. முகம்மது பாவாசா மரைக்கார் | 5 | 0 | 0 |
| மு.பெ.ரி. லட்சுமணன் செட்டியார் | 1 | 0 | 0 |
| அப்பாவு பிள்ளை | 0 | 4 | 0 |
| துளசிலால் | 0 | 4 | 0 |
| சொ. அண்ணாமலை செட்டியார் | 0 | 4 | 0 |
| செல்லப்ப செட்டியார் | 0 | 4 | 0 |
| பிச்சுவய்யர் | 0 | 4 | 0 |
| ராமஞ் செட்டியார் | 0 | 2 | 0 |
| லட்சுமி நாராயணய்யர் | 0 | 2 | 0 |
| பஞ்சுவய்யர் | 0 | 2 | 0 |
| எஸ். நரசிங்க முதலியார் | 0 | 8 | 0 |
| தேச பக்தர்கள் | 2 | 0 | 0 |
| அ. நரசிம்மய்யங்கார் | 0 | 4 | 0 |
| பெரிய சேஷராமய்யர் | 0 | 4 | 0 |
| பி. வெங்கிடராமய்யர் | 0 | 4 | 0 |

| | | | |
|---|---|---|---|
| வெங்கட்டராம செட்டியார் | 0 | 4 | 0 |
| யக்ஞ. வெங்கிட்டராம தீக்ஷதர் | 0 | 2 | 0 |
| பாலசுப்பிரமணிய குருக்கள் | 0 | 2 | 0 |
| வி. சாரநாதய்யர் | 0 | 2 | 0 |
| பெரிய விஸ்வநாதய்யர் | 0 | 2 | 0 |
| இஞ்சிக்கொல்லை சில்லரை வசூல் | 0 | 10 | 3 |
| சட்டநாத குருக்கள், சித்தம்பாழூர் | 0 | 4 | 0 |
| கிருஷ்ணய்யங்கார், திருச்சிறை | 0 | 4 | 0 |
| சாரநாதய்யங்கார் | 0 | 2 | 0 |
| எஸ். கிருஷ்ணசாமி அய்யங்கார் | 0 | 4 | 0 |
| அய்யாத்துரை உடையார் | 1 | 0 | 0 |
| வேலுப் படையாச்சி | 0 | 4 | 0 |
| சாமினாதப் படையாச்சி | 0 | 8 | 0 |
| கிருஷ்ணப் படையாச்சி | 0 | 8 | 0 |
| பெத்த பெருமாள் | 0 | 8 | 0 |
| பொந்தய அம்பலகாரன் | 0 | 4 | 0 |
| ஆத்தூர் பெரியதம்பி உடையார் | 1 | 4 | 0 |
| பெ. சாமிநாத உடையார் | 1 | 0 | 0 |
| கொ. வேம்பு உடையார் | 0 | 8 | 0 |
| அ. வேம்பு உடையார் | 0 | 4 | 0 |
| பெ. பொன்னுசாமி உடையார் | 0 | 4 | 0 |
| மகாலிங்கம் | 0 | 8 | 0 |
| அ. ராமசாமி அய்யர் | 1 | 0 | 0 |
| ராமசாமி அய்யர் | 0 | 4 | 0 |
| ரெங்கசாமி நயினார் | 1 | 0 | 0 |
| ஜ. இப்ராஹிம் ராவுத்தர் | 3 | 0 | 0 |
| சாமினாத செட்டியார் | 1 | 0 | 0 |
| ப. சையது ராவுத்தர் | 0 | 8 | 0 |
| இப்ராஹிம் ராவுத்தர் | 0 | 8 | 0 |
| கா. அகமத் சாகிபு | 0 | 8 | 0 |
| வீராசாமி படையாச்சி | 0 | 8 | 0 |
| சாமினாத படையாச்சி | 0 | 8 | 0 |
| அய்யாத்துரைப் பிள்ளை | 0 | 4 | 0 |
| காதர் பாச்சா சாகிபு | 0 | 4 | 0 |
| இ.முகம்மது சூலைமான் | 0 | 2 | 0 |
| எட்டையபுரம் வசூல் | 9 | 0 | 0 |
| ஆக மொத்தம் | 206 | 3 | 2 |

இந்தியா, மார்ச் 20, 1909

| | | | |
|---|---|---|---|
| முன் வசூல் | 206 | 3 | 2 |
| பி.கே. ஈஸிம்சா | 5 | 0 | 0 |
| ஆபத்துகாத்த நாராயணப் பிள்ளை | 3 | 0 | 0 |
| பி.டி. டேவிட் | 1 | 0 | 0 |
| உ.ச. சடைய பிள்ளை | 0 | 4 | 0 |
| உ.ச. ராமய்யர் | 0 | 2 | 0 |
| பி.ஜி. வெங்கிடசுப்பையர் | 0 | 2 | 3 |
| சில்லரை வசூல் | 0 | 2 | 3 |
| ஆக மொத்தம் | 215 | 13 | 8 |

இந்தியா, ஏப்ரல் 17, 1909

சென்ற ஏப்ரல் மீ 17வ எமது பத்திரிகையில் பிரசுரித்திருந்த மேல் கண்ட கம்பெனி நிதியின் வசூலித்த தொகையின் செலவு விவரம்.

| | | | |
|---|---|---|---|
| ஷேர்களுக்காக கம்பெனியாரிடம் கொடுத்தது | 180 | 3 | 6 |
| வசூலித்தவர்களின் சிப்பந்தி கமிஷன்; உண்டிப் பெட்டி செலவு | 22 | 2 | 2 |
| வசூலிக்காது நின்றுவிட்டது | 13 | 8 | 0 |
| ஆக மொத்தம் | 215 | 13 | 8 |

இந்தியா, ஆகஸ்டு 21, 1909

## ''செய்க பொருளை''

ஸ்வதந்திர முயற்சிக்கு அளவற்ற பொருள் இன்றியமையாத தாகும். நம் சொந்தமான கல்விச்சாலைகள், தொழிற்சாலைகள் முதலியவை ஏற்படுத்த வேண்டுமானால் அதற்கு ஏராளமான திரவியம் வேண்டும். திரவியம் இல்லாது போனால் ஸ்வதந்திர முயற்சியை இனிது நடத்த முடியாது. இடத்துக்கிடம் தடைப் படும், கண்ட இடங்களிலெல்லாம் முட்டுப்பாடுண்டாகும். இது ஒருண்மை. இதற்கு நேர் தலைகீழாக மற்றோருண்மை இருக்கின்றது.

அதாவது ஸ்வதந்திரமில்லாத நாட்டில் திரவியமுண்டாக்கு தல் கஷ்டம். ஸ்வதந்திரமில்லாத ஜனங்களுக்கு ஊக்கமிராது, உற்சாகமிராது, சக்தியிராது. இவர்கள் பொருள் தேடப்போன இடத்தில் எண்ணற்ற இடையூறுகள் உண்டாகும். பொருள் சேர்ப்பதற்கு அவசியமாகிய விடுமுதல் இவர்களிடமிராது. என்ன அவஸ்தை! பொருளில்லாவிட்டால் ஸ்வதந்திரம் இராது, ஸ்வதந் திரமில்லாவிட்டால் பொருள் வராது — என்ற ஸ்திதியிருந்தால் நாமென்ன செய்வது?

நெய்க்குத் தொன்னை ஆதாராமா, தொன்னைக்கு நெய் ஆதாரமா என்பது போல இந்த விஷயத்தில் வீண் யோசனை பண்ணிக் கொண்டிருந்தால் நமக்கு ஜாதீய நாசம் ஏற்பட்டுவிடும். நீச்சுப் பழக விரும்புவோன் நீச்சுத் தெரியாவிட்டால் ஜலம் அமிழ்த்திவிடுமே என்ற யோசனை செய்யாமல், துணிந்திறங்கி, எப்பாடுபட்டோ, திணறித் தண்ணீரைக் குடித்துக் கஷ்டமடைந்து கொஞ்சம் கொஞ்சமாகத் தேறுவதுபோல நாம் தேற வேண்டும்.

ஆரம்பத்திலே கூறப்பட்ட இரண்டுவித உண்மைகளையும் ஸமரஸப்படுத்தி நடத்திக் கொண்டு போக வேண்டும். பலர் பொருள் தேடுதற்குரியனவாகிய கூட்டு முயற்சி, நவீனக் கருவிகளைக் கையாடுதல், பிறதேச யாத்திரை, தொழிற்கல்வி முதலிய சாதனங்களைக் கடைப்பிடித்தொழுக வேண்டும். இதுவே பெரும்பான்மையோர் செய்ய வேண்டிய கடமை. வேறு சிலர் பொருளையே திரணமாகக் கருதி, தாம் ஏழைமை நிலையிலேயிருந்து கொண்டு ஜனங்களுக்கு ஸ்வதந்திர மார்க்கத் தின் தத்துவார்த்தங்களை போதனை செய்தல் முதலிய உபாயங் களால் வழிகாட்டிக் கொடுக்க வேண்டும். ஸ்வந்திர முயற்சி என்ற மரக்கலத்திற்குத் திசைகாட்டும் நட்சத்திரமாக போதனை முதலியவற்றையும், பாறைகளிலே மோதிவிடாமல் ஸாமர்த்தியத் துடன் நடத்திச் செல்லும் சுக்கானாகப் பொருள் வலிமையையும் கூறலாம்.

சுதேசியக் கப்பல் தர்மநிதிக்கு இரண்டு லட்சம் ரூபாய் வேண்டுமென்று நாம் திரிகரண சுத்தியுடன் ஜனங்களிடம் விண்ணப்பஞ் செய்தோம். இரண்டு லக்ஷம் கேட்டதற்கு இரண்டு நூறு வந்திருக்கிறது. என்ன செய்யலாம்! பொது ஜனங்கள் இந்நாட்டிலே பரம ஏழைகள். அவர்களுக்கு இவ்வித புண்ணியத் தொழில்களிலே அபிமானமிருந்த போதிலும், அவர்கள் உதவி செய்யத் திறனில்லதாவர்களாயிருக்கிறார்கள். செல்வர்களைப் பற்றியோ யோசிக்க வேண்டியதில்லை. செல்வம் உணவைப் போன்றது. புதிதாக அதைத் தேடி உழைப்போர்களுக்கு அது நன்மையையும் க்ஷேமத்தையம் உண்டாக்கும். ஒருமுறை சேர்த்து வைக்கப்பட்டதை அப்போதப் போது ரத்தமாகப் பாதி உடலிற் பரவச் செய்தும், அழுக்காகப் பாதி புறத்தே போக்கியும், மேன்மேலும் வேறு புதிது புதிதாக உட்கொள்ள வேண்டும். அங்ஙனமின்றி ஒரு கால் சேகரிக்கப்பட்டதை அப்படியே வைத்துக் கொண்டிருந்தால் உள்ளே அழுகத் தொடங்கி, மிகுந்த துர்க்கந்தத்திற்கிடமாய்ப் பலவித நோய்களை விளைவிக்கும். ஆகவே, எவ்வித முயற்சியும் செய்யாமல், கொள்பாட்டனொரு வன் தேடி வைத்த திரவியத்தைப் பூதங் காப்பது போலக் காத்துக் கொண்டிருப்போருக்குத் தர்ம சிந்தனை ஏற்படுதல் அதிதுர்லபம். அப்படிப்பட்ட பூதங்கள் கூட நமது நாட்டிலே அதிகமாகக் கிடையாது. சராசரியாகப் பார்த்தால் ஊரொன்றுக்கு ஓரிரண்டு பேர்தான் இருப்பார்கள்.

இதையெல்லாம் கருதி அதைரியப்படுதல் ஆண்மையன்று. ஆரம்பித்துவிட்டோமானால், மேலே மடமடவென்று பொங்கிக் கொண்டு போகும். நாம் ஏழைகளாதலால் பெருமுயற்சிகள் ஆரம்பிக்க முடியாதெனினும், சிறுசிறு தொழில்கள் எடுத்துப் போனால், அவை தாமே பெரிதாக முற்றும். அதிக விடு முதலில்லாதவன், எப்படியேனும் சிரமப்பட்டு ஒரே ஒரு விசை நாடாத்தறி வாங்கித் தொழில் தொடங்கலாமல்லவா? இது போலவேதான் சகல விஷயங்களிலுமென்றுணர்க.

செய்க பொருளைச் செறுவார்ச் செறுக்கிற்கும்
எஃகதனிற் கூறிய தில்.

— திருக்குறள்

(இதன் கருத்து — பொருளைத் தேடு. உனக்கு அநீதியான இமிசை செய்வோர்களை அடக்குவதற்கு இதுபோலக் கூர்மை யுடைய ஆயுதம் வேறே கிடையாது.)

இந்தியா, மார்ச் 27, 1909
தலையங்கம்

இந்தியா, சூலை *24, 1909* இதழில் வெளியான விளம்பரம்.

## நமது ஆபீசில் கிடைக்கக் கூடிய தமிழ் புத்தகங்கள்.



| | | | |
|---|---|---|---|
| 17ஸ்ரீ சிதம்பரம்பிள்ளை படம் 1க்கு | 0 | 0 | 6 |
| 18 திலகர் உபன்னியாசம் (தெலிங்கு) | 0 | 0 | 6 |
| **இங்கிலீஷ் புஸ்தகங்கள்.** | | | |
| 1 விபின சந்திரபாலர் உபக்கியாசங்கள் ... ... ரூ | 0 | 6 | 0 |
| 2 லாலா லஜபதிராய் சரித்திரமும் உபக்கியாசங்களும் ... | 1 | 4 | 0 |
| 3 ஸ்வாமி ராம தீர்த்த எம். ஏ. சரித்திரமும் அவர்களுடைய உபதேசங்களும் ... ,, | 1 | 0 | 0 |
| அரவிந்தகோஷ் தற்கால நிலைமை... | 0 | 2 | 0 |
| ஸ்ரீ சிதம்பரம் பிள்ளை சரித்திரம் | 0 | 3 | 0 |

மானேஜர்,

இந்தியா' ஆபீஸ்

புதுச்சேரி.

நமது ஆபீசில் கிடைக்கக் கூடிய தமிழ் புத்தகங்கள்

.....................................................................

.....................................................................

ஸ்ரீ சிதம்பரம் பிள்ளை படம் 1-க்கு 0 0 6

.....................................................................

.....................................................................

ஸ்ரீ சிதம்பரம் பிள்ளை சரித்திரம் 0 3 0

.....................................................................

இங்கிலீஷ் புத்தகங்கள்

.....................................................................

ஸ்ரீ சிதம்பரம் பிள்ளை சரித்திரம் .................... 0 6 0

மானேஜர்,
'இந்தியா' ஆபீஸ்,
புதுச்சேரி.

இந்தியா, ஏப்ரல் 3, 1909

'இந்தியா' அலுவலகத்தில் வ.உ.சி.யின் படமும், வ.உ.சி.யின் வரலாறும் விற்பனைக்குக் கிடைத்துள்ளன என்பது குறிப்பிடத் தகுந்த செய்தியாகும். இதில் குறிப்பிடப்பெறும் 'ஸ்ரீ சிதம்பரம் பிள்ளை சரித்திரம்' எம். கிருஷ்ணசாமி அய்யர் என்பாரால் எழுதப் பெற்று, 1908இல் வெளிவந்ததாகும். இதுவே வ.உ.சி. பற்றிய முதல் வாழ்க்கை வரலாறு ஆகும். இவ்விளம்பரத்தில் குறிப்பிடப்பெறும், ஆங்கில மொழியில் எழுதப்பட்ட வ.உ.சி. வரலாறு எதுவெனத் தெரியவில்லை. 1909இல் 'The Life-sketch of Sjt. V.O. Chidambaram Pillai with a prefatory essay on India as a Maritime Power' என்றொரு நூல் சென்னையிலிருந்து வெளிவந்ததாக ஒரு குறிப்பு உண்டு. இந்நூலில் கிடைக்கப்பெறவில்லை.

இந்தியா, சூலை 17, 1909 இதழில் வெளியான கருத்துப்படம்.

பு. 1.] புதுவை சௌமிய ஸ்ரீ ஆடிமீ உ௨ 1909 ஸ்ரீ ஜூலைமீ 17 உ [இ-40

தேச புகைக்கப்பல்கள்.





(1) வர்த்தகத்தில் [illegible] கப்பலை நடத்த பெருத்த [illegible] சித்தமாய் [illegible] செய்கிறார்கள்.

(2) தென் இந்தியாவிலே [illegible] வேலை செய்திருக்கிறனே யொழிய பெரும்பாலும் தனிகர்கள் கைகட்டி வேடிக்கை பார்த்துக்கொண்டு சும்மா விருக்கிறார்கள்.

இதற்கு [illegible], அவர்கள் கப்பல் [illegible] காரணம்.

## சுதேச புகைக் கப்பல்கள்

*1.* வங்காளத்தின் மேற்படி கப்பல்களை நடத்த பெருத்த கனவான்களெல்லாரும் சிறிதும் மாறாது வேலை செய்கிறார்கள்.

*2.* தென் இந்தியாவிலே சிலரே ஊக்கத்தோடு, வேலை செய்கிறார்களேயொழிய பெரும்பாலும் தனிகர்கள் கை கட்டி வேடிக்கைப் பார்த்துக் கொண்டு சும்மாவிருக்கிறார்கள்.

இதுதான் வங்காளத்தில் அவர்கள் லாபமடைவதற்கும் நாம் நஷ்டமடைவதற்கும் காரணம்.

இந்தியா, ஜூலை *17, 1909*

முன் பக்கக் கருத்துப்படத்திலுள்ள வாசகங்கள் தெளிவுகருதி இங்கு வழங்கப்பட்டுள்ளன.

# ஸ்ரீமான் V.O. சிதம்பரம் பிள்ளையும் கோயமுத்தூர் ஜெயிலும்

விந்தைத் திலக ரரவிந்தரொடு பாலர்பதி
சிந்தைச் சிதம்பரமாஞ் செம்மலுமே — வந்திலரேல்
ஆதரமா மன்னை வளநாடெங் கேவந்தே
மாதரமா மந்திர மெங்கே.

ஸ்ரீமான் சிதம்பரம் பிள்ளையவர்களைக் கோயமுத்தூர் ஜெயிலுக்குக் கொண்டு வரப்பட்டு இப்போது சுமார் ஒரு வருஷமாகிறது. அதன்பின் அந்த ஜெயிலில் சில குழப்பங்கள் நடந்தன. சில கைதிகள் தங்களை ஜெயில் அதிகாரியான ஜெயிலர் சரியாக நடத்தவில்லை என்ற குறையினால் அவரை அடித்து மண்டையை யுடைத்து விட்டார்கள். ஆனால் அவர் தெய்வ சங்கற்பத்தால் மாண்டு போகாமல் தப்பிப் பிழைத்துக் கொண்டார். இக்கலகத்தில் ஜெயிலிலிருந்து தப்பியோடப் பிரயத்தனப் பட்டார்கள் என்று ஜெயில் சூப்பரிண்டெண்டு இரண்டு கைதிகளைச் சுட்டுவிட்டார். சுட்டதோடு நில்லாமல் தப்பியோட எத்தனப்பட்டதாக 34 கைதிகளின் மீது கேசு கொண்டு வரப்பட்டு அவர்கள் 3 ஸூ 4 ஸூ தண்டனை பெற்றார்கள். ஜெயிலரைக் கொலை செய்ய முயற்சித்ததாக 3 கைதிகளின் மேல் கேசு கொண்டு வரப்பட்டு செஷன் கோர்டாரால் அவர்கள் 10 வருஷம் தண்டனையடைந்தார்கள். இந்தக் கேசில்தான் நமது ஸ்ரீ பிள்ளை யவர்கள் ஷி கைதிகளின் பக்ஷம் டிபன்சு சாட்சியாக வந்து சாட்சி சொன்னார். கைதிகளை மேற்படி ஜெயிலில் மிகவும் கொடூரமாகவும் மிருகங்களொப்பந்தமாகவும் நடத்தப்படுகிற தென்றும் அவர்களுடைய சாப்பாடு மிகவும் ஊழல் என்றும் உண்ணத்தகாதபடி கல்லும் மண்ணும் கலந்துள்ளதென்றும் அவர்களிடம் அதிகமான வேலை வாங்கப்படுகிறதென்றும் அவர்களுக்கு இளைப்பாற ஒய்வு கொடுப்பதிலும் மற்றும் ஸ்நானம், தூக்கம் முதலிய சவுகரியங்களைக் கவனிப்பதிலும் ஜெயிலதிகாரிகள் மிகவும் அசிரத்தையாயிருக்கிறார்கள் என்றும் இவற்றை முறையிட்டால் ஜெயிலர் காதில் போட்டுக் கொள்கிற தேயில்லையென்றும் இதனால்தான் மனம் வருந்தி கைதிகள் இவ்வாறு ஜெயிலரை அடித்திருக்கக் கூடுமென்று தான் நினைக்க வேண்டியிருக்கிறதென்றும் ஸ்ரீ பிள்ளையவர்கள் மிக உறுதியாகச் சாட்சி சொன்னார். இவ்வாறு குறைகளை எடுத்துக் கூறியதுடன்



இவைகளைக் கவனித்து நிவர்த்தி செய்யாதவரையில் நாளடை வில் கொலை முதலிய பிரமாதங்களும் நடத்தக் கூடும் என்று தாம் எதிர் பார்ப்பதாகவும் சொன்னார். ஸ்ரீ பிள்ளையவர்கள் தாம் கீழ் படிந்து நடக்க வேண்டிய ஜெயில் அதிகாரிகள் கோபத்தையும் சுய நன்மையையும் சிறிதும் கவனியாதபடி அனாதைக் கைதிகளுக்கு ஒரு நன்மையுண்டாக வேண்டுமென்ற ஒரே எண்ணங் கொண்டு தைரியமாயும் பகிரங்கமாகவும் கோர்ட்டு முன் சாட்சி சொன்னார். அடிபட்ட ஜெயிலரோ காயம் ஆறும்வரை சில காலம் றஜாவிலிருந்து இப்போது மறுபடியும் வேலைக்கு வந்து பல மாதங்களாகிறது. சரியாகவோ தப்பா கவோ ஒரு முறை பலமான விரோதம் உண்டாய்விட்ட பின்னும் அந்த ஜெயிலரை அந்த ஜெயிலிலேயே அதிகாரத்தில் அமர்த்தி அக்கைதிகளை அவருடைய அதிகாரத்தின் கீழ் ஒப்புவித்திருப்பது எவ்வளவு ஒழுங்கோ அதை நேயர்கள் அறிந்து கொள்ளலாம்.

ஆனால், ஸ்ரீ பிள்ளையவர்களுக்கு அதுவே பற்பல சங்கடங் களுக்கும் காரணமாயிற்று என்பதை நாம் செல்ல வேண்டிய தில்லை. சமீபத்தில் ஸ்ரீமான் எதிராஜ் சுரேந்திரநாத ஆரியா சென்னை ஜெயில் இம்சை பொறுக்க முடியாமல் தற்கொலை செய்ய யத்தனப்பட்டதாக தண்டனையடைந்த விஷயம் நேயர் களுக்கு ஓர்...க்கத்திலிருக்கக் கூடியதே. அதுபோலவே ஸ்ரீ பிள்ளையவர்களும் பல இம்சைகளுக்குள்ளாயிருப்பார் என்பது சகஜமே. மானிட சுபாவத்தின் தன்மையறிந்த எவரும் அவர்களின் மீது குறை சொல்லமாட்டார்கள். அற்ப புழுவுமன்றோ தன்னை மிதித்தவர்மீது பாய்கின்றது. ஸ்ரீ பிள்ளையவர்கள் பல நாள் தனிச்சிறையிடப் பெற்றார்களாம். யாரோ ஒரு வார்டர் (Warder) ஜெயிலுக்குள் தின்பண்டங்களும் கடிதங்களும் கொணடு போன தாக ஜெயில் ஆக்ட்படி 4 மீ கடுஞ்சிறை விதிக்கப் பெற்றான். தன் விரோதிகள் சிலர் அந்த சாமான்களை தாமே வைத்து கேசு உண்டு பண்ணினார்கள் என்று அவன் சொல்லுகிறான். ஆனால், அவன் நமது பிள்ளையவர்களுக்காகத் தான் அவற்றைக் கொண்டு சென்றான் என்று அதிகாரிகள் சொல்கிறார்கள்.

நிற்க; சில வாரங்களின் முன் ஸ்ரீ பிள்ளையவர்களின் தந்தையாரும் ஆப்த நண்பராகிய ஸ்ரீ வள்ளிநாயக சுவாமியும் அவர்களைப் போய்ப் பார்த்துப் பேசினார்கள். அவர்கள் சுமார் 6 மீக்கு முன் மேலே சொல்லிய் படி செஷன் கேசு சாட்சியாக வந்தபோது இருந்ததைவிட மிகவும் இளைப்பாயும் உடல் வெளுத்துப் போயும் இருந்தார்கள். சில நாள் வியாதியாக ஆஸ்பத்திரி சிகிச்சையிலிருந்து அப்போதுதான் வெளியேறியிருந்

தார்! ஆயினும் பத்திய சாப்பாடுதான் கொடுக்கப்பட்டு வந்தது. அவருடைய நிறையே ஆறிலொரு பங்கு குறைந்து விட்டதாம். அவரை முதலில் பிடித்த போது 130 பவுன் நிறை இருந்தாரென் றும் இப்போது சுமார் 110 பவுன்கள் தான் உள்ளார் என்றும் தெரிய வருகிறது. ஆக்டிங் சுபரிண்டெண்டாகிய டாக்டர் துரையோ நமது ஸ்ரீ பிள்ளையவர்கள் நோயென்று பாசாங்கு செய்கிறாரென்றும் அவரால் ஜெயிலில் அதிக தொந்திரவு உண்டாகிறதென்றும் இருந்த போதிலும் அவரை ஜெயில் விதிகளின் படி மற்ற கைதிகளொப்பந்தமே நடத்தாமல் விசேஷ விதியாக மிகுந்த பக்ஷமாக நடத்தப்படுகிறது என்றும் அவர் விரும்பியபடி பால், காபி முதலான எல்லாம் அவர் நேராயிருந்த போது கொடுக்கப்படுகிறதென்றும் அவருடைய நிறை (Weight) குறைந்தது உண்மையே என்ற போதிலும் அது ஜெயில் அமுலின் காரணமாகக் குறைந்ததல்லவென்றும் கோயமுத்தூர் ஜெயிலுக்குக் கொண்டு வரப்பட்டபோது அவர் தேகத்தில் கொஞ்சம் கொழுப்பு (Fat) அதிகமேறியிருந்தது என்றும் அது மட்டில் இப்போது குறைவுபட்டதே தவிர மற்றபடி நிறைகுறைந்ததனால் அவர் தேகத்துக்குக் கெடுதி ஒன்றுமில்லை என்றும் சொன்னார். உண்மைதான். நம் சுதேச நேயர்களின் கொழுப்பைக் குறைப்பதற் குத்தானே அவர்களைச் சிறைப்படுத்துகிறார்கள் என்பதை நன் றாக அறிந்துதான் டாக்டர் துரை இப்படிச் சொன்னார் போலும். ஆனால், அதன் பின் சில காலத்துக்கு ஸ்ரீ பிள்ளையவர்களுக்கு அரிசிச் சாப்பாடே கொடுத்து வரும்படி ஷி துரை உத்திரவு செய்தார் என்றும் கேள்விப்படுகிறோம். நமது ஸ்ரீ பிள்ளையவர் கள் போன்ற லோகோபகாரிகள் ஜெயிலில் அடைபட நேர்ந்ததே பெருந்துக்கம். அதிலும் அவர்கள் அங்கே தம் இரத்தம் சுண்ட தேகம் வருந்தும்படி வேலை செய்வித்து அதனால் வரும் தொழில் லாபத்தினாலேதான் நமது காருண்ய ராஜாங்கத்தாரின் பொக்கிஷம் நிரம்ப வேண்டியிருக்கிறது போலும். நம்மையாளும் ஆங்கிலேயரின் சொந்த தேசமாய இங்கிலாந்தில் எப்படி நடக்கிறது? அபிப்பிராய பேதத்துக்காக இவ்விதம் சிறை செய்யப்படுவோர்க்கு ராஜாங்கக் கைதிகள் என்று பேர். அவர் களை எல்லாம் ஒரு கட்டிடத்தின் எல்லைக்குள்ளாக வெளியேற விடாமல் நமதுசிவில் கைதிகளைப் போல் வைத்திருப்பதல்லா மல் அவர்களுக்கு வேறு யாதொருவிதமான நிர்ப்பந்தமுங் கிடையாது. அவர்கள் தம் வீட்டையும் ஜனங்களையும் விட்டுப் பிரிந்திருப்பது ஒன்றுதான் குறை. மற்றபடி எல்லாச் சவுகரியங் களையும் அனுபவிக்கலாம். ஆனால், அவ்வங்கிலேயரே நம்

தேசத்தில் மட்டும் இவ்விதம் ராஜாங்கக் கைதிகளுக்கும் கொலை, கொள்ளை கைதிகளுக்கும் வித்தியாசமில்லாதபடி சட்டமுண் டாக்கியிருக்கிறார்கள். அபிப்பிராய பேதம் கொண்ட எதிரியைத் தன் தேக பலத்தின் உசவியினாலே அடக்க முயல்வது யாருக்கும் இயற்கையான சுபாவகுணமேயானாலும் அது பெருந்தன்மைக் கும் நாகரீகத்துக்கும் லக்ஷணமாகமாட்டாது.

நமது ஸ்ரீ பிள்ளையவர்கள் தம் தந்தையாரும் ஆப்தரும் தம்மைக் கண்டவுடன் சுதேசக் கப்பல் கம்பெனி விஷயமாக முதலில் விசாரித்தார்களாம். அதன் பின் தன் கேசில் பிரிவி கவுன்சில் (Privy Council) அப்பீல் விஷயமம் வேறு சில அந்தரங்க விஷயமும் அவர்களிடம் பேசிச் சில ஏற்பாடுகள் செய்யும்படி சொல்லியிருக்கிறார்கள். நமது பிள்ளையவர்கள் தம் அப்பீல் மதராஸ் ஐகோர்ட்டில் விசாரணையிலிருந்த காலத்தில் கோயமுத் தூர் ஜெயிலில் விசாரணைக் கைதியாக நடத்தப்பட்டு (Undertrial Prisoner) வந்தார். அக்காலத்தில் அவர் (As a Man Thinketh) என்ற ஆங்கில நூலைத் தமிழில் மொழி பெயர்த்தார். அது மனம் போல் வாழ்வு என்ற பெயருடன் அவருடைய ஆப்தர் ஸ்ரீ வள்ளிநாயக சுவாமிகளால் பிரசுரிக்கப்பட்டு சீக்கிரம் வெளிவரும் என்று நம்பப்படுகிறது.

நமது பிள்ளையவர்கள் கேசில் ப்ரீவி கௌன்சில் அப்பீல் பொருள் இல்லாக் குறையாலேயே தாமதமாகியிருக்கிறதென்று கேட்க நமது மனம் வருந்துகிறது. நம்முள் தனவான்களானாலும் சரி ஏழைகளானாலும் சரி ஒன்று போலவே நாகரீகம் என்ற பேரிட்டு எத்தனை விதமான வீண் செலவுகளும் அநாவசியமான விஷயங்களும் நம் நாட்டில் செய்கின்றார்கள். அச்செலவுகளில் ஆயிரத்திலொரு பங்கு குறைத்து இத்தகைய பொது நன்மையான வழிகளில் செலவிட்டால் நமது நாட்டுக்கே பேருதவியாகுமல் லவா? சுயநலத்தைத் சிறிது ஒதுக்கி விட்டுப் பொதுநலம் என்ற புண்ணியத்தைச் சிறிதாவது ஒவ்வொருவரும் இயன்றவளவு கைக் கொள்ளும்படி நமது பாரதமாதா தன் புத்திர புத்திரிகளுக்கெல் லாம் சீக்கிரம் திருவருள் செய்வாளாக!

இந்தியா, *செப்டம்பர் 11, 1909*

*1909ஆம் ஆண்டின் இறுதியில் 'இந்தியா' இதழின் நிருவாகத் தினர்க்கும், பாரதிக்கும் இடையே கருத்து வேறுபாடு நிலவியதென்றும், அக்காலப் பகுதியில் பாரதி 'இந்தியா' வில் எதுவும் எழுதவில்லை என்றும் திரு. ரா. அ. பத்மநாபன் இந்நூலின் தொகுப்பாசிரியரிடம் ஓர்*

உரையாடலின் போது குறிப்பிட்டார். இதன் காரணமாகவே, தமது 'பாரதி புதையல்' தொகுதிகளில் இக்கட்டுரையைச் சேர்க்கவில்லை என்றும் அவர் கூறினார். ஜூன் 1909இல், பாரதி 'இந்தியா' உடனான தமது தொடர்பைத் துண்டித்துக் கொண்டு 'சூர்யோதயம்' இதழில் முழுமூச்சாக ஈடுபட்டார் என்றும், பின்னர் 1909 அக்டோபரில் 'இந்தியா'வில் மீண்டும் பொறுப்பேற்றார் என்றும் ஒரு சி.ஐ.டி. அறிக்கை கூறுகிறது (Foreign Confidential B General 1911, No. 56, இந்திய தேசிய ஆவணக் காப்பகம், புதுதில்லி). இதனை எனக்குச் சுட்டுக் காட்டியவர் திரு. ஸி.எஸ். சுப்பிரமணியம்.

# தூத்துக்குடி சுதேசிக் கப்பல் கம்பெனி

சென்ற இரண்டு மூன்று வருஷங்களாய் ஸ்வதேசீயம் நமது தேசமெங்கும் வெகு மும்முரமாய்ப் பரவி வருகிறது. அதனால் உண்டாகும் சிறந்த பல நன்மைகளையும் நம்மவர்கள் கண்டு கொண்டனர். பிரதி வருஷமும் தீபாவளி தினத்தன்று நம் தென்னாட்டினர் குபேரன் முதல் கோமணாண்டி வரையில் ஒவ்வொருவரும் இந்த ஸ்வதேசீய தர்மத்திற்குத் தங்களாலியன்ற வளவு பண உதவி புரிகின்றனர். அதை ஸ்வதேசீய நிதி என்று வழங்கி வருகின்றனர். அத்தகைய ஸ்வதேசீய தர்மத்திற்காக ஆங்காங்கு தேசபக்த சிரோண்மணிகள் தங்களாலியன்றவளவு பணம் வசூல் செய்து நமது பாரத தேசதிற்கே ஒரு கௌரவத்தைக் கொடுக்கத்தக்க இந்த உயர்ந்த கப்பல் கம்பெனி முயற்சியை முன்னுக்குக் கொண்டு வரும்படி பிரயாசை எடுத்துக் கொண்டு உதவி செய்ய வேண்டுமென்பதே எமது தேசத்தாரிடம் நாம் செய்யும் பிரார்த்தனை. காணிகாணியாய்ச் சேர்ந்துதானே கோடியா கிறது. பல துளி பெரு வெள்ளம். நமது நாட்டினரைவிட நாம் வேறு யாரை இவ்வளவு ஸ்வதந்திரத்துடன் கேட்போம்? நம்மவர்கள் பலரின் பணம் கப்பல் செல்லாமையால் வட்டி நஷ்டமாயிருக்கிறது. முயற்சியோ மெத்தப் பெரிது. ஆகையால் இந்த தர்மத்திற்காக தீபாவளி தினத்தன்று ஆங்காங்கு நேயர்கள் பணம் வசூல் செய்து அனுப்புவார்களாக.

இக்கம்பெனியின் கப்பல்கள் புறப்பட இரண்டு லக்ஷம் ரூபாய் வேண்டியிருக்கிறதென்பது நேயர்கள் அறிந்ததே. அதற் காக அபிமானிகள் சிலர் புதிய பங்குகள் எடுத்துக் கொள்கிறார் கள்; சிலர் பிராயணத் தர்மச்சீட்டு ஒவ்வொன்றுக்கு ஒரு ரூபாய் வீதம் கொடுத்து உதவி செய்து வருகிறார்கள்; சிலர் டிபென்சர் கடன் பத்திரத்துக்குப் பணம் கொடுக்கிறார்கள்; சிலர் இனாமாக வும் பணம் தங்கள் சக்திக்கியன்றவளவும் நன்கொடையளித்து வருகின்றனர்; பலர் தீபாவளிக்குப் பணம் வசூலித்து அதை கம்பெனிக்குக் கொடுத்து உதவி செய்ய வேண்டுமென்று எமக்குத் தெரிவிக்கின்றனர். அத்தகைய அபிமானிகள் தாங்களே முன் னின்று வசூல் செய்து கம்பெனிக்கு அனுப்புவதே சிறந்த தருமம்; நிறைந்த புண்ணியம்; இது நமது நேயர்கள் மனதில் கல்லின் மேல் எழுத்து போல் நன்கு நாட்டப்பட்டு அவர்கள் இந்த தர்மபூர்த்திக்கு முயற்சி செய்து உண்மையாய் உழைத்து உதவி செய்ய வேண்டுமென்பதே நமது வணக்கமான பிரார்த்தனை.

## தூத்துக்குடி ஸ்வதேசீ ஸ்டீம் நாவிகேஷன் கம்பெனிக்கு ஓர் நன்கொடை

இப்போது தூத்துக்குடியில் நாடகமாடும் நாடகக் கம்பெனியார் ஒரு நாளைய ஆட்டம் இனாமாக ஆடி அதன் வரும்படியான ரூபாய் 250யும் ஷி கம்பெனிக்கே நன்கொடையாக அளித்தார்கள். இம்மாதிரி பிரஸித்தியான ஒவ்வொரு நாடகக் கம்பெனியும் மாதம் ஒன்றுக்கு ஒரு ஆட்டத்தின் வரும்படியை மனமுவந்து கொடுத்து கம்பெனிக்கு உதவி செய்ய முன்னுக்கு வருவார்களானால் எத்தனை சிறந்த புண்ணிய கைங்கர்யமாயிருக்கும்.

இரண்டு மூன்று மாதங்களுக்கு முன் நமது புதுவை மாநகரின் கண் வந்திருந்து ஸர்க்கஸ் நடத்திய ஸ்ரீவட்டவர்த்தன் அவர்கள் தர்மமாக 50 ரூபாய்க்கு கம்பெனியின் இரண்டு பங்குகள் வாங்கி ஸ்ரீ விவேகாநந்தரின் ஆசிரமத்திற்கு நன்கொடை தந்தார்.

ஸமீபத்தில் சென்னை மாநகரில் அதியத்புதமாய் ஸர்க்கஸ் விளையாடி நகரவாஸிகளுக்கு ஆச்சர்யகரமான ஆனந்தமுண்டாக்கிய ஸ்ரீகாரெல்கர் ஸர்க்கஸ் கம்பெனியார் ஒரு நாளை ஆட்டம் நமது ஸ்வதேச கப்பல் கம்பெனிக்காக ஆடி அதன் வரும்படியை நமது கப்பல் கம்பெனிக்கே கொடுத்து விட்டனர். இப்படி நமது நாட்டு ஸர்க்கஸ் கம்பெனியார்கள், டிராமாக் கம்பெனியார்கள், ஹரிகதா காலக்ஷேபம் செய்யும் பாகவதர்கள், பரதலரேஸ்திராதி சங்கீதக் கச்சேரிகள் செய்யும் பிரஸித்த பாடகர்கள், பாடகிமார்கள் ஆகிய இவர்களெல்லாம் பிரதி மாஸமும் ஒரு நாளைய வருமானத்தை நமது ஸ்வதேசீய கப்பல் கம்பெனிக்கு நன்கொடையளித்தால் விசேஷ ஸ்வதேச உபகாரமாய் இருக்கும் என்பது உள்ளங்கை நெல்லிக்கனி.

இந்தியா, அக்டோபர் 16, 1909

இந்தியா, நவம்பர் 20, 1909 இதழில் வெளியான கருத்துப்படம். ''தீபாவளி தேவி ஸ்வதேச கப்பல் கம்பெனிக்கு பாரத ஜனங்களிடமிருந்து தர்மப் பணம் வசூலித்துக் கொடுக்கிறாள்.''



## ''மனம் போல வாழ்வு''

### ஓர் புதிய புத்தகம்

அபினவ பாரத ஸ்வராஜ்ய கொள்கையை, தென்னிந்தியா வில் நிலைநாட்டியும் ஸ்வதேசி ஸ்டீம் நாவிகேஷன் கம்பெனி யை தூத்துக்குடியில் ஸ்தாபித்தும் தேச ஸேவைக்காக ஆங்கில அரசாங்கத்தாரால் இராஜ நிந்தனைக் குற்றஞ்சாட்டி தண்டிக்கப் பெற்று தற்பொழுது கோயம்புத்தூர் சிறைச் சாலையிலிருக்கும் நமது தமிழ் நாட்டு தேச பக்த சிரோன்மணியான ஸ்ரீ வி.ஓ. சிதம்பரம் பிள்ளை அவர்களால் ''மனம் போல் வாழ்வு'' என்னும் புத்தகம் ஆங்கிலத்திலிருந்து தமிழில் மொழிபெயர்க்கப் பட்டது. இது இப்போது நமது பார்வைக்கு வரப் பெற்றோம். அதை ஒரு முறை படித்துப் பார்த்தால் ஸ்ரீமான் பிள்ளை அவர்களுக்கு தமிழிலிருக்கும் விசேஷ பாண்டித்யம் நன்கு விளங்கும். இதை ஒவ்வொரு பாரதனும் கட்டாயமாய் படித்து ணர வேண்டியதென்ற கிரந்த கர்த்தாவின் வேண்டுகோளையே நாமும் ஆமோதிக்கிறோம். திருநெல்வேலி ஜில்லா ஸெஷன்ஸ் கோர்ட் தீர்மானத்தின் பிறகு ஹைக்கோர்ட் தீர்மானம் முடியும் வரையில் கடினக் காவலை நீக்கி அவரை வெறுங்காவலில் வைத்திருந்த காலையில், பிரபல அமெரிக்கா தத்துவ சாஸ்திரி யான ஜேம்ஸ் ஏலன் என்பவருடைய (As a Man Thinketh) என்னும் நூலை ''மனம் போல வாழ்வு'' என்னும் பெயருடன் மொழி பெயர்த்தார். இதன் விலை அணா 8. இதன் காயிதம், அச்சு, கட்டிடம் எல்லாம் ஸ்வதேசீயம். அடியில் கண்ட விலாசத்திற்குயெழுதி பெற்றுக் கொள்ளலாம்.

ஸ்வாமி வள்ளிநாயகம்,<br>நெ:1, மெக்லீன் தெரு, மதராஸ்,

ஸ்ரீமதி மீனாக்ஷியம்மாள் அவர்கள்,<br>ஸ்ரீ வி.ஓ. சிதம்பரம் பிள்ளை மனைவி<br>மேலூர், தூத்துக்குடி.

ஸ்ரீ. சி. கே. சுப்பிரமணிய முதலியாரவர்கள்,<br>வக்கீல், கோயமுத்தூர்.

இந்தியா, டிசம்பர் 4, 1909

## விளம்பரம்

வெளியாகிவிட்டது                    வெளியாகிவிட்டது

மனம் போல வாழ்வு

இஃது தூத்துக்குடி ஸ்ரீ வி.ஓ. சிதம்பரம் பிள்ளையவர்கள் கோயமுத்தூர் ஜெயிலில் வைத்து மொழி பெயர்த்த நூல். இந்நூல் மனோசக்தியின் இரகசியத்தை வெளிபடுத்தலால் சகல சித்திகளும் பெறுதற்கு இன்றியமையாததாகும். இதன் விலை அணா 8.

..........................................................................
..........................................................................
..........................................................................

மானேஜர்
''இந்தியா'' ஆபீஸ், புதுச்சேரி

இந்தியா, சனவரி 8, 1910

'இந்தியா'வில் வெளிவந்த விளம்பரம் மேலே தரப்பட்டுள்ளது. இது தொடர்ந்து ஓரிரு வாரங்களுக்கு வெளியானது. வ.உ.சி.யின் நூல் 'இந்தியா' அலுவலகத்திலிருந்தே விற்பனை செய்ய ஏற்பாடு செய்யப்பட்டிருந்தமை குறிப்பிடத் தக்கது.

# பாரத நாட்டின் புதிய புண்ணிய ஸ்தலங்கள்

இப்போது நமது பாரத நாட்டில் அநேக திவ்ய ஸ்தலங்கள் உண்டாயிருக்கின்றன. நமது நாட்டிலே ஏற்கனவே அநேக திவ்ய க்ஷேத்ரங்களும் புண்ணிய தீர்த்தங்களும் யாத்திரை ஸ்தலங்களும் இருக்கின்றன. நெடு நாளாய் நமது தேசத்தில் *108* விஷ்ணு ஸ்தலங்களும், *1008* சிவஸ்தலங்களும், *50* சக்தி பீடங்களும், *216* கணபதி குஹாதியர்கள் க்ஷேத்ரங்களும் இருக்கின்றன. கங்கை, யமுனை, ஸரஸ்வதி, ஸிந்து, நர்மதை, காவேரி முதலான புண்ணிய நதிகளும் குண்டங்களும் தீர்த்தங்களும் இருக்கின்றன. இதுவுமல்லாமல் அநேகமான ஸித்தர்களின் தபோவனங்களும் ஆசிரமங்களுமிருக்கின்றன. ஜைனர்களுக்கும் பவுத்தர்களுக்கும் கூட நமது பாரத நாட்டில் புண்ணிய க்ஷேததிரங்களிருக்கின்றன. இதே மாதிரி மகமதியர்களுக்கும், கிறிஸ்தவர்களுக்கும் கூட இருக்கின்றன.

இந்த இடங்களெல்லாம் எப்படிப் புண்ணிய ஸ்தலங்களாய் விட்டன? ஏதோ ஒரு கால விசேஷத்தில் மஹாதேஜஸ்வியான ஒரு மகான் செய்த தவத்திற்கு மெச்சி கடவுள் அம்மகானுக்கு இஷ்ட பூர்த்தியருளிய இடம் இவை

அதே மாதிரி நமது பாரத நாட்டில் ஸ்வதந்திரக் கிளர்ச்சி ஆரம்பித்துக் கொஞ்சம் நாள்தான் ஆயிற்று எனினும் அநேக புண்ணிய ஸ்தலங்கள் உண்டாய்விட்டன. இந்தப் புண்ணிய ஸ்தலங்களின் விசேஷம் என்னவென்றால் இவைகள் பாரத நாட்டிலுள்ள எல்லா மதத்தினருக்கும் பொதுவானவைகள். பாரத நாட்டில் மாத்திரமல்லாமல் வெளிநாடுகளிலும் இந்த தேச பக்தர்களின் ஆசிரமங்கள் தோன்றியிருக்கின்றன. ஆமதாபாத்திலிருக்கும் ஸாபர்மதி சிறைச்சாலையை நோக்கும்போது எந்த பாரதனுக்குத்தான் ''இது பாரத பரமபக்தரான மஹரிஷி ஸ்ரீமான் பால கங்காதர திலகரின் பொன்னடிகளால் புனிதமாக்கப்பட்ட திவ்விய க்ஷேத்திரம்'' என்று தோன்றாது?

. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .

கோயம்புத்தூர் சிறைச்சாலையைப் பார்க்கப் போகிறவர்களில் யார் தான் நமது தக்ஷிண தேசாபிமானச் சிங்கமான ஸ்ரீயுத சிதம்பரம் பிள்ளையைப் பற்றிச் சிந்தியாமலிருக்க முடியும்?

. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .

**இந்தியா,** *சனவரி 8, 1910*

# ஸ்ரீமான் தூத்துக்குடி - சிதம்பரம் பிள்ளையுடன் சந்திப்பு

சில தினங்களின் முன்பு கோயம்புத்தூர் ஸெண்ட்ரல் ஜெயிலில் இருக்கும் ஸ்ரீமான் சிதம்பரம் பிள்ளையை அவருடைய மனைவி மக்களும், அவருடைய ஆப்தராகிய ஸ்ரீ வள்ளிநாயக சாமியாரும், வேறொரு நண்பரும் பார்வையிடச் சென்றிருந்தார்கள்

அந்த சந்திப்பில் நடந்த சம்பாஷணை முதலிய விவரங் களைக் குறித்து, மேற்கூறப்பட்ட நண்பர் 'அப்பன்' என்பவருக்கு ஒரு கடிதம் எழுதியிருக்கின்றார். அப்பன் அக்கடிதத்திலிருந்து தெரிந்து கொண்ட செய்திகள் பின்வரும் உரையில் அமைக்கப்பட் டிருக்கின்றன.

ஸ்ரீ சிதம்பரம் பிள்ளையைப் பார்த்தவுடன் எனக்குத் தவப் பெருமையைக் குறித்த சிந்தனையுண்டாயிற்று. அவர் முடியைச் சுற்றி தவத்திறன் ஓர் ஸூக்ஷ்ம மண்டலமிட்டு விளங்குதல் கண்டேன். ''உரனொடும், ஒளியொடும், உவப்பொடும், திகழ்ந்த னர்.'' உடல் நிறை குறைந்திருந்தது. சாமியாரை, ஸ்ரீ சிதம்பரம் பிள்ளை நமஸ்கரித்து ஆசிர்வாதம் பெற்றுக் கொண்டார். அப்பால் நான் ஸ்ரீமான் பிள்ளையை வணங்கி, எழுந்து நின்றேன். என் முகத்தினிடையே வருத்தக் குறியிருப்பது கண்ட நந்தலை வர், ''கடவுள் அருள் செய்வார், கலங்குதல் வேண்டாம்'' என உறுதி கூறினர். இடப்பாரிசத்திலிருந்து அவரது மனைவியார் கண்ணீர் ததும்பியவராகி வணங்கி நிற்கக் கண்டு, அவரிடமும் ஸ்ரீ மான் பிள்ளை ''வருத்தப்படாதே, சித்தத்தில் பக்தியுடையவர் களுக்கு உறுதி தானாகவே உண்டாகும். உன் உள்ளத்திலே பக்தியும் உறுதியும் நிலைத்..க'' என்று வாழ்த்து மொழி சொல்லினார்... இரண்டு குழந்தைகளையும் எடுத்து மார்போ டணைத்து முத்தமிட்டு, உச்சி மோந்தனர். குழந்தைகளின் மழலை வார்த்தைகள் கேட்டு மகிழ்ச்சி பாராட்டி அப்பால் எங்களை இருங்களென்று சொல்லித் தாமும் தரைமீது வீற்றிருந் தார். எங்களெல்லோரிடமும் க்ஷேமலாபங்கள் விசாரிக்கலாயினர். உடனே, ஸ்ரீ வள்ளிநாயக சாமியார், சிதம்பரம் பிள்ளையின் சொந்த வீட்டில் பேசுவதுபோல மிகவும் உரத்த குரலில் பற்பல கதைகள் விரிக்கத் தொடங்கினார். 'மெதுவாகப் பேசுங்கள்' என்று நமது தலைவர் ஞாபகப்படுத்தினார். குறிப்பிட்ட மணி நேரம் வருமளவும் சாமியாருடைய கதை வளரக்கூடுமென்று தோன்றியபடியால் அதை நிறுத்தி விட்டு ஸ்ரீமான் பிள்ளை தனியே தமது மனைவியாரை இட்டுப் போய்ச் சிறிது நேரம்

பேசிக் கொண்டிருந்தனர். திரும்பி வரும்போது அவ்விருவருடைய முகங்களும் பரிபூரணமான மலர்ச்சியுடன் விளங்கின. மறுபடியும் மூத்த மகனை வாங்கி முத்தமிட்டு என் கையில் கொடுத்தார். இளைய மகனை வாங்கி முத்தமிட்டு மனைவியாரிடம் கொடுத்தனர். பிறகு ''கடவுளை நினைந்து கையெடுத்துத் தொழுதவர், திடமுள் அகத்தொடும், சிரித்த மலர்முகத்தொடும்'' எங்களுக்கு விடை கொடுத்தனுப்பினார்.

சம்பாஷணையினிடையே ஸ்ரீ சிதம்பரம் பிள்ளையவர்களின் வாக்கிலிருந்துதித்த சில வசனங்கள் —

''தமிழர்களெல்லோரும் வள்ளுவர் குறளை உரையுடன் அறிந்து பாராயணம் செய்தல் வேண்டும். 1330 குறளையும் பொருளுடன் உணர்ந்திலாத தமிழர் முற்றத்துறந்த முனிவரேயாயினும், என்னைப் பெற்ற தந்தையேயாயினும் யான் பெற்ற மக்களேயாயினும், யான் அவரைப் பூர்த்தியாக மதிப்பதுமில்லை; நேசிப்பதுமில்லை.''

''ஞானமும் திறமையுமில்லாத ஜாதியார் விரைவில் நாசமடைவார். அவையிரண்டுமுடையார் நீடூழி வாழ்வார். ஆதலால் பாரத பக்தர் அவ்விரண்டையும் விரைவிலே கைக்கொள்வாராக.''

''தெரியாது என்ற வார்த்தையும், முடியாது என்ற வார்த்தையும் பாரத பக்தர்கள் தவிர ஏனையோரின் பொருட்டாகவே உண்டாகின்றன. இவ்வுண்மை உங்கள் மனதில் எப்போதும் திடமாக நிற்கட்டும்.''

மேலே ஸ்ரீ சிதம்பரத்தின் வசனங்கள் சில குறிப்பிடப்பட்டுள்ளன. தமிழர்களே, ''மெய்த்தவன் கூறும் வாக்கை வேதமாகக் கொண்டு வாழ்மின்.''

கர்மயோகி
சௌம்ய வருஷம், பங்குனி மாதம்
*(மார்ச் 1910)*

## மனம் போல வாழ்வு

இதன் முதனூல் எழுதியவர் அன்னிய தேசத்தராயினும் நமது தேசத்து வேதாந்த சாஸ்திரத்தின் உண்மைகளை நன்கு தெளிந்துணர்ந்த அறிஞர். மொழிபெயர்த்தவருடைய மஹிமையைப் பற்றி நான் எழுதத் தகுதியுடைவனில்லை. அறிவிலே தெளிவும், நெஞ்சிலே உறுதியும் கொண்டு வாழ்நாளைப் பொருளும் பயனும் உடையதாக்க விரும்பும் தமிழர்களெல்லோரும் இந்தப் புஸ்தகம் ஒன்று வாங்கி எப்போதும் திரும்பத் திரும்ப படித்து வர வேண்டும்.

மெய்யறம், *1914*

வ.உ.சி. சிறையில் இருந்தபொழுது எழுதிய நூல்களுள் 'மெய்யறம்' என்ற நீதிநூலும் ஒன்றாகும். 1914இல் இது வெளிவந்தது. அந்நூலின் இறுதியில், அதற்கு முன்னர் வ.உ.சி. மொழிபெயர்த்து வெளியிட்ட 'மனம் போல வாழ்வு', 'அகமே புறம்' ஆகிய நூல்களைப் பற்றிய மதிப்புரைகள் இணைக்கப்பட்டுள்ளன. அவற்றில் பாரதியின் மதிப்புரைகளும் இடம்பெற்றுள்ளன. இவை எப்போது எந்தச் சூழலில் எழுதப்பட்டன என அறிய முடியவில்லை. அவை இந்தப் பக்கத்திலும் இதற்கடுத்த பக்கத்திலும் வழங்கப்படுகின்றன.

அகமே புறம் என்ற பெயருடன் ஸ்ரீ மான் பிள்ளையவர் கள் எழுதி வெளியிட்டிருக்கும் புதிய நூல் ஆலன் என்ற பண்டிதரின் ஆங்கில நூல் ஒன்றிலிருந்து மொழி பெயர்த்தது. எனினும், பிள்ளையவர்கள் அதிலே பரிபூரணமான தமிழ் மணத்தையேற்றியிருக்கிறார்கள். பிற நாட்டுப் பொன்னிலே நமது முத்திரையை வைத்து நமது பொருளாக்கி விட்டார்கள். இது மொழி பெயர்ப்பென்று பிள்ளையவர்கள் சொல்லாவிடில் நாம் இதனைத் திருக்குறளில் சில பகுதிகளுக்கு விரிவுரையென்று கொண்டிருப்போம். நோய், கீழ்மை, மிடிமை முதலிய தளை களை இப்பிறப்பில், இன்றே, இப்பொழுதே தொலைத்து நலமெய்த வேண்டுவோர் இந்நூலின் உபதேசங்களைக் கைக் கொள்க. உடலுறுதி, அறிவு, ஆக்கம், தெளிவு, வீடு ஆகிய இன்ப நிலைகளைப் பெற விரும்புவோருக்கு ஸ்ரீமான் பிள்ளை யவர்கள் நல்ல துணையாக அமைந்துள்ளார்கள். இது நன்று.

மெய்யறம், *1914*

## Political Evolution in the Madras Presidency

... Several other well-known patriots also were sentenced to harsh and prolonged terms of imprisonment of both kinds. The most prominent among these was the affair of the King vs. V.O. Chidambaram Pillai. He is a Tamil patriot whom Mr. Pinhey, District Sessions Court Judge of Tinnevelly, sentenced to transportation for life, twice, so to say — or as the people accustomed to the Indian transmigration theory jokingly said, "for two lives!" — consecutively, the judge was kind enough to emphasise. This barbarous and shockingly meaningless double-life punishment, dealt on two scores, of course, was considerably modified by the High Court of Madras, who eventually reduced to five years' imprisonment, rigorous...

பாரதி புதையல் பெருந்திரட்டு
*பதிப்பாசிரியர்: ரா.அ. பத்மநாபன்*

Political Evolution in the Madras Presidency என்ற ஒரு நெடுங்கட்டுரையைப் பாரதி, *1920ஆம் ஆண்டளவில் எழுத முற்பட்டார்.* முற்றுப்பெறாத அக்கட்டுரையிலிருந்து வ.உ.சி. பற்றிய குறிப்பு இங்கு வழங்கப்படுகின்றது. இதுவே வ.உ.சி.யைப் பற்றிப் பாரதி எழுதிய கடைசிக் குறிப்பு எனக் கொள்ளலாம்.

பிற்சேர்க்கை 1

## வ.உ.சி.க்கு வாழ்த்து

வேளாளன் சிறை புகுந்தான்,
  தமிழகத்தார் மன்னனென மீண்டான் என்றே
கேளாத கதை விரைவில் கேட்பாய் நீ,
  வருந்தலையென் கேண்மைக் கோவே
தாளாண்மை சிறிது கொலோ
  யாம்புரிவேம்? நீ இறைக்குத் தவங்கள் ஆற்றி
வாளாண்மை நின்துணைவர் பெறுகெனவே
  வாழ்த்துதி நீ வாழ்தி வாழ்தி.

வ.உ. சிதம்பரம் பிள்ளை சரித்தரம்
பரலி. சு. நெல்லையப்பர்

*1944*-ஆம் ஆண்டு சக்தி காரியாலயம் வெளியிட்ட பரலி சு. நெல்லையப்பர் எழுதிய வ.உ.சி. வரலாற்றின் பிற்பகுதி யில், ''வீர சிதம்பரம் - புதுச்சேரி ஸ்ரீ அரவிந்தாசிரமவாசி சுவாமி சுத்தானந்த பாரதியார் 20-12-1939-இல் எழுதியது'' என்ற குறிப்புடன் ஒரு கட்டுரை வெளியிடப்பட்டுள்ளது. அதில், ''ஸ்ரீமான் சிதம்பரம் பிள்ளையவர்கள் கோயமுத்தூர்ச் சிறைக் கோட்டத்தில் இருந்த பொழுது, புதுவையிலிருந்து அவரைக் காணச் சென்ற பரலி சு. நெல்லையப்பரிடம் ஸ்ரீமான் சுப்ரமணிய பாரதியார் மூன்று அழகிய பாடல்களை எழுதி அனுப்பினார். மூன்றில் ஒன்று மட்டுமே கிடைத்திருக் கிறது'' என்ற குறிப்புடன் இப்பாடலைச் சுத்தானந்த பாரதியார் வெளியிட்டுள்ளார். இப்பாடல் பாரதியார் வாழ்ந்த காலத்தில் வெளியான நூல்களில் இடம் பெற வில்லை. அண்மையில், சீனி. விசுவநாதன் அவர்களால் காலவரிசைப்படி தொகுக்கப்பட்டுத் தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகத்தால் வெளியிடப்பட்டிருக்கும் 'பாரதி பாடல்கள்: ஆய்வுப் பதிப்பு'ம் இப்பாடலுக்கு வேறு சான்று காட்டவில்லை. இதுவரை கிடைக்கப் பெற்றுள்ள பாரதியின் கையெழுத்துப் படிகளிலும் இப்பாடல் இடம் பெறவில்லை என்று திரு. சீனி. விசுவநாதன் இந்நூலின் தொகுப்பாசிரிய ரிடம் ஓர் உரையாடலின் போது உறுதிப்படுத்தினார்.

முன்னர்க் குறித்த கட்டுரையில் சுத்தானந்த பாரதியார் வேறொரு குறிப்பினையும் வழங்கியுள்ளார். ''திருவாளர் சிதம்பரனார் சிறைக் கோட்டத்திலிருந்து திரும்பி வந்த பொழுது, அவரை வரவேற்கும் முறையில் ஸ்ரீ ராமபிரான்

வனவாசத்திலிருந்து திரும்பி வந்தபொழுது அயோத்தி நகர மக்கள் அவரை வரவேற்ற முறையில் கம்பர் பாடிய மூன்று அழகிய பாடல்களை ஸ்ரீமான் பாரதியார் எழுதி அனுப்பினார். கவிச் சக்கரவர்த்தியான கம்பர் பாடல்களில் சிறந்த பாடல்களான அந்தப் பாடல்கள் பாடிப் பாடி மகிழ்தற் குரியன.

தாயருக் கன்று சார்ந்த கன்றெனும் தகையன் ஆனாய்
மாயையில் பிரிந்தோர்க் கெல்லாம் மனோலயம் வந்த தொத்தாய்.
ஆய் வளையார்க்குக் கண்ணுள் ஆடிரும் பாவை ஒத்தாய்
நோய் வருத்துலர்ந்த யாக்கைக்(கு) உயிர் புகுந்தாலும் ஒத்தாய்.

ஆவியிங் குன்னலால்வே றின்மையால் ஐய எங்கள்
காவியங் கழனி நாடும் யாங்களும் கலந்து வாழும்
மாவியல் ஒண் கணாரும் வள்ளல்நீ வருத லாலே
ஓவியம் உயிர்பெற் றாலே பெற்றனம் உணர்வு பெற்றோம்.

எளிவரும் உயிர்கட் கெல்லாம் ஈன்றதாய் எதிர்ந்ததொத்தாய்
அளிவரும் மனத்தோர்க் கெல்லாம் அரும்பத அமிழ்தம் ஆனாய்
ஒளிவரப் பிறந்த தொத்தாய் உலகினுக்(கு) ஒண் கணார்க்குத்
தெளிவறு களிப்புச் செய்யும் தேம்பிழி தேறல் ஒத்தாய்.

இச்செய்தியினையும் உறுதிப்படுத்திக் கொள்ள வேறு சான்றில்லை.

பிற்சேர்க்கை 2

## வ.உ.சி. மீதான வழக்கும் பாரதியின் சாட்சியமும்

(இரகசிய போலீசு அறிக்கைகளிலிருந்து திரட்டியவை)

531 (a) C.I.D.

An Inspector of this department writes from Tinnevelly Bridge on 27-th April 1908 — C. subramanya Bharati arrived here last evening from Madras by the Mail train with his wife. It is said that he is a native of Tinnevelly. His movements will be watched.

(b) The same inspector writes on 28-th April — C. Subramanya Bharati Attended the court to-day along with the vakils conducting defence of V.O. Chidambaram Pillai and Subramanya Siva. When I spoke to him in the evening he gave me understand that he would stay here for a few days and that he was a native of village in Tinnevelly district.

670 Madras 22-5-1908

G. Subramanya Aiyar and C. Subramanya Bharati are summoned to attend Tinnevelly Sedition Case as witness in connection with trial of Siva at ensuing session on 12-th June 1908.

763 (a) Madras City 10-6-1908

C. Subramanya Bharati and Ethiraj Arya left Madras for Mandapam by the boat mail of the 9th en route to Tinnevelly. Both have been summoned to give evidence before Tinnevelly Sessions Court in connection with the trial of Chidambaram Pillai and Subramanya Siva.

(b) C.I.D.

Bharati Proceeded to Tinnevelly from Madras on 11th.

797 C.I.D.

It appears that C.S. Bharati and Arya did not proceed to Mandapam as stated in para 763 (a). An inspector of this department reports that they broke their journey at Tanjore on the morning of 10-th and delivered lectures

at a meeting there. Another inspector reports that they arrived in Tinnevelly on the evening of 11-th along with K. Venkataramana Rao. All the three were originally summoned to give evidence as defence witnesses in the Tinnevelly sedition cases. But it seems that their evidence has since been dispensed with.

*Madras Secret Police Abstracts of Intelligence 1908.*

வ.உ.சி.யின் அரசியல் இயக்கச் செயல்பாடுகளிலும், அவரது சுதேசிக் கப்பல் கம்பெனி முயற்சிகளிலும் மிகுந்த அக்கறை காட்டி வந்த பாரதி, வ.உ.சி.யின் மீது அன்றைய வெள்ளை அரசாங்கத்தால் தொடுக்கப்பட்ட வழக்கிலும் கூர்ந்த கவனம் செலுத்தி வந்தார் என்பதைக் கண்டோம். அவ்வழக்கு தொடர்பாகப் பாரதியும், வ.உ.சி.க்கு ஆதரவாகசச் சாட்சி வழங்கவிருந்தார் என்பதும், இறுதியில் அவ்வாறு சாட்சியம் வழங்க இயலாமல் போய்விட்டது என்பதும் இரகசிய போலீசு அறிக்கைகளிலிருந்து திரட்டப்பட்ட மேற்காணும் பகுதிகளிலிருந்து புலப்படுகின்றன.

மக்கள் வெளியீடு
24 உனிசு அலி சாகிப் தெரு
எல்லிசு சாலை சென்னை 600 002

ஞானபாநு, ஜூலை *1915* இதழில் வெளியான 'தமிழில் எழுத்துக்குறை' பற்றிய பாரதியின் கட்டுரை

## ✓தமிழில் எழுத்துக்குறை.

ஸம்ஸ்க்ருதம், ஹிந்தி, பெங்காளி, மஹாராஷ்ட்ரம், குஜராத்தி, தெலுங்கு, கன்னடம், மலையாளம் முதலிய மற்ற பாரத பாஷைகளிலெல்லாம் வர்க்க எழுத்துக்கள் உண்டு.

அதாவது, க-ச-ட-த-ப என்ற ஐந்து வல்லெழுத்துக்களில் ஒவ்வொன்றுக்கும் நான்கு வேறுபாடுகள் இருக்கின்றன. திருஷ்டாந்தமாக,

# தமிழில் எழுத்துக்குறை

ஸமஸ்க்ருதம், ஹிந்தி, பெங்காளி, மஹாரஷ்ட்ரம், குஜராத்தி, தெலுங்கு, கன்னடம், மலையாளம் முதலிய மற்ற பாரத பாஷைகளிலெல்லாம் வர்க்க எழுத்துக்கள் உண்டு.

அதாவது க-ச-ட-த-ப என்ற ஐந்து வல்லெழுத்துக்களில் ஒவ்வொன்றுக்கும் நான்கு வேறுபாடுகள் இருக்கின்றன. திருஷ்டாந்தமாக,

| | வடசொல் | பொருள் |
|---|---|---|
| 1. | பரம் | மேலானது |
| 2. | பலம் (ப = ph) | பயன் |
| 3. | பலம் (ப = b) | வலிமை |
| 4. | பாரம் (ப = bh) | சுமை |

வெவ்வேறு எழுத்துக்களை முதலாகக் கொண்ட இந்த நான்கு சொற்களையும் தமிழில் வழங்கி வருகிறோம். ஆனால், ''எல்லச் செட்டி லெக்க ஏக லெக்க'' என்பது போல எல்லாவற்றிற்கும் ஒரே ''ப'' தான் போடுகிறோம்.

ஆனால், ஸமஸ்க்ருதச் சொற்களை ஸமஸ்க்ருத வழக்கப்படி நாம் உச்சரிக்க வேண்டிய அவசியமில்லையாதலால், நமக்கு அந்த எழுத்துக்கள் வேண்டுவதில்லையென்று சிலர் ஆக்ஷேபிக்கலாம். சரி. நியாயமென்று வைத்துக் கொள்வோம்.

வெளிநாட்டு ஊர்களின் பெயர்களையும் மனிதர்களின் பெயர்களையும் நாம் சரியானபடி சொல்ல வேண்டாமா, அதுவும் வேண்டாமா? சுதேசமித்திரன் பத்திரிகையைச் சென்ற 15 வருஷங்களாகப் படித்து வரும் ஒரு அய்யங்கார் நமது நிதானக் கட்சித் தலைவராகிய ஸ்ரீ கோகலே (GoKhale) -யின் பெயரைத் தப்பாக உச்சரிப்பதை நான் பார்த்திருக்கிறேன். 'தங்கம்' என்ற சொல்லில் 'க' உச்சரிப்பது போல் அப்பெயரின் முதலெழுத்தாகிய கோ (Go) -வை மெலிதாகச் சொல்ல வேண்டு. பிராமணர் ''கோபுரம்'' என்று சொல்லும் போது 'கோ'வை எப்படிச் சொல்லுகிறார்களோ அது போல ''கோகளே''யின் முதலெழுத்தையும் சொல்ல வேண்டும். இரண்டாவதெழுத்தாகிய 'க' என்பதை 'க்ஹ' என்ற ஒலி இலோசகத் தோன்றும்படி அழுத்தி உச்சரிக்க வேண்டும். 'மக்ம்' என்று வைதிகப் பிராமணர் சொல்வது போல, ஷெ அய்யங்கார் இதை (Kokhale) என்று சொன்னார். அவர்மேல் குற்றமில்லை, சுதேசமித்திரன் மேலும் குற்றமில்லை; தமிழில் எழுத்துக் குறைகிறது.

பெல்லாரி, குத்தி, பனாரஸ், பம்பாய் - என்று நமது நாட்டு ஊர்ப் பெயர்களைக் கூட நாம் விபரீதமாக எழுதும்படி நேரிட்டிருக்கிறது! இதற்கென்ன விமோசனம்?

கல்கத்தாவிலிருக்கும் போது ஸ்ரீமான் அரவிந்த கோஷ் (இவர் பெயரையும், தமிழில் சரியாக எழுத இடமில்லை. 'Ghosh' என்பதை 'Kosh' என்று எழுத நேரிடுகிறது!) — ஸ்ரீமான் அரவிந்தர் தமிழ் கற்றுக் கொள்ள விரும்பினாராம். அங்கு தென்னாட்டு மனிதர் ஒருவர் இவருக்கு நமது அரிச்சுவடி முழுதும் கற்றுக் கொடுத்தார். முதல் பாடப்புஸ்தகமும் நடந்தது. அப்படியிருக்கும்போது ஒருநாள் ஒரு தமிழ்நாட்டுப் பத்திரிகை யகப்பட்டது. அதில் ''பீரேந்திரநாத தத்தகுப்தர் வழக்கு'' என்று மகுடமிட்டு ஒரு வ்யாஸம் எழுதியிருந்தது. அதைப் பார்த்து விட்ட அரவிந்தர் தமது தமிழ் வாத்தியாரிடம் ''இதென்ன?'' என்று கேட்டார். வாத்தியார் ''இது ஒரு பெங்காளிப் பெயர்'' என்று சொன்னாராம். அரவிந்தர் மயங்கிப் போய் ''எப்படி?'' என்று கேட்டார். வாத்தியார் 'Birendranath Datta Gupta' என்று அச்சொல்லை பெங்காளி ரூபத்தில் சொன்னார். ''இங்கிலீஷ் தெரியாத கிராமத்துத் தமிழர் இச்சொல்லை எப்படி வாசிப்பார் கள்?'' என்று அரவிந்தர் கேட்டார். ''நீர் வாசித்தது போலவே 'Pirendiranata Tatta Kuptar' (t= த) என்றுதான் வாசிப்பார்கள்'' என்று வாத்தியார் சொன்னாராம். இன்னும் அரவிந்தர் இந்தக் கதையைச் சொல்லிச் சொல்லிச் சிரிக்கிறார்.

நமது பத்திரிகைகளிலும் ஐரோப்பாவிலுள்ள நகரங்கள், நதிகள், மலைகள் முதலியவற்றின் பெயர்களைப் பார்க்கும் போது கண் கூசுகிறது. அதைத் தமிழ் மாத்திரமறிந்த தமிழர் எப்படி வாசிப்பார்களென்பதை நினைக்கும்போதே காது கூசுகிறது.

இங்கிலீஷ் அக்ஷரத்தில் ப்ரெஞ்ச், அரபி, பார்மஸி, ஸமஸ்க்ருதம் முதலிய பாஷைகளின் பதங்கள் சிலவற்றை எழுதுவதற்கு, ஸாதாரண இங்கிலீஷ் அரிச்சுவடி இடங்கொடாததைக் கருதிச் சில புதிய குறிகள் ஏற்படுத்திக் கொண்டிருக்கிறார்கள். எல்லா ஐரோப்பிய பாஷைகளுமே அந்ய பாஷைகளிலுள்ள விசேஷ உச்சரிப்புகளுக்கிணங்கும்படி சில தனிக்குறிகள் ஏற்பாடு செய்து வைத்துக் கொண்டிருக்கின்றன.

நாமும் அப்படியே சில விசேஷக் குறிகள் ஏற்பாடு செய்து கொள்ளுதல் மிகவும் அவசியமாகும்.

ஏற்கனவே நான் இந்தக் குறையை நீக்கும் பொருட்டாக மிகவும் சுலபமாக ஐந்து நிமிஷங்களில் யாரும் கற்றுக் கொள்ளக்கூடிய சில குறிகள் தயார் செய்து வைத்திருக்கிறேன்.

ஆனால் இப்புதிய வழியைத் தமிழ்நாட்டுப் பத்திராதிபர்களும் பிறரும் அறியும்படி துண்டுப் பத்திரிகைகள் போட்டு வேலை செய்வதற்கு வேண்டிய ஸௌகர்யங்கள் எனக்கு இன்னும் சில மாதங்கள் கழிந்த பிறகுதான் ஏற்படும்.

இப்புதிய உபாயத்தை அனுஸரிப்பதால் இப்போது நாமெல்லோரும் எழுதி வரும் முறைமைக்கு யாதொரு ஸங்கடமும் உண்டாகாது. புதிய குறிகள் தெரியாதவர்கள்கூட வழக்கம் போலவே படித்துக் கொண்டு போவார்கள். யாருக்கும் எவ்வித மான சிரமமும் ஏற்படாது. நமது பாஷைக்கு நமது அரிச்சுவடி போதும், அந்ய தேசப் பெயர்கள் முதலியவற்றுக்காக மாத்திரமே இப்புதிய முறை ஏற்பட்டது; எனது புதிய முறையை இப்போதே அறிந்து கொள்ள விரும்புவோர் கீழேகண்ட என் விலாஸத்துக்கு இரண்டணா தபால் முத்திரை வைத்தனுப்பினால் அவர்களுக்கு இம்முறை நல்ல கையெழுத்தில் தெளிவாக எழுதுவித்து அனுப்புகிறேன்.

சி. சுப்பிரமணிய பாரதி
தர்மராஜா தெரு, புதுச்சேரி.

குறிப்பு: மற்றப் பத்திரிகைகளும் இதைப் பிரசுரிக்குமாறு வேண்டப்படுகின்றன.

ஞானபாநு, சூலை *1915*

பாரதி உருவாக்கிய புதிய எழுத்துக் குறியீடுகள் இதுவரை கிடைக்கப் பெறவில்லை.

ஞானபாநு, செப்டம்பர் 1915 இதழில் வெளிவந்த
வ.உ.சி.யின் மறுப்புரை.

## ✓ தமிழ் எழுத்துக்கள்

[ஸ்ரீமான் வ. உ. சிதம்பரம் பிள்ளையவர்கள் எழுதியது.]

சென்ற சில வருஷங்களாகச் சில அறிவாளிகள் நம் தமிழ்ப் பாஷையில் சில எழுத்துக்கள் குறைவாயிருக்கின்றன வென்றும் அக்குறைவை நிவிர்த்திக்கத்தக்க பிறபாஷை எழுத்துக்களையும் பிறசில குறிகளையும் நம் தமிழ்ப்பாஷை எழுத்துக்களோடு சேர்க்கப்பட வேண்டுமென்றும் கூறிவருகின்றார்கள்: ஆனால், அவர்களில் ஒருவரும் அவை சேர்க்கப்படுதல் நம தமிழ்ப்பாஷைக்காவது அதன் வளர்ச்சிக்காவது இன்றியமையாததென்று காட்டத்தக்ககாரணம் ஒன்றையும் இதுகாறும் கூறிலர். இச்சேர்க்கை நம் தமிழ்ப்பாஷைக்கு இன்றியமையாததென்று காட்டக் கருதி நமது நண்பர் ஸ்ரீ. சி. சுப்பிரமணிய பாரதியவர்கள் சென்ற ஆடி மாதத்தில் வெளிவந்த நமது "ஞானபாநு" வில் "தமிழில் எழுத்துக்குறை" என்னும் தலைப் பெயரோடு ஒரு நிரூபம் வரைந்துள்ளார்கள். அந்நிரூபத்தில் மேற்கண்ட சேர்க்கையைச் செய்ய வேண்டுமென்பதற்காகக் கூறப்பட்டுள்ள காரணம் ஒன்றே. அஃதாவது, பிறபாஷைகளின் மனிதப் பெயர், நகரப்பெயர் முதலியவற்றிற் சிலவற்றை அப்பாஷையாளர் உச்சரிக்கும் சப்தத்தில் நாம் உச்சரிக்குமாறு செய்யத்தக்க சில எழுத்துக்கள் நமது தமிழ்ப் பாஷையில் இல்லையென்பதே. நமது நண்பரவர்கள் தமது நிரூபத்தின் ரு-வது பகுதியில் "ஸம்ஸ்க்ருதச் சொற்களை ஸம்ஸ்க்ருத வழக்கப்படி நாம் உச்சரிக்க வேண்டிய அவசியமில்லையாதலால், நமக்கு அந்த எழுத்துக்கள் வேண்டுவதில்லை யென்று சிலர் ஆக்ஷேபிக்கலாம். சரி - நியாயமென்று வைத்துக்கொள்வோம்' என்று கூறுகின்றார்கள். அச்சிலர் பிற பாஷைகளின் மனிதப்பெயர், நகரப்பெயர், முதலியவற்றையும் அவ்வப்பாஷைகளின் வழக்கப்படி நாம உச்சரிக்கவேண்டிய அவசியமில்லையாதலால், நமக்கு அந்த எழுத்துக்கள் வேண்டுவதில்லையென்று கூறுகின்றனர். இக்கூற்றையும் நமது நண்பரவர்கள் "சரி, நியாயமென்று வைத்துக் கொள்வோம்' என்று அங்கீகரிக்கக் கடமைப்பட்டுள்ளார்கள், முந்திய ஆக்ஷேபமும் பிந்திய கூற்றும் வேறல்ல வாகலான். அவ்வாறு நமது நண்பரவர்கள் அங்கீகரிப்பார்களாயின் நமது தமிழ்ப்பாஷை எழுத்துக்களோடு

# தமிழ் எழுத்துக்கள்

ஸ்ரீமான் வ.உ. சிதம்பரம் பிள்ளையவர்கள் எழுதியது

சென்ற சில வருஷங்களாகச் சில அறிவாளிகள் நம் தமிழ்ப் பாஷையில் சில எழுத்துக்கள் குறைவாயிருக்கின்றனவென்றும் அக்குறையை நிவிர்த்திக்கத் தக்க பிற பாஷை எழுத்துக்களேனும் பிற சில குறிகளேனும் நம் தமிழ்ப் பாஷை எழுத்துக்களோடு சேர்க்கப்பட வேண்டுமென்றும் கூறி வருகின்றார்கள். ஆனால், அவர்களில் ஒருவரும் அவை சேர்க்கப்படுதல் நம் தமிழ்ப் பாஷைக்காவது அதன் வளர்ச்சிக்காவது இன்றியமையாததென்று காட்டத் தக்க காரணம் ஒன்றையும் இதுகாறும் கூறிலர். இச்சேர்க்கை நம் தமிழ்ப் பாஷைக்கு இன்றியமையாததென்று காட்டக் கருதி நமது நண்பர் ஸ்ரீ.சி. சுப்பிரமணிய பாரதியவர்கள் சென்ற ஆடி மாதத்தில் வெளி வந்த நமது 'ஞானபாநு'வில் 'தமிழில் எழுத்துக்குறை' என்னும் தலைப்பெயரோடு ஒரு நிரூபம் வரைந்துள்ளார்கள். அந்நிரூபத்தில் மேற்கண்ட சேர்க்கையைச் செய்ய வேண்டுமென்பதற்காகக் கூறப்பட்டுள்ள காரணம் ஒன்றே. அஃதாவது பிற பாஷைகளின் மனிதப் பெயர், நகரப் பெயர் முதலியவற்றிற் சிலவற்றை அப்பாஷையாளர் உச்சரிக்கும் சப்தத்தில் நாம் உச்சரிக்குமாறு செய்யத்தக்க சில எழுத்துக்கள் நமது தமிழ்ப் பாஷையில் இல்லையென்பதே. நாது நண்பரவர்கள் தமது நிரூபத்தின் ரு-வது பகுதியில் ''ஸமஸ்க்ருதச் சொற்களை ஸ்மஸ்க்ருத வழக்கப்படி நாம் உச்சரிக்க வேண்டிய அவசியமில்லையாதலால், நமக்கு அந்த எழுத்துக்கள் வேண்டுவதில்லையென்று சிலர் ஆக்ஷேபிக்கலாம். சரி - நியாயமென்று வைத்துக் கொள்வோம்'' என்று கூறுகின்றார்கள். அச்சிலர் பிற பாஷைகளின் மனிதப் பெயர், நகரப் பெயர் முதலியவற்றையும் அவ்வப்பாஷைகளின் வழக்கப்படி நாம் உச்சரிக்க வேண்டிய அவசியமில்லையாதலால், நமக்கு அந்த எழுத்துக்கள் வேண்டுவதில்லையென்று கூறுகின்றனர். இக்கூற்றையும் நமது நண்பரவர்கள் ''சரி, நியாயமென்று வைத்துக் கொள்வோம்'' என்று அங்கீகரிக்கக் கடமைப்பட்டுள்ளார்கள், முந்திய ஆக்ஷேபமும் பிந்திய கூற்றும் வேறல்லவாகலான். அவ்வாறு நமது நண்பரவர்கள் அங்கீகரிப்பார்களாயின் நமது தமிழ்ப் பாஷை எழுத்துக்களோடு பிற சில பாஷை எழுத்துக்களையேனும் பிறசில குறிகளையேனும் சேர்த்தல் இன்றியமையாததென்பதைக் காட்டத் தக்க காரணம் ஒன்றும் நமது நண்பரவர்கள் நிரூபத்தில் கூறப்படவில்லை யென்பது அதனைப் பார்த்த மாத்திரத்தில்

விளங்கும். அவ்வின்றியமையாமையைக் காட்டத் தக்க காரணம் ஒன்றேனும் நமது நண்பரவர்களாலாவது அவர்களைப் போன்ற வேறு பாஷாதிருத்தக்காரர்களாலாவது கூறப்படுமாயின் அப் போது நமது தமிழ்ப் பாஷை எழுத்துக்களோடு பிறசில பாஷை எழுத்துக்களைச் சேர்ப்பதா பிறசில குறிகளைச் சேர்ப்பதா என்னும் விஷயத்தைப் பற்றிச் சிந்திக்கவும் தீர்மானிக்கவும் நாம் முன்வரக் கடமைப்பட்டுள்ளோம். நிற்க.

சுதேசமித்திரனைச் சென்ற 15 வருஷங்களாகப் படித்து வருகிற ஓர் அய்யங்கார் நமது நிதானக் கட்சித் தலைவருடைய 'GoKhale' என்ற பெயரை 'கோக்களே' என்று உச்சரித்தது நமது நண்பரவர்களுக்குத் தப்பாகத் தோன்றியதும், நமது ஸ்ரீ அரவிந்தர வர்களின் தமிழ் உபாத்தியாயர் ஒரு வங்காளியின் 'Birendranath Datta Gupta' என்ற பெயரைத் தமிழர் 'பி்ரேந்திரநாத தத்த குப்தர்' என்றுதான் வாசிப்பாரென்று கூறியது நமது அரவிந்தரவர்களுக் குச் சிரிப்பை உண்டு பண்ணியதும் நமது சமஸ்கிருத பண்டிதர் களும் வங்காளிப் பண்டிதர்களும் 'பழனி', 'கிழவி' என்னும் தமிழ்ச் சொற்களை 'பளனி', 'கிளவி' எனவும், 'அறம்' 'மறம்' என்னும் தமிழ்ச் சொற்களை 'அரம்' 'மரம்' எனவும், 'மன்றம்' 'கன்று' என்னும் தமிழ்ச் சொற்களை 'மந்ரம்', 'கந்ரு' எனவும், 'Forbes' 'Fourth' என்னும் ஆங்கிலச் சொற்களை போர்ப்ஸ் போர்த் எனவும், 'Zeal' 'Zenith' என்னும் ஆங்கிலச் சொற்களை 'ஜீல்', 'ஜெனித்' எனவும் உச்சரிக்குங்கால் நாம் தப்பென்று கூறுவதை யும் நமது ஆங்கில நண்பர்கள் சிரிப்பதையும் போன்றனவேயன்றி வேறல்ல. தெய்வ பாஷையென்றும் பூரண பாஷையென்றும் பல பாஷைகளுக்கும் தாய் பாஷையென்றும் சொல்லப்படுகிற சமஸ்கிருத பாஷை எழுத்துக்களோடும் பல புதுமைகளையும் திருத்தங்களையுங் கொண்டுள்ள பாஷையென்று சொல்லப்படு கிற வங்காளிப் பாஷை எழுத்துக்களோடும் ழ,ற,ன, F, Z, என்னும் எழுத்துக்களையாவது அவற்றின் ஒலிகளைக் குறிக்குங் குறிகளையாவது சேர்ப்பதற்கு நமது நண்பரவர்களும் அரவிந்தர வர்களும் முயற்சித்து வெற்றி பெறுவார்களாயின் அவர்கள் நமது தமிழ் மக்களுக்கு ஒப்பற்ற வழிகாட்டிகளாவார்கள்; பின்னர் நமது தமிழ் மக்கள் அவர்களைப் பின்பற்றத் துணிவார்கள். இதுகாறும் தமிழ்ப் பாஷை எழுத்துக்களில் குறையுளது அல்லது தமிழ்ப் பாஷையில் குறையுளது என்று கூறியவர்களில் ஒருவரும் தமிழ் இலக்கண இலக்கியங்களைப் பூரணமாகக் கற்றுணர்ந்தவரா கவாவது சமஸ்கிருத சம்பந்தமில்லாதவராகவாவது சமஸ்கிருத பாஷையில் மேற்சொல்லிய திருத்தங்களையோ வேறு திருத்தங்க ளையோ செய்ய வேண்டுமென்று கூறியவராகவாவது காணப்பட

வில்லையென்றும், அவர்கள் நம் தமிழ்ப பாஷையத்தை திருத்த முற்படுகின்றார்களோ வருத்த முற்படுகின்றார்களோ என்றும் நம் தமிழ் மக்களிற் சிலர் ஐயமுறுகின்றனர். அவருடைய அவ்வையத்தை நிவிர்த்திப்பதற்காகவாவது நம் தமிழ்ப் பாஷையில் திருத்தம் செய்ய வேண்டுமென்று கூறமுன் வருபவர்கள் தமிழ் இலக்கணங்களுக்கெல்லாம் மூலமென்று சொல்லப்படத் தக்கதாயுள்ள தொல்காப்பியம் ஒன்றையும் தமிழ் இலக்கியங்களுளெல்லாம் சிறந்தைவையென்று சொல்லப்படத் தக்கவாயுள்ள 'சீவக சிந்தாமணி', 'சிலப்பதிகாரம்', 'மணிமேகலை', 'திருக் குறள்', 'கலிங்கத்துப்பரணி', 'கலித்தொகை', 'திருக்கோவையார்' முதலியவற்றில் ஒரு சிலவற்றையுமாவது பூரணமாகக் கற்க வேண்டுவது இன்றியமையாதது. இது நிற்க.

ஒரு பாஷைச் சொற்களை அப்பாஷை எழுத்துக்களாலேயே எழுதப்படுதல் நன்றென்றும் பிறபாஷை எழுத்துக்களால் எழுதப் படுதல் தீதென்றும் சில அறிஞர் கூறுகின்றனர். அவ்வாறு அவர் கூறுவதற்குரிய காரணங்களிலொன்று ஒரு பாஷைச் சொற்கள் மற்றொரு பாஷை எழுத்துக்களால் எழுதப்படுமானால் நாளடைவில் உலகிலுள்ள பல பாஷைச் சொற்களும் பிற பாஷைச் சொற்களோடு கலந்து எவையெவை என்னென்ன பாஷைச் சொற்களென்று தெரியாமற் போகுமென்பது. மற்றொன்று, ஒவ்வொரு பாஷைக்கும் புதிதுபுதிதாக இலக்கணங்களும் அகராதிகளும் எழுத நேருமென்பது. இன்னொன்று ஒவ்வொரு பாஷை அகராதியும் இலக்கணமும் உலகத்திலுள்ள பல பாஷைகளில் பல சொற்களையும் கொள்ள நேருவதுடன் பல பாஷைகளில் பலவாறு உச்சரிக்கப்படும் சொற்களெல்லாம் பலமுறை எழுதப்பெற நேருமென்பது. இன்னுமொன்று, கடைசியாக உலகத்திலுள்ள சகல பாஷைகளின் சகல சொற்களையும் கொண்டுள்ள அகராதிகளும் இலக்கணங்களும் ஒவ்வொரு பாஷையிலும் எழுதப்படவும் அவற்றை ஒருவரும் கற்க முடியாமற் போகவும் நேருமென்பது. வேறு சில அறிஞர் பல பாஷைச் சொற்கள் பலசுவைப் பொருள்களுக்கு நிகராகுமென வும், சிலர் சில சுவைப் பொருள்களை விரும்பாதது போல சில பாஷையினர் பிறசில பாஷைச் சொற்களை விரும்பாரென வும், சில சுவைப் பொருள்களைச் சிலர் முழுப் பொருள்களாக வும் சிலர் பொடிகளாகவும் சிலர் திராவகங்களாகவும் உபயோகிக்க விரும்புவது போல சில பாஷைச் சொற்களை சில பாஷையினர் முழுச் சொற்களாகவும் சில பாஷையினர் சிதைச் சொற்களாகவும் சில பாஷையினர் முற்றுமுரு மாற்றப்பட்ட சொற்களாகவும் உபயோகிக்க விரும்புவரெனவும், பல பாஷைச்

சொற்களையும் பல பாஷையினரும் எடுத்தாள வேண்டுமென்பது பல சுவைப் பொருள்களையும் பல மனிதரும் உபயோகிக்க வேண்டுமென்பதை ஒக்குமெனவும், பிற பாஷைச் சொற்களை முழுச் சொற்களாகவே ஒரு பாஷையினர் எடுத்தாள வேண்டு மென்பது சில சுவைப் பொருள்களை முழுப் பொருள்களாகவே எல்லோரும் உபயோகிக்க வேண்டுமென்பதை நிகர்க்குமெனவும், ஒவ்வொருவரும் அவரவர் இஷ்டப்படி (பிறரை வருத்தாதவாறு) நினைக்கவும் பேசவும் செய்யவும் விடுதலே சுதந்தர இலக்கண மென்பது போல ஒவ்வொரு பாஷையாசிரியரும் விதித்துள்ள படியே அவ்வப்பாஷையினர் பிறபாஷைச் சொற்களை உபயோ கித்துக் கொள்ளுமாறு விடுதலே சுதந்தர இலக்கணமெனவும் கூறுகின்றனர். இரு வேறு பாஷையினர் அவ்விருவருமறிந்த ஒரு பாஷை மூலமாகவே ஒருவரோடொருவர் சம்பாஷிப்பாராத லால் ஒரு பாஷையின் சொற்களை அப்பாஷையினர் உச்சரிப்பது போல் மற்றொரு பாஷையினர் உச்ச்ரித்தலின்றியமையாத தன் றென்பர் வேறு சில அறிஞர். உலகத்திலுள்ள சகல பாஷைகளின் சகல சப்தங்களையும் தெரிந்தெடுத்து எந்தெந்தப் பாஷையில் எந்தெந்த சப்தங்களில்லையோ அந்தந்த சப்தங்களைக் குறிப் பதற்கு சில எழுத்துக்கள் அல்லது குறிகள் ஏற்படுத்தி அவற்றை அந்நிய பாஷையினரோடு எவ்வித சம்பந்தமாவது வைத்து கொள்ள விரும்புகின்றவர் மாத்திரம் கற்றல் ஆவசியகமென்பர் சிலர். அவ்வாறு அந்நிய பாஷை சப்தங்களை எடுத்தாள விரும்புவோர் அவ்வச் சப்தங்களைக் குறிக்கும் அவ்வப் பாஷை எழுத்துக்களையே எடுத்தாளுதல் நன்மையென்றும் அவற்றிற்குப் புதிய குறிகள் ஏற்படுத்துதல் தீமையென்றும் கூறுவர் வேறு சிலர். நம் தமிழ்ப் புலவரோ தமது இனிய பாஷையானது யாவராலும் எளிதாகக் கற்கப் படத்தக்கவாறு முப்பது எழுத்துக் களுக்கள் அமைந்திருக்கின்றதென்றும், வேறு பாஷை எழுத்துக் களை இதன் எழுத்துக்களோடு சேர்த்து இதன் எழுத்தெண்ணிக் கையை அதிகமாக்கி இதனைக் கற்பதற்குக் கஷ்டமடையுமாறு செய்தல் கூடாதென்றும், அந்நிய பாஷையினரோடு சம்பந்தம் வைத்துக் கொள்ள விரும்பும் அரசர் வணிகர் முதலியோர் மாத்திரம் மேற்குறித்தவாறு தமிழ்ப் பாஷையில் இல்லாத பிற பாஷைச் சப்தங்களைக் குறிக்கும் அவ்வப்பாஷை எழுத்துக்களை கற்றாள வேண்டுமென்றும் கூறுகின்றனர். இப் புலவரிற் சிலர் ரு, ரூ, ணு, ணே, என்னும் எழுத்துக்களும் முறையே றா, றோ, னா, னோ என்று எழுதப்பட்டுத் தமிழ் பாஷையைக் கற்றாளுதலை இன்னும் எளிதாக்க வேண்டுமென்று விரும்புகின் றனர். இதுகாறும் கூறப்பட்டுள்ளவற்றையும் இவை போன்ற

பிறவற்றையும் நமது நண்பரவர்கள் சிந்தித்துப் தமிழ்ப் பாஷை எழுத்துக்களிற் பிற பாஷை எழுத்துக்களையோ அவற்றின் சப்தத்தைக் கொடுக்கும் குறிகளையோ சேர்ப்பதும், தமிழ் நாட்டுக் கிராமங்களில் உழவுத் தொழில் செய்து ஊரை விட்டு வெளியேறாதிருக்கும் தமிழ் மக்களும் பிற பாஷையினரின் சம்பந்தம் வேண்டாத தமிழ் மக்களும் அவற்றைக் கற்க வேண்டுவதும் ஆவசியகம்தானா என்பதைத் தீர்மானித்து அதனைத் தக்க காரணங்களோடு நமது 'ஞானபாநு' மூலமாக வெளியிடுவார்களாக.

ஞானபாநு, செப்டம்பர் 1915

ஞானபாநு, அக்டோபர் 1915 இதழில் வெளியான
பாரதியின் மறுப்புரை.

௧௮௫

தொல்காப்பியர் கட்டின அரிச்சுவடி போதாதவண்ணமாக நமது பாஷை வளர்ச்சி பெற்றவுடனே நமது முன்னோர்கள் மேற்காட்டிய எழுத்துக்களையும் சேர்த்தார்கள்.

நாமும் அப்படியே நமக்கு இக்காலத்தில் ஏற்படும் உச்சரிப்புக் கஷ்டங்களை நிவிருத்தி செய்துகொள்வதற்கு, கிரந்த எழுத்துக்களைச் சேர்க்கலாமென்று சில பெரியோர் கருதுகிறார்கள். ஆனால் அதைக்காட்டிலும் அடையாளங்கள் போடுவது சுலபமான வழி.

இப்போதுள்ள அரிச்சுவடியிலே பழகிய தமிழருக்கு மேற்படி அடையாளங்களால் எவ்வித ஸங்கடமும் நேரிடாது. தப்பாகவோ, சரியாகவோ வழக்கம் போல வாசித்துக்கொண்டு போவதை அடையாளங்கள் தடுக்கமாட்டா. கிரந்த எழுத்துக்களைக் கொண்டு சேர்த்தால் பாதி படிக்கும்போதே நிறுத்திவிட நேரிடும்.

ப்ரெஞ்ச், இங்கிலீஷ் முதலிய ஐரோப்பிய பாஷைகளிலும், ஹிந்தி முதலிய நமது நாட்டு பாஷைகளிலும்,—உயிருள்ள பாஷைகளிலே வளர்வன வெல்லாவற்றிலும்—உச்சரிப்புத்திருத்தத்தைக் கருதிப்பழைய எழுத்துக்களில் சில அடையாளங்கள் சேர்த்து ஸௌகர்யப்படுத்திக் கொள்கிறார்கள். இதனால் எழுத்தின் வடிவத்தில் யாருக்கும் சந்தேகம் நேரிடாது. இந்த எளிய வழியை அனுசரித்து நமது தமிழ்மொழி விசால மடையவேண்டுமென்பதே என்னுடைய விருப்பம்.

சி. சுப்பிரமணிய பாரதி.

# தமிழில் எழுத்துக்குறை

ஐ,ஷ,ஸ,ஹ,க்ஷ என்ற எழுத்துக்களைத் தமிழ் அரிச்சுவடியில் நமது பூர்வீகர் சேர்த்திருக்கிறார்கள். இவற்றைச் சேர்க்காவிட்டால் தமிழ் நேரே பேச முடியாமலும், எழுத முடியாமலும் போய் விடுமென்று அவர்களுக்கு அச்சமுண்டாயிற்று.

தொல்காப்பியர் கட்டின அரிச்சுவடி போதாவண்ணமாக நமது பாஷை வளர்ச்சி பெற்றவுடனே நமது முன்னோர்கள் மேற்காட்டிய எழுத்துக்களையும் சேர்த்தார்கள்.

நாமும் அப்படியே நமக்கு இக்காலத்தில் ஏற்படும் உச்சரிப்புக் கஷ்டங்களை நிவிருத்தி செய்து கொள்ளுவதற்கு, கிரந்த எழுத்துக்களைச் சேர்க்கலாமென்று சில பெரியோர் கருதுகிறார்கள். ஆனால், அதைக் காட்டிலும் அடையாளங்கள் போடுவது சுலபமான வழி.

இப்போதுள்ள அரிச்சுவடியிலே பழகிய தமிழருக்கு மேற்படி அடையாளங்களால் எவ்வித சங்கடமும் நேரிடாது. தப்பாகவோ, சரியாகவோ வழக்கம் போல் வாசித்துக் கொண்டு போவதை அடையாளங்கள் தடுக்கமாட்டா. கிரந்த எழுத்துக்களைக் கொண்டு சேர்த்தால் பாதி படிக்கும் போதே நிறுத்திவிட நேரிடும்.

ப்ரெஞ்ச், இங்கிலீஷ் முதலிய ஐரோப்பிய பாஷைகளிலும், ஹிந்தி முதலிய நமது நாட்டுப் பாஷைகளிலும் — உயிருள்ள பாஷைகளிலே வளர்வனவெல்லாவற்றிலும் — உச்சரிப்புத் திருத்தத்தைக் கருதிப் பழைய எழுத்துக்களில் சில அடையாளங்கள் சேர்த்து சௌகர்யப்படுத்திக் கொள்கிறார்கள். இதனால் எழுத்து வடிவத்தில் யாருக்கும் சந்தேகம் நேரிடாது. இந்த எளிய வழியை அனுசரித்து நமது தாய்மொழி விசாலமடைய வேண்டுமென்பதே என்னுடைய விருப்பம்.

சி. சுப்பிரமணிய பாரதி

ஞானபாநு, அக்டோபர் 1915

இக்கட்டுரைக்கு வ.உ.சி. எந்த மறுப்பும் எழுதியதாகத் தெரியவில்லை. இருப்பினும் 'சுதேசமித்திரன்' நடையை விமர்சித்து சிவாவின் 'ஞானபாநு' எழுதியதற்கு 'பாரத புத்ரன்' என்பவர் 'சுதேசமித்திரனில்' *1-10-1915, 6-10-1915, 15-10-1915* இதழ்களில் மறுப்பு எழுதினார். இவற்றுக்கு வ.உ.சி. 'சுதேசமித்திரனி'லேயே *29-10-1915* இதழில் நீண்டதோர் மறுப்பை எழுதினார். அதன் கடைசி பத்தியில் பின்வரும் குறிப்புக் காணப்படுகிறது.

பல காரியங்கள் நிமித்தமாகப் பல பாஷையினரோடு பலவகைச் சம்பந்தங்களை வைத்துக் கொண்டிருக்கிற யானும் நமது நண்பர் ஸ்ரீ சி. சுப்பிரமணிய பாரதி அந்நியபாஷைச் சொற்களைத் தமிழில் எழுதுவதற்குக் கண்டுள்ள புதிய முறையின் வெளிவரவை எதிர்நோக்கி யிருக்கின்றேன். (குமரிமலர், சூலை *1968*)

# யான் கண்ட இரு பெரியார்

## வ.உ. சிதம்பரம் பிள்ளையும் சி. சுப்பிரமணிய பாரதியாரும்

இவ்விருவரும் நம் தமிழ்நாட்டுச் செல்வப் புதல்வர். இருவரும் செந்தமிழ்ச் செல்வி உகந்து சீராட்டி வளர்த்த அரும் குழவிகள். அதனால் தான் இருவரிடத்திலும் தேசாபிமானமும் பாஷாபிமானமும் கரைபுரண்டோடிற்று. தாய்நாடு, தாய் பாஷை என்றால் இருவரும் அவற்றிற்கு மெய்மறந்து பணி செய்வார்கள். ஒருவர் மழை போல் கவிகள் பொழிந்து அவை அடைய வேண்டிய பெருமையை எடுத்துக் காட்டுவார். மற்றவர்.... உடல் பொருளாவி கருதாது அவைகளின் பெருமைக்கு இரவு பகல் உழைத்திடுவார். ஒருவர் கவிஞர். மற்றவர் கார்ய ஸமர்த்தர்.

பார்வைக்கு இருவரும் அதிக உயரமில்லை. 5 1/2 அடிக்குள்ளாகத்தான் உடல் உயர்ந்திருக்கும். ஆனால் அவர்கள் மனப்பான்மையோ அண்ட பகிரண்டங்களையும் கவர்ந்து ஓங்கும். இவ்விரிந்த உலக அமைப்பில் நம் நாட்டிற்கு உற்ற பதவியில்லாமல் தவிக்கின்றோமே என்று அவர்கள் மனம் புழுங்கும். அதை நினைந்து நினைந்து கரைந்துருகுவர் இருவரும். இச்சீர்கேட்டிற்குள்ள தனி மருந்தைத் தேடியறிந்தனர். நம் தாய்நாட்டு ஸகோதரர் முப்பது நாற்பது கோடியினரையும் தட்டி எழுப்பி இவ்வுணர்ச்சியூட்டுவதே இதற்கு அருமருந்தெனக் கண்டனர். ஒருவர் சொற்சாட்டையால் எழுப்பி தம் இன்கவியால் பேருணர்வு ஊட்டினார். மற்றவர் பொது ஜனங்களின் பொருளீட்டத்தை அதிகப்படுத்தும் வழியில் இறங்கினார். சிறு தொகை அவர்களிடம் வசூல் செய்து திரை கடலோடிக் கப்பல் கப்பலாகப் பணம் ஈட்டும் துறையில் இழிந்தார். இவ்விருவரும் தத்தம் வாழ்நாட்களில் பட்டபாடும் உற்ற துன்பமும் சொல்லொணாதன. வறுமையாலும் உதவியின்மையாலும் அவர்கள் அனுபவித்த கஷ்டம் கொஞ்ச நஞ்சமன்று. அவர்கள் அதைப் பொருட்படுத்தாது பொது ஜன ஸேவை செய்தபடியால் என்றுமழியாப் புகழுடம்போடு இன்றைக்கும் பொலிகின்றனர்.

இனி இவ்விரு பெரியார்கள் யாவர் எனக் கூறிச் சிறியேன் அறிந்ததுரைப்பேன். பேரம்பலத்தின் பகுதியான இச்சிற்றம்பலத்தைக் குறிக்கும். சிதம்பரப் பெயருடையார் ஒருவர். இவர் உலகநாதரின் செல்வப் புதல்வர். தந்தை எட்டையபுரத்தின் வக்கீலாக இருந்தாராகையால் அத்தொழிலை சில நாள் நடத்திப் பிறகு தமிழ்நாட்டின் வக்கீலாக மூண்டு அதன் வறுமையை வேரறுக்கத் தொடங்கினார். அவர் பெயர் தமிழ்நாடெங்கும் பரவிற்று. வடநாடும் அவர் பெயரை உணராமலில்லை.

எத்தனையோ பேர்வழிகள் கப்பலோட்டி பணம் சேர்த்தும் அதையிழந்துமுள்ளார். ஆனால் நம் சிதம்பரம் பிள்ளையை போல் அதற்குப் பாடுபட்டவர் வேறு யாருமில்லை எனலாம். ஒரு புறம் பொதுஜன உறக்கம், மறுபுறம் புத்தி கூர்மையும் பெருவலிமையும் கொண்ட ஸர்க்கார். இவ்விருபெரு மலை களுக்கிடையே ஒரு ஒற்றடி சிறுபாதை ஒன்ற சமைத்து செல்ல முயன்றார் இப்பெரியார். ஸர்ப்பம் போல் சீறி எழுந்தனர் ஸர்க்கார். பொதுஜனங்கள் கைகொட்டிச் சிரித்தனர். அவருக்குத் தமது மனவலிமை தவிர வேறு உதவியிருக்கவில்லை. அதோடு அவர் செய்த அட்டஹாஸத்தால் தூத்துக்குடியிலிருந்த வெள்ளை யர்களும், தேச துரோகிகளும் வெகு பயந்து விட்டார்கள். குடிப்பதற்குக் கூட நீரில்லாது எட்டு நாள் வரை கப்பலிலிருந்து தருவித்துக் கொண்டாதாகவும் கேள்வி. சிதம்பரம் பிள்ளையவர் களைக் கைது செய்யும் வரை தூத்துக்குடியிலிருந்து திருநெல் வேலிவரை அவர் இட்டது சட்டமாக இருந்தது. அவர் மேல் வெள்ளையர்களுக்கு எவ்வளவு காரமிருந்தது என்பதைக் காட்ட அவருக்கு முதல் முதல் விதித்த உயிர்க் கடுங்காவலே போதிய சான்றாகும்.

மற்றொரு பெரியார் சி. சுப்பிரமணிய பாரதியார். அவர் தந்தை சின்னசாமி அய்யர். பெயரில் சின்னசாமியானாலும் அவர் நோக்கம் மிக உயர்ந்திருந்தது. பருத்தியைக் கொட்டையிலிருந்து பிரிக்கும் யந்திரம் ஒன்ற தருவித்து அதில் தமது சொத்தை எல்லாம் இழந்தார். தமது மகனைப் பெரும் படிப்பாளராக்கி வக்கீல் தொழிலில் சேர்க்க வேண்டுமென்பது அவர் கருத்தாம். இச் சின்னசாமி அய்யர் வயிற்றில் பிறந்த சிங்கக் குட்டி போன்ற நம் பாரதியார் சட்டங்களை மீறி உலகத்தைத் தாவுவதில் நோக்குடையவரானாரேயன்றி இச்சிறு சட்டங்களை நிலை நாட்டுவதில் அவர் எண்ணம் செல்லவில்லை. தந்தையார் காலம் சென்றதும் வடக்கே காசிக்குப் போனார். அங்கு சில காலம் படித்துவிட்டு மறுபடி தம்மூர் திரும்பினார். ஆனால் அங்கு இருக்கக் கொள்ளவில்லை. மதுரையில் பள்ளி உவாத்தியரானார். அதுவும் பிடிக்கவில்லை. சென்னை சுதேசமித்திரனில் சிறிது காலம் கழித்தார். அங்கு வேண்டிய கட்டுரை நிபந்தனைகளுக்கு அவர் மனம் அடங்கியிருக்க ஒப்பவில்லை. இந்தியா பத்திரி கைக்கு வந்தார். அவர் மனம் கிளர்ந்தெழுந்தது. சுதேசி இயக்கத்தின் முன்னணியில் நின்றார். அதன் பெருமைகளைப் பாடினார், பல மேடைகள் ஏறி சொற்பொழிவு செய்தார். தமிழ்நாடு முழுவதும் அவர் பெயர் முழங்கலாயிற்று.

தாய்ப்பசுவைத் தேடி கன்று வந்ததுபோல சிதம்பரம் பிள்ளை இவரைத் தேடி சென்னை வந்தார். காந்தம் இரும்பை

இழுப்பது போலச் சிதம்பரம் பிள்ளை இழுக்கப்பட்டு திருமலாச் சாரியார் மாளிகையுட் புகுந்தார். பாரதியாரைக் கண்டார். மின்சாரப் பிரவாகம் இரண்டு ஒன்றோடொன்று மோதும்போது ஏற்படும் மின்னொளிபோலே இருவர் முகத்திலும் ஒளிதிகழ்ந் தது. அவ்விரு பிரவாகம் பிறகு ஒன்றாகக் கலப்பதுபோல் இவ்விரு பெரியாரும் கலந்து விட்டனர்.

அந்நாட்களில் நடந்தேறிய சுதேச இயக்கத்தில் என் ஸகோ தரர்களும் நானும் ஒரு சிறிது ஈடுபட்டிருந்தோமாகையால் எம்மிடம் பாரதியார் அடிக்கடி வருவதுண்டு. எது பாடினாலும், தாம் விசேஷமாக எது எழுதினாலும் என்னிடத்தில் அதை முதலில் வந்து காட்டாமலிருக்க மாட்டார். நான் என்ன வேலையாயிருந்தாலும் அதை சட்டை செய்யாது தனியிடத்திற்கு அழைத்துப்போய் அதைப் படித்துவிடுவார். அவருடைய 'பூபேந் திர விஜயம்', 'சுதந்திரப் பள்ளு', 'ஞானரத' முதல் பகுதி இவைகளை அவர் ஆவேசத்தோடு படித்தது எனக்கு இப்பொழு தும் ஞாபகமிருக்கிறது. ''பார்ப்பானை அய்யரென்ற காலமும் போச்சே'' என்ற பாட்டில் தாழ்ந்த நிலைமையில் கிடக்கும் பார்ப்பானை ஏன் பழிக்கிறீர் என்று நான் கேட்டதற்கு, நான் பழிக்கவில்லையே அவன் அந்த உயர்ந்த நிலைக்கு அருகனல்ல தாழ்ந்துகிடக்கிறான் என்று தானே நானும் சொல்கிறேன் என்றார்.

சுதேசி இயக்கத்தில் ஈடுபட்டிருந்தோமாகையால் கைத்தறி வேஷ்டிகளையும் கூடியவரை சுதேச சாமான்களையுமே உபயோ கப் படுத்துவது எங்கள் குடும்ப வழக்கமாய்விட்டது. அது பற்றி நாங்கள் சிறிது பெருமை பாராட்டுவதுமுண்டு. ஒரு நாள் பாரதியார் திடீரென்று எங்கள் வீட்டிற்கு வந்து, நீங்கள் சுதேசிகளென்று பெருமை கொள்கிறீர்களே உங்களுக்கோர் புதுமை காட்டுகிறேன் வாருங்கள் என்றார். என்ன புதுமை சொல்லுமே என்று கேட்டதற்கு இங்கு ஒருவர் வந்திருக்கிறார், அவர் சுதேசி விஷயத்தில் நம்மை எல்லாம் மீறியிருக்கிறார் வந்து பாருங்கள் என்றார். குதிரை வண்டியைக் கொண்டுவரச் சொல்லி எல்லோரும் ஒன்றாகச் சென்றோம். பட்டணத்தில் சுங்குராமச் செட்டித் தெருவோ அல்லது வேறு தெருவோ எனக்கு ஞாபகமில்லை, அங்கு ஒரு வீட்டின் முற்பகுதி அறையில் விரித்த பாய்மேல் ஒருவர் உட்கார்ந்திருந்தார். எதிரில் மேஜைமேல் உள்ளூரில் செய்த கரடுமுரடான காகிதம்; உள்நாட்டு மைக்கூடு, வாத்திறகு எழுதுகோல் இவைகளை நாங்கள் கண்டு புன்சிரிப் போடு உள் நுழைந்தோம். அங்கிருந்தவரும் சிரித்துக் கொண்டே பாரதியாரை வரவேற்றார். ஒருவரையொருவற்கு அறிமுகப்படுத் திய பிறகு எல்லோரும் பாய்மேல் உட்கார்ந்தோம்.

நாம் சுதேசிகள் என்று சொல்லிக்கொள்வதெல்லாம் வெறும் வாய்ப் பேச்சுதான் என்றார் பாரதியார். நம்மிடம் இன்னும் எவ்வளவோ ஆங்கில சாமான்களிருக்கின்றன. அவைகளை நாம் விட்டெறிவதில்லை. இவர் பாருங்கள் எல்லாவற்றையும் விட்டெறிந்து குறையின்றி வாழ்கிறார். இதோ அவருடைய கெடியாரத்தைப் பாருங்கள், சுவரில் மாட்டியிருக்கிறதே அது, ஐரோப்பிய வாசனையே இல்லாதது. முற்றும் ஜப்பானிலிருந்தே தருவித்துள்ளார். நம் நாட்டு சாமான்களை உபயோகப்படுத்தினால்தான் நாம் உய்வோம். இல்லாவிட்டால் நம் கதி அதோ கதிதான் என்று பாரதியார் முடித்தார்.

நம் நாட்டுத் தொழிலை வளர்ப்பதோடு மாத்திரம் நான் நிற்கவில்லை. அவைகளைப் புறநாடுகளிலும் பரப்ப உத்தேசங் கொண்டிருக்கிறேன். அதற்கு முதலடியாகக் கப்பல் கம்பெனி ஒன்று ஸ்தாபிக்க எண்ணங் கொண்டிருக்கிறேன் என்றார். நாங்கள் எவ்வளவுதான் சுதேச அவா கொண்டவர்களானாலும் நம்மால் திறமையுடன் ஒரு பெருங்காரியத்தை நடத்த முடியும் என்ற நம்பிக்கை இல்லாதவர்களாயிருந்தோம். அது பள்ளிக்கூடப் படிப்பினால் ஏற்பட்ட அவகுணங்களிலொன்றாக இருக்கலாம். ஆனால் சிதம்பரம் பிள்ளை அதைச் சொல்லும் பொழுது அதற்கு அவர் தகுந்த மனிதரே என்ற எண்ணம் மாத்திரம் உண்டாயிற்று.

அவர் அதிக உயரமில்லை. பாரதியாரைப் போல் ஒற்றை நாடியல்ல, இரட்டைநாடிப் பேர்வழி. படபடவென்று பேசமாட்டார். ஓரிரண்டு சொற்கள் சொன்னாலும் அது ஆழ்ந்து மனதில் படியும்படி சொல்வார். ஒளிவீசும் கண்கள், ஆழ்ந்து யோசிக்கும் முகத்தோற்றம். எதையும் பொருந்திக் கேட்பார். எதற்கும் உடனே பதிலளிக்க மாட்டார். நம் சொற்கிணங்குபவர் போலப் பேசித் தம்முடைய வழிக்கு நம்மைக் கொண்டுபோவர். அது முடியாவிட்டால் நம்மோடு வாதம் செய்வதைவிட்டு நடைமுறையில் எடுத்துக் காட்ட முயல்வார். அவரோடு எதிர்வாதம் செய்வோர்க்கும் கூட அவரிடத்தில் நம்பிக்கை தம்மையறியாமலே உண்டாகிவிடும். அவர் கப்பலோட்டிய நாட்களில் அவருக்கு உதவியாளர்களாயிருந்த பெரிய பெரிய வக்கீல்களும் தனிகர்களும் அவர் சொல்லைச் சிரமேற்கொண்டு நடப்பார். எஸ்.டி. கிருஷ்ணய்யங்கார், கே. ஆர். வெங்கடராமய்யர், பி.கே. ராமய்யர் போன்றவர்கள் எல்லாரும் அவர் நிர்வாக சக்தியைக் கண்டே தமது சொத்துகளில் பெரும்பகுதியை இதில் போட்டனர். அவருடைய பெருந்தன்மையையும், தன்னல மறுப்பையும் பற்றி அவர் சிறை சென்ற பிறகு என்னிடம் எஸ். டி. கிருஷ்ணய்யங்கார் பெரிதும் கூறியுள்ளார்.

இப்பெரியாரை நாங்கள் கண்டு வெகுநேரம் பேசிக் கொண்டிருந்தோம். பிறகு அடிக்கடி சந்திப்பதாகத் தீர்மானித்துக் கொண்டு பிரிந்தோம். அவகாசமேற்பட்ட போதெல்லாம் மாலைப்பொழுதிலே கடற்கரைக்குச் சென்று ஓயாது பேசிக் கொண்டிருப்போம். அப்பொழுது அம்மாதிரி பேச்சில் இருந்த உற்சாகம் சொல்லிமுடியாது. அதனால் உண்டான பயன் வேறொன்றில்லாவிட்டாலும் சிதம்பரம் பிள்ளைக்கு முன்பு ஸர்க்காரிடமிருந்த கொஞ்சநஞ்சம் பக்திகூட காற்றாய்ப் பறந்து போயிற்று. நாட்டுச் செல்வப் பெருக்குக்கு வேண்டிய யோசனை செய்வதோடு அதிகார வர்க்கத்தினரின் அகந்தையைத் தொலைப் பதும் அவசியம் எனக் கண்டு கொண்டார்.

இவ்விரு நோக்கமும் ஒன்றுக்கொன்று பெரிதும் முரண்பட் டன. அதிகாரிகளின் பகை செல்வப்பெருக்கின் முயற்சிகளை அழித்து விடும், அவை ஓங்காமல் நசிப்பதற்குண்டான பெருந் தடைகளை எல்லாம் உண்டாக்கும். சிதம்பரம் பிள்ளை ஆரம்பித்த கப்பற் கம்பெனி மாகாண கவர்னர் முதல் சிறு கலெக்டர் வரை பங்கு எடுத்து நடத்தும் பி.ஐ.எஸ்.என்.கம்பெனி கப்பல்களோடு போட்டி போட வேண்டியிருந்தது. அது கண்டு முதலில் அதிகாரிகள் தம்முள் புழுங்கினர். அடியிலிருந்து பிள்ளையவர்கள் முயற்சிகளை குறுக்கு வழிகளில் தடுத்துவந்தார் கள். அதை அவர் அசட்டை செய்து முன்னேறிச் சென்றார். மேலே போகப் போக அதிகாரிகள் நேர்முகமாகவும் தடுக்கலா னார்கள். அவர்கள் கொட்டத்தை அடக்க வேண்டுமென்ற எண்ணமும் இவருக்கிருந்தபடியால் அவர்களை லட்சியம் செய் யாது தூத்துக்குடி வியாபாரிகளைத் தம் கையில் வைத்துக் கொண்டு அவர்கள் அன்பைப் பெற்று கப்பலோட்டிவந்தார்.

பி.ஐ.எஸ்.என். கம்பெனியார் ஒரு காசுகூட வியாபாரிகளுக் குச் செலவில்லாமல் சரக்குகளை எடுத்துப் போவாதாக விளம் பரப்படுத்தினார்கள். அப்பொழுது பிள்ளை அவர்கள் நம் வியாபாரிகளின் கூட்டம் ஒன்று கூட்டி இன்று இலவசமாக சரக்குகளை எடுத்துச் சென்று உங்களது சுதேசிக் கம்பெனியை அழித்து விட்டு பின்பு பதின்மடங்கு கூலியை உயர்த்தி உங்களை நஷ்டப்படுத்தி நாளைக்கு பெரு லாபம் பெறுவார்கள். ஆகை யால் ஏமாறாதீர்கள் என்று எச்சரித்தார். அவர்களிற் பலர் அது கேட்டு அவர் சொற்படி நடந்து வந்தார்கள். பி.ஐ.எஸ்.என். கம்பெனியில் பங்கெடுத்திருந்த பெரிய ஆங்கில உத்தியோகஸ்தர் கள் ஸர்க்காருக்கு முறையிடத் தொடங்கினார்கள். இதை எப்படி தடுப்பதென்று ஸர்க்காரும் ரகசியமாய் வழி தேடி வந்தார்கள். வெளிக்காவது ஒரு பொது காரணம் காட்டியல்லவோ சுதேசி

ஸ்டீம் நாவிகேஷன் கம்பெனியை அமுக்க வேண்டும். அதற்காக வழிபார்த்துக் கொண்டிருந்தார்கள்.

இதற்கிடையில் சூரத்து காங்கிரஸ் விஷயமாகப் பெரு முயற்சிகள் நடந்துவந்தன. இதுவரை காங்கிரஸ் தலைமை யிலிருந்த மிதவாதிகள் தீவிரக் கட்சியினரை ஸர்க்காருக்குக் காட்டி பயமுறுத்தி அற்ப உரிமை சிலவற்றைப் பெற்றுத் திருப்தி அடைந்து வந்தார்கள். தீவிரவாதிகளுக்கு இது பிடிக்க வில்லை. பொது ஜனங்களிடை ஒற்றுமையுண்டாக்கி அதனால் ஏற்படும் வலிமைதான் நம் நோக்கத்தை ஈடேற்றும் எனப் பொது ஜனங்களிடை உழைக்கலானார்கள். சென்னைத் தீவிரக் கட்சியின் தலைவர்களில் ஒருவரான சிதம்பரம் பிள்ளைக்கு இது கை கண்ட பலன். தம்மூர் வியாபாரிகளை ஒன்றுகூட்டி நடத்தும் தொழிலை பெரும் படைவலிகொண்டு ஸர்க்காரும் தடுக்க அஞ்சுகிறார்கள் என்பதைக் கண்கூடாகக் கண்டிருக்கிறார். இனி ஸூரத்து காங்கிரஸ் காரணமாக பொது ஜனங்களைத் திரட்டி ஜனவலிமையை மேலோங்கச் செய்வதெனத் தீர் மானித்துக் கொண்டு சென்னைக்கு வந்து சேர்ந்தார்.

இதற்கிடையே பாரதியாரின் பிரசாரம் சென்னை நகரிலும் தமிழ்நாட்டனைத்திலும் பெரியதோர் சுதந்தர தாகத்தைக் கிளப்பி விட்டது. இந்தியா பத்திரிகையில் அவர் மிதவாதிகளுக்குக் கொடுத்தசாட்டையடிகளும், கடற்கரையிலும் இன்னும் பல பொதுவிடங்களிலும் அவர் விடாது செய்து வந்த சொற்பொழிவு களும் பொது ஜனங்களின் கண்ணைத் திறக்க ஆரம்பித்தன. பொதுக் கூட்டங்களில் அவர் தமிழில் பேசியதோடு தம் நண்பர் ஸூரேந்திரநாத் ஆர்யாவைக் கொண்டு தெலுங்கர்களையும் எழுப்பத் தொடங்கினார். தமிழில் மிதவாதக் கட்சியினரைத் தாங்கி வந்த சுதேசமித்தரன் பத்திரிகை தீவிரக் கட்சியில் சேர்ந்தது. ஜீ. சுப்ரமணிய அய்யர் தீவிரக் கட்சியினரின் பொதுக் கூட்டங்களில் தலைமை வஹிக்கலானார். தெலுங்கு நாட்டில் ஆங்கிலத்தில் ஸ்ரீ பட்டாபி ஸீதாராமய்யா வெளியிட்டு வந்த ''கார்லீலியன்'' என்னும் ஸாஹித்திய பத்திரிகைகூட தீவிர கட்சியினர் பத்திரிகையாய்விட்டது.

வடவேங்கடத்திற்கும் அப்பாலுள்ள தெலுங்கு நாட்டி லிருந்து தென்குமாரி நாடுள்படவிருந்த எல்லா நாடுகளும் ஒரே சுதந்தர தாகம் கொண்டெழுந்தது. இப்பேரியக்கத்தைச் சொற் சித்திரப் படுத்தி நமக்குக் கொடுத்தவர் பாரதியார்தான். அவர் மூலமாக இந்நாடு ''என்று தணியும் சுதந்தர தாகம்?'' என்று கேட்கத் தொடங்கி விட்டது. இந்தக் கேள்வியோடு அது நிற்கவில்லை. தன் முயற்சியாலேயே அந்த தாகத்தைத் தணிக்க

வேண்டும் எனவும் கண்டு கொண்டது. மிதவாதிகள் நல்ல தேசபக்தர்களே யானாலும் அவர்கள் முயற்சிகளெல்லாம் ஸர்க் கார் அருளைப் பெறுவதையே தம் பெரு நோக்காகக் கொண்டி ருந்தன. அவர்கள் நன்கொடையாக அவ்வப்போது கொடுக்கும் சிற்சில உரிமைகளைப் பெற்று நாம் திருப்தியடைந்து மேலும் மேலும் அவர்களையே கேட்டு வந்தால் ஓர் காலத்தில் நாம் சுதந்தரம் பெறலாம் என்பது அம்மிதவாதக் கட்சியினர் கொள்கை. இது தவறானது என்பதை தென் இந்தியா மாத்திர மன்று வட இந்தியாவும் உணரலாயிற்று. ஜன ஸமூகம் எங்கும் ஒரே குரலாய் தீவிரக் கட்சியினரை ஆமோதிக்கத் தொடங்கிற்று. பால கங்காதர திலகர் இதற்குத் தலைமை வகித்தார்.

இப்பெருமான் முயற்சியால் ஆங்காங்கு தீவிர கட்சியினர் ஒன்று கூடி உழைக்கலானார்கள். தமிழ்நாட்டில் பாரதியாரும் சிதம்பரம் பிள்ளையும் கிளர்ந்தெழுந்தனர். ஸூரத் காங்கரசில் மிதவாதிகளோடு பெரும் போராட்டம் ஏற்படும் என தேசம் பூராகவும் ஒருணர்ச்சி பரவி வந்தது. அப்போராட்டத்தில் சிறிதும் சளைக்கலாகாதென்று சென்னை மாகாணத்தினர் பெருமுயற்சி யோடிருந்தனர். பாரதியார் இரவு பகல் உழைத்து பல கூட்டங்கள் கூட்டியும் பற்பல எழுத்துக்களாலும் ஜனங்களை விழித்தெழச் செய்தனர். தூத்துக்குடியிலிருந்த சிதம்பரம் பிள்ளைக்கும் ஓர் ஓலை விடுத்தார். ஆங்காங்கு பெருங்கிளர்ச்சியுண்டாக்கி சூரத் துக்கு இயன்றவரை பெருங்கூட்டமாகப் பிரதிநிதிகளை அனுப்பச் செய்யும்படி வேண்டினார்.

இப்பெரு முயற்சிகளைச் செய்துவிட்டு சென்னை வந்து சேரும் படி பாரதியார் கேட்டுக் கொண்டபடி பிள்ளையவர்களும் வந்து சேர்ந்தனர். இவ்விரு பெரியார்களும் சென்னையில் கூடியபோது அங்குண்டான உற்சாகத்தை அளவிட்டுக் கூற முடியாது. சின்னஞ் சிறு பள்ளிப் பிள்ளைகள் முதல் பெரிய பெரிய கிழவர் வரை யாவர் மனதிலும் ஒரே குதூகலம், ஒரே மகிழ்ச்சி. ஆங்கிலம் படித்துப் பெரும் பதவிகளிலிருந்த ஒரு சில மிதவாதிகள் இதற்கு விலக்காக தூர நின்றனர். மற்றவர் யாவரும் இவ்வந்தேமாதரக் கட்சியினரை, இச் சுதேசக் கட்சி யினரை ஒரே மனதுடன் ஆமோதித்தனர்.

1907ம் ஆண்டு நவம்பர் கடைசியிலேயே சிதம்பரம் பிள்ளை சென்னை நகர் வந்து சேர்ந்தார். டிஸம்பர் கடைசியில் ஸூரத்து காங்கிரஸ் நடைபெற வேண்டும். இக்காங்கிரஸைப் பற்றிய சில முன் சம்பவங்களை அறிதல் நலம்.

இந்தியாவில் ஏ.ஓ. ஹ்யூம் இக் காங்கிரெஸ் இயக்கத்தை ஆரம்பித்ததாகக் கூறுவது வழக்கம். ஆனால் சென்னையிலும்,

பம்பாயிலும், கல்கத்தாவிலும் தனித்தனியாக சிற்சில பொது ஜன சங்கங்கள் நம் சீர்கேடான ராஜீய விஷயங்களைச் சீர்படுத்த முயன்று வந்தன. அவைகளை ஒன்றுபடுத்தி இந்திய இயக்கமாக மாற்றியதுதான் இக் காங்கிரஸின் பெருமை. இப்பெருமையில் பெருந் தவறான ஒரு பாகம் ஸர்க்காருக்கு மனு செய்து கொள்வதென்பதேயாகும். நம் நாடு சீர்படுவதற்கு நாம் முயல வேண்டும், அதற்கு ஸர்க்காரும் உதவ வேண்டும் என ஆரம்பித்தார்கள். அது வரவர ஒரே முயற்சியில் முடிவடைந்து வந்தது. அதாவது எதற்கும் ஸர்க்காருக்கு மனு அனுப்புவதி லேயே அவர்கள் முக்கிய நோக்கு. வருஷத்துக்கொரு முறை மூன்று நாள் கூடுவதும் ஸர்க்காருக்கனுப்ப வேண்டிய மனுக் களைத் தமது தீர்மானங்களாக இயற்றுவதுமே வெகுகாலம் வரை அவர்கள் செய்து வந்த கார்யம். சமூஹ சீர்திருத்தக்காரர்கள் காங்கிரஸ் பந்தரில் மகாநாடு நடத்துவார்கள். ஆனால் அதற்குக் காங்கிரஸ்....

இது போதாதென்று உணர்ந்த திலகர் தமது 'கேஸரி' பத்திரிகை மூலமாகப் பொது ஜனங்களை தட்டி எழுப்ப ஆரம்பித்தார். மிதவாதக் கட்சித் தலைவரான கோகலேகூட அதனால் ஏற்படும் பெரும்பயனைக் கண்டார். இந்தியாவின் ஊழியர் சங்கம் (Servants of India Society) என்பதை ஏற்படுத்தி னார். ஆனால் இதன் முக்கிய நிபந்தனை ஸர்க்காரோடு அதிக முரண்பாடு கூடாதென்பதே. திலகர் பிரச்சாரம் வலுக்க வலுக்க ஸர்க்காரோடு முரண்பாடு அதிகப்பட்டுக் கொண்டே வந்தது. அதனால் மிதவாதக் கட்சி, தீவிரக் கட்சி என இருவகுப்பு ஏற்படலாயிற்று. இவ்விரு வகுப்புக்குள் விவாதம் முற்றிக் கடைசியில் ஸூரத் காங்கிரஸில் பெரும் போராய் முடிந்தது.

சென்னையில் 1903-ல் நடந்த காங்கிரஸோடு பொருட்காட்சி (Exhibition) ஒன்றுசேர்த்தார்கள். அதற்காகத் திரளான ஜனங்கள் வந்தார்கள். காங்கிரசின் முக்கிய கருத்து சரிவர நடைபெறா ததனால் — அதாவது காங்கிஸ் மஹாநாடுகளில் பெரிய பெரிய வாக்காளர்கள் எவ்வளவு திறமையுடனும் ஆவேசத்துடனும் பேசியும் அவர்கள் விரும்பிய ராஜீய சீர்த்திருத்தம் சிறிதும் ஏற்படாததனால், தம் வேண்டுகோளுக்கு ஸர்க்கார் செவி சாய்க்காததனால் — பொருட் காட்சிகள் போன்ற ஆடம்பரங் களால் தம் குறையை மறைக்க முயன்றனர் போலும். அடுத்த வருஷம் அதவாது 1904 டிஸம்பரில் பம்பாயில் நடந்த காங்கிரஸில் இப்பொருட்காட்சி வைபவம்தான் மிகப் பெரிதா யிருந்தது. ஆனால் அதற்கடுத்த வருஷம் காங்கிரஸ் பனாரஸில் கூடியபோது அதன் ஆலோசனை சபையில் ஒரு புத்துயிர் தோன்ற

ஆரம்பித்தது. அவ்வருஷம் இங்கிலாந்து இளவரசன் (Prince of Wales) இந்தியாவில் யாத்திரை செய்யப் போவதால் அப்பொழுது அவர்க்கு ஒரு நல்வரவு பத்திரம் அளிக்க வேண்டுமென்ற விஷயத்தைப் பற்றிப் பேசலானார்கள். அச்சமயம் பாலகங்காதர திலகர் இதை எதிர்த்தார். நமக்கொரு நன்மையும் செய்யாமலும் நம் வேண்டுகோள்களுக் கிணங்காமலுமிருக்கும் ஸர்க்காரின் இளவரசன் வரவை நாம் ஏன் கொண்டாட வேண்டும் என்றும் அவருக்கு இந்தியாவில் தலைவிரித்தாடும் வறுமையை காட்டு வதை விட்டு விருந்தளிப்பது கூடாதென்றும் இடித்துக் கூறினார்.

மிதவாதத் தலைவர்களுக்குள் இச்சொற்பொழிவு பெரும் திகிலை உண்டாக்கிவிட்டது. அடுத்த வருஷமாகிய 1906ல் வங்காளப் பிரிவினைக் குழப்பமும் ஏற்படலாயிற்று. அப்போது காங்கிரஸ் தலைவராகத் திலகர் நியமிக்கப்பட வேண்டுமென்ற பெருங்குரலும் ஒலிக்கவே மிதவாதிகள் நம் பெருங்கிழவரான தாதாபாய் நௌரோஜியை தலைவராக நியமித்தால் யாரும் குறுக்கிடார்கள் என்று அவரையே வேண்டிக் கொண்டார்கள். இங்கிலாந்தில் இருந்த அவர் இவ்வேண்டுகோளுங்கிணங்கி தமது சொற் பொழிவை இங்கிலாந்திலேயே அச்சிட்டு காங்கிரஸ் கூடும் தினத்திற்குச் சிறிதே முன்பு இந்தியா வந்து சேர்ந்தார். அவர் சொற்பொழிவில் முதன்முதல் ''சுயராஜ்யம்'' என்ற சொல் காணப்படவே மிதவாதிகள் வெகு பயந்து அச்சொல்லை விலக்கிவிடும்படி வேண்டினார்கள். அதற்கு தாதாபாய் நௌ ரோஜி இணங்கவில்லை. அவர் வாயிலிருந்து வெளிவந்த இச்சொல் நாடெங்கும் பரவி ''சுராஜ்யம் எமது பிறப்புரிமை'' எனத் திலகரின் கடைமொழியாகவும், அவர் உறுதி மொழியாக வும், நம் நாட்டில் இன்றைக்கு உலாவிக் கொண்டிருக்கிறது.

இதற்கடுத்த வருஷமாகிய 1907ல் மிதவாதிகள் - தீவிரவாதி களைக் காங்கிரசிலிருந்து ஒழித்துவிடுவதென நிச்சயித்து பல மாதங்கள் முன்னிருந்தே உழைக்கலானார்கள். அவ்வருஷம் காங்கிரஸ் கூடவேண்டிய இடமாகிய நாகப்பூரில் திலகர் கூட்டத்தார் அதிகம் என பயந்து தம் சொற்படி கேட்கும் தலைவர்கள் சூரத் நகரில் காங்கிரஸைக் கூட்டுவதென நிச்சயித் தார்கள். திலகர் அதற்குச் சிறிதும் பயப்படாது சில மாதங்களுக்கு முன்பே அங்கு சென்று தமது கொள்கையை பொது ஜனங்களுக்கு விளக்கலானார். இவ்வளவு தன்னல மறுப்போடு செய்யும் சொற்பொழிவுகளைக் கேட்க அங்குள்ள ஜனங்கள் ஆவலோடு கூட்டம் கூட்டமாக குழுமினர். இது கண்டு மிதவாதிகள் காங்கிரஸ் மேடை மேல் தாம் செய்யப் போகும் சொற்பொழிவு களில் தீவிரவாதிகளைத் தாறுமாறாகத் திட்டி இகழப் போவ

தோடு நில்லாமல் பலாத்காரமாக அவர்களை காங்கிரஸ் பந்தரி லிருந்து வெளியேற்றச் சில தடியன்களையும் கூட்டியிருந்ததாகக் கேள்வி. அதைப் பற்றி உறுதி கூற முடியாது.

இவ்வளவு மும்முரமாக நடக்கப் போகும் ஸூரத் காங்கிரஸ் மகாநாட்டில் தீவிரகட்சிக்கு ஜயமுண்டாக்கவே சென்னை திரு வல்லிக்கேணியில் பலர் கூடி ஆலோசிக்கலானோம். பாரதியார் அதற்கு வேண்டியதைச் செய்ய ஒப்புக் கொண்டு சிதம்பரம் பிள்ளையைச் சென்னைக்கு வரவழைத்து பெருந்திரளாக ஸூரத் துக்குப் புறப்பட்ட விஷயம் முன்னரே கூறியுள்ளோம். அங்கு நடந்த செய்திகளை பிள்ளையவர்களே தமது சுயசரிதத்தில் நன்கு விளக்கியுள்ளார். அவ் வருஷம் யாது காரணம் பற்றியோ என்னால் ஸூரத்துககுப் போக முடியவில்லை. என் தமையனார் திருமலாசாரியாரும் அவரோடு பல நண்பர்களும் காங்கிரஸ் பிரதிநிதிகளாகச் சென்றனர். அவர்கள் திரும்பியதும் திலகரை தடியன்கள் தாக்க முயன்றபோது தடுத்து திலகருக்கு மெய்காப்பா ளர்களாகச் சூழ்ந்து நின்று அவரை பத்திரமாக வெளியேற்றி வீடு சேர்த்த சென்னைவாசிகளில் என் தமையனாரும் அவர் நண்பர்களும் இருந்ததாகப் பலர் கூறக் கேட்டிருக்கிறேன்.

ஸூரத்திலிருந்து திரும்பிய போது பாரதியாரும் பிள்ளை யவர்களும் பெரும் யோசனைகளோடு வந்தார்கள். அங்கு நிகழ்ந்தவற்றை பாரதியார் ''எங்கள் ஸூரத் யாத்திரை'' என்னும் ஒரு சிறு நூல் எழுதி வெளியிட்டார். அதில் அங்கு நடந்த சம்பவங்களைப் பற்றி விவரமாக விளக்கினார். தீவிர கட்சியினர் ஒன்று கூடி தமது நோக்கமுடைய பத்திரிகைகள் ஒற்றுமையாய் உழைக்க வேண்டும் என்றும், தலைவர் எந்த விஷயத்தை வற்புறுத்திக் கூற வேண்டுமென்கிறாரோ அதைப் பற்றி எல்லா பத்தரிகைகளும் ஒருமித்து, விடாது எழுதி வரவேண்டுமென்றும் தீர்மானித்தார்களாம். இனி ஆங்காங்கு சங்கங்கள் நிறுவ வேண்டுமென்றும், தம் தமூர் ஜனங்களோடு நெருங்கிய சம்பந்தம் ஏற்படுத்திக் கொள்ள வேண்டும் எனக் கூறியபடியால் சிதம்பரம் பிள்ளை சென்னையில் வெகுகாலம் தாமதிக்க வில்லை. திரும்பி வந்த சில நாட்களுக்கெல்லாம் தூத்துக்குடிக் குப் புறப்பட்டார். இதோடு கூட சுதேசி நாவாய்க் கம்பெனி விஷயமாகவும் அவர் அவசியம் அங்கு செல்ல வேண்டியிருந்தது.

சிதம்பரம் பிள்ளை சென்னையிலிருந்து புறப்பட்ட சில காலத்துக்கெல்லாம் விபின சந்திர பாலர் அங்கு வந்தார். அவர் சென்னைக்கு ஓரிருமுறை முன்பு வந்திருக்கிறார். அப்பொழுது அவர் பெயர் அதிகமாகப் பரவவில்லை. ஆனால் இம்முறை அவர் வரவு சென்னை சரித்திரத்திலேயே ஒரு பெரும்

செய்தியாகும். இவர் தீவிர கட்சியினர் கொள்கைகளை வெகு தெளிவாக எடுத்துக் கூற சென்னைக் கடற்கரையில் பல பிரசங்கங்கள் செய்தார். ஸ்வராஜ்யம், நமது உரிமை, நமது கடமை, ஸர்க்காரின் அகந்தை முதலியவற்றைப் பற்றி அவர் செய்த சொற்பொழிவுகள் இன்றைக்கும் மறக்கற்பாலதன்று. ஜி. சுப்பிரமணியய்யர் பல நாள் இவைகளில் அக்ராசனம் வகித்திருக்கிறார். ஆழ்ந்த பக்தியுள்ள மிதவாதக் கட்சியினர் பலர் பெருங்கடலின் காம்பீர்யத்தோடு பேசும் பாலர் சொற்பொழி வுகளை ஒளிந்து மறைந்து நின்று கேட்டுச் செல்வார். அக்கால அட்வோகேட் ஜனரலாகவிருந்த ஸர் வி. பாஷ்யமய்யங்காரோடு சென்னை கவர்னர் பாலர் உபன்னியாஸங்களைப் பற்றி பேசி ஏன் ப்ராஸிக்யூட் செய்யலாகாது (அதாவது வழக்கு தொடரலா காது) என்று கேட்டபோது பாலர் கூறும் நியாயங்கள் ஆணித்தர மானவை. அவை பற்றி நாம் வழக்குத் தொடர்ந்தால் நம் மானம் போய்விடும் என்பது தமது அபிப்பிராயம் எனக் கூறினாராம்.

பிபின சந்திர பாலர் வந்த நாள் முதல் மறுபடி திரும்பிய நாள் வரை பாரதியாருக்கு ஒரு சிறிது கூட ஓய்வு கிடையாது. இந்தியா பத்திரிகைக்கு எழுதுவதை விடாமல் பாலர் பேசுவதற்கு முன்பின்னும் பாரதியார் பேசத் தவறமாட்டார். தமது தேசீய கீதங்கள் இந்தியா பத்திரிகையில் வெளிவந்த பிறகு அவைகளை இம்மேடைமீது பாடுவார். அவற்றைத் தாமே இயற்றியவராகை யால் அவைகளைப் பாடும் போது தமது முழு உணர்ச்சியும் வெளிவரும். அவைகளைக் கேட்க ஜனங்கொண்ட அவா கொஞ்சமன்று. பாரதியார் மேடை ஏறினார் என்றால் கூட்டத்தில் சிறிது சத்தம் கூட இராது. அழுகிற குழந்தைகள் கூட வாய் மூடிக் கொள்ளும். அவர் தம் தொண்டை கம்மியிருக்கிறதென்று எவ்வளவு கூறினாலும் அவர் பாட்டுகளில் ஒரு சிலவாவது அவர் பாடிக் கேட்காமல் அவரைப் போகவிட மாட்டார்கள்.

பிபின சந்திர பாலர் உபன்னியாஸங்களாலும் பாரதியார் பாட்டுகளாலும் சுரக்க ஆரம்பித்த மகாஜனங்களின் பேருற்சாகம் சென்னையோடு நிற்கவில்லை. ஊற்றுப் பெருக்குப் போல் பெரு வெள்ளமாய் நாடெங்கும் கரைபுரண்டோடிற்று. இதன் எதிரொலி நம் சிதம்பரம் பிள்ளை வசித்த தூத்துக்குடியில் மோதாமல் போகுமா? அங்கு மோதினது மாத்திரமல்லாமல் ஒரு பெரும் சுழியை அங்குண்டாக்கி விட்டது. செய்வன திருந்தச் செய்வதே பிள்ளையவர்கள் வழக்கமாகையால் அவர் ''பாலர் தினம்'' என்றும் ''சுராஜ்யக் கொடி நாட்ட தினம்'' என்றும் சில நாட்களைக் கொண்டாட ஆரம்பித்தார். தூத்துக்குடியிலிருந்த ஒவ்வொருவரும் அத்தினங்களைக் கொண்டாடலானார்கள். வெள்ளையர்களிடம் வேலை செய்து வந்தவர்கள் கூட அவை

களில் ஈடுபடவே வெள்ளையர் பாடு கஷ்டமாய் விட்டது. 'என் வேலையாட்கள் கைவிட்டனர், என் பாக்கியமும் தொலைந் தது'' என்றொரு ப்ரென்ச் கவி கூறியது போலவே வெள்ளையர் பாக்கியமெல்லாம் அவர்கள் ஊழியர்களையே பொறுத்தது. இதையறிந்த தூத்துக்குடி துரைகள் சென்னை ஸர்க்காருக்கு எழுதி சிதம்பரம் பிள்ளையை எப்படியாவது கைது செய்தாலன்றி தமக்கு உய்யும் வழியில்லை என எழுதினார். கடைசியாக 1908ம் ஆு மார்ச்சு 12ம் தேதியன்று சிதம்பரம் பிள்ளையையும், சுப்பிரமணிய சிவாவையும், பத்மநாப அய்யங்காரையும் கைது செய்து வழக்குத் தொடங்கினார்கள்.

இச்செய்தி நாடெல்லாம் பரவி சுதேசிய உணர்ச்சியைப் பின்னும் கிளறிவிட்டது. ஜனங்களுக்கெல்லாம் மனதில் பேருற் சாகம் உண்டாயிற்று. நாள்தோறும் ஸர்க்கார் குற்றச்சாட்டும் அதற்குப் பிள்ளையவர்களின் ஆணித்தரமான பதிலும் யாவரை யும் வியக்கச் செய்தன. பிள்ளையவர்களும் ஸர்க்காரைச் சும்மாவிடவில்லை. அவர் தம் பக்ஷமாக இரு நூறு சாட்சி வரை கோரினார். அதில் சென்னை கவர்னர் முதல் சாதாரண போலீஸார் வரை சேர்க்கப்பட்டிருந்தனர். என் சகோதரர்களும் பாரதியாரும் நானும் கூடச் சேர்க்கப்பட்டிருந்தோம் என்பதில் ஆச்சரியமொன்றுமில்லை. பாரதியார் தம் நண்பர் பிடிபட்ட செய்தியைக் கேட்டதும் பொங்கி எழுந்தார். பிள்ளையவர்களுக் கும் மாஜிஸ்ட்ரேட் விஞ்சுக்கும் நடந்த சம்பாஷணை ஒன்றை தம் கவித்திறனைக் கொண்டு ஒரு சிறு நாடகமாக்கிவிட்டார். நந்தனார் சரித்திரத்தைத் தழுவியதாகவிருந்தாலும் இதில்தான் எவ்வளவு நகைச்சுவை! அதிகாரியின் அகந்தைதான் எத் தன்மைத்து! பிள்ளையவர்களின் பெருந்தன்மை எம்மட்டு ஓங்கி நிற்கிறது!

சிதம்பரம் பிள்ளை கைது செய்யப்பட்ட செய்தி கிடைத்த உடனே சென்னையில் பெயர் பெற்ற கிரிமினல் வக்கீலான சடகோபாசாரியரை அமர்த்தி திருநெல்வேலி பாளையங்கோட் டைக்கு அனுப்பினோம். அவர் அங்கு சென்று கோர்ட்டுக்கு அருகாமையிலுள்ள வண்ணாரப் பேட்டையில் காஸ்மபாலிடன் கிளப் என்றோ அல்லது வேறு பெயர் கொண்டதோவான பெரிய வக்கீல்களின் கிளப்பில் தங்கி டிபென்ஸ் சாட்சிகளை விசாரிக்க லானார். சாட்சி ஸம்மன்ஸ் கிடைத்த உடனே குறித்த தினத்தன்று கோர்ட்டில் ஹாஜர் ஆவதற்குப் புறப்பட்டோம். பாரதியார், ஸுரேந்திரநாத் ஆர்ய, நாங்கள் ஒரு சிலர் சிதம்பரம் பிள்ளை யைக் காண விரும்பிய மற்றும் சிலர் எல்லோரும் ஒரு கூட்டமாக கூடி இரண்டாம் வகுப்பில் ரயில் பிரயாணம் செய்தோம். உடனே

ஸர்க்கார் வேவு போலீஸ்காரரை எங்கள் மேல் போட்டார்கள். இதைக் கண்டு பயந்து அவருக்கு விரோதமாக சாட்சி சொல் வோம் என்ற எண்ணமோ என்னவோ தெரியவில்லை. சிதம்பரம் பிள்ளைக்கு அனுகூலமான சாக்ஷியம் சொல்ல நாங்கள் பெரிதும் விரும்பினோமானாலும் எங்கள் முக்கிய கருத்து அவரைக் காணவேண்டுமென்பதே.

திருநெல்வேலி வந்ததும் வக்கீல் ஸாது கணபதி அய்யரை யும், சென்னை வக்கீல் சடகோபாசாரியரையும் கண்டோம். அவர்கள் உங்கள் சாட்சியம் அவசியமில்லை, நீங்கள் ஊர் திரும்பலாம் எனக் கூறி விட்டார்கள். எங்கள் முக்கிய நோக்கத்தை நிறைவேற்றிக் கொள்ள பாளையங்கோட்டை ஸப்ஜெயில் சென்றோம். அங்கு செல்லும் போது எங்களுக்கு மனவருத்தம் அதிகம். இவ்வளவு பெரிய தேசாபிமானிகளை சாதாரண திருடர்களைப் போல் கைது செய்து அடைத்திருக்கிறார் களே இது என்ன கொடுமை என்று வருந்தினோம். தலை தொங்க, மனம் கசிந்து ஜெயிலில் நுழைந்த எங்களை பிள்ளைய வர்கள் சிரிக்கும் படி செய்து விட்டார். அவர் முகத்தில் சிறிது கலவரம் கூட காட்டவில்லை. சிரித்துக் கொண்டே எங்களை வரவேற்றார். ''என்ன தலைவராகிய நீங்களே இப்படிச் செய்து விட்டீர்களே?'' என்று நாங்கள் கேட்டதற்கு ''எல்லாம் நன்றாகத் தான் முடியும்'' என்றார். பாரதியார் மனம் வெகு சீக்கிரத்தில் இளகும். பிள்ளையவர்களைக் கண்டதும் அவரைக் கட்டிக் கொண்டு மனம் கசிந்தார். ஆனால் அவர் முகமலர்ந்து தேற்றுவதைக் கண்டு தாமும் உற்சாகம் கொண்டார். தமது பாடல்களைப் பாடினார். எங்களுக்கிருந்த மற்றை நேரத்தை வெகு உல்லாசமாகவே அவர்களோடு காலம் கழித்தோம். என்ன தைரியப்படுத்திக் கொண்டாலும் பிரியும் போது மனம் திரும்பி யும் வருந்தத்தான் செய்தது. கேஸ் என்னவாகுமோ என்ற கவலையுடன் திரும்பிச் சென்றோம்.

பிள்ளையவர்கள் கேஸைப் பற்றி அவரே தனது சரிதத்தில் கூறியுள்ளாராகையால் நாம் அது பற்றி இங்கே கூற வேண்டிய தனாவசியம். நாங்கள் சென்னை திரும்பியதும் எங்கள் பேரில் ஸர்க்கார் அதிக கவனம் செலுத்தத் தொடங்கினார்கள். வேவு போலீஸ் ஒவ்வொருவருக்குப் பின்னும் ஒரு ஆளைப் போட்டு எங்கள் செயல்களை தமக்குத் தெரிவிக்கும் படி கட்டளையிட் டார்கள். பாரதியார் அவ்வேவுகாரனை அழைத்துத் தம் வீட்டு வேலைகளைச் செய்வித்துக் கொள்வார். துணிகளைத் தோய்க் கவும் மற்றும் சில்லறை வேலைகளைச் செய்யவும் அவன் உதவினான். அப்படி நெருங்கிப் பழகுவதனால் தமக்கு எங்க ளுடைய அந்தரங்க விஷயங்கள் எளிதில் தெரியலாம் என்பது

வேவு போலீஸின் அபிப்பிராயம் போலும். நாங்கள் திருநெல்வேலி செல்லு முன்பே வேவு போலீஸ் எங்களைத் தொடர்ந்தார்களானாலும் அது அப்பொழுது சற்று மறைவாக நடந்தது. பிறகு அதை பகிரங்கமாகவே நடத்தலானார்கள். மற்றவர்கள் எங்களோடு சேர பயப்பட வேண்டும் என்பதற்காகவும் அப்படிச் செய்திருக்கலாம்.

இவ்வேழை வேவு போலீஸ் ஆட்களுக்கு எங்களிடம் அனுதாபம் அதிகம். ஏதோ கடனுக்காக மேலதிகாரிகளுக்கு ஒரு ரிப்போர்ட் அனுப்புவார்களே ஒழிய மற்றபடி நாங்களிட்ட வேலையை மனமுவந்து செய்வார்கள். மேலதிகாரிகளுக்கு எங்கள் விஷயங்களைத் தெரிவிப்பது போலே போலீஸில் நடக்கும் சில அந்தரங்க விஷயங்களை எமக்கும் தெரிவிப்பார்கள். பாரதியாருக்கு இரண்டு மூன்று நாட்கள் முன்னதாகவே தெரியும் அவரைக் கைது செய்ய உத்தரவு செய்யப் போகிறார்கள் என்ற விஷயம். சிதம்பரம் பிள்ளை கேஸைப் பற்றி தீவிரமாக எழுதிய பத்திரிகையை பரிசோதனைக்குள்ளாக்கி அதன் அதிபராயிருந்தவரை கைது செய்தபொழுதே தமக்கும் தீங்கிழைப்பார்கள் என்பது பாரதியாருக்கும் தெரியும். ஆனால் தாம் இன்னது செய்வதென்பது விளங்காதபடியால் போகப் போகப் பார்த்துக் கொள்வோம் என்றிருந்தார். ஜீ. சுப்பிரமணியய்யர் மேலும் தம்மேலும் வாரன்ட் தயாராய் விட்டது என்று தெரிந்தவுடனே என்னிடம் ஆலோசனைக் கேட்டார். நீர் புதுச்சேரிக்குச் சென்று விடும் பட்சத்தில் இந்த வாரண்ட் அங்கு செல்லாது, நீர் போய்த் தங்கினால் நானும் சில நாட்களில் வந்து சேருகிறேன் என்றேன். சென்னை ஜனசங்கத்தில் நான் முக்கியனாயிருந்தபடியால் ஸர்க்கார் என் மேலும் ராமபாணம் தொடுப்பார்கள் என்று எனக்குத் தோன்றிற்று. ஆகையால் குடும்ப விஷயங்களை ஒருவழிப்படுத்தி விட்டு ஒரு வாரத்தில் புறப்படுவதென்று நானும் நிச்சயித்துக் கொண்டேன்.

பாரதியார் சிதம்பரம் பிள்ளையின் சிறைவாசத்தைக் கண்ட பிறகு தாம் எக்காரணத்தாலும் அப்படிச் சிக்கிக் கொள்ள விரும்பவில்லை. நடுநிலை தவறி வெறி கொண்டு நம்மைத் துன்புறுத்தப் புகும் ஸர்க்கார் கையில் — நமக்குத் தப்ப வழியிருக்கும் போது — நாம் ஏன் சிக்கிக் கொள்ள வேண்டும்? துஷ்டனைக் கண்டு தூரவிலக வழியிருக்கும் போது தூர விலகிப் போவோம் என்று அவர் புதுச்சேரி செல்லத் தயாரானார். புதுவையில் என் நண்பரான சிட்டி குப்புசாமி அய்யங்காருக்கு ஒரு கடிதம் எழுதி அவரிடம் கொடுத்து அவரைப் புறப்படச் செய்தேன். அவர் அங்கு சென்ற இரண்டு நாட்களுக்குள் ஆங்கில ஸர்க்காருக்கு அவர் இருப்பிடம் தெரிந்து விட்டது.

ப்ரெஞ்ச் போலீஸிடம் கோள் சொல்லத் தொடங்கினார்கள். பாரதியார் பெரும் புரட்சிக்காரர் என்றும் அவரைப் புதுவையில் தங்காமல் செய்வது நலம் என்றும் அதற்காக அவருக்கு இடம் கொடுத்தவரைப் பயமுறுத்தினால் பின்பு அவரை யாரும் ஆதரிக்கத் துணியார் என்றும் ப்ரெஞ்ச் போலீஸ் தலைவருக்கு போதித்தார்கள். அவரும் சிட்டி குப்புசாமி அய்யங்காரைக் கூப்பிட்டனுப்பி மிரட்டினார். அய்யங்கார் சற்று பயந்து பாரதியாரோடு நடந்ததைக் கூறி என்ன செய்வதென்று கேட்டதற்கு நீர் பயப்பட வேண்டாம் நான் இரண்டு நாட்களுக்குள் வேறுயிடம் பார்த்துக் கொள்கிறேன் என்று பதிலளித்தார். பிறகு தம்மிடம் வந்து கொண்டிருந்த குவளைக் கிருஷ்ணமாச்சாரி — (அதாவது மேற்படி குப்புசாமி அய்யங்காருடைய மனைவியின் ஒன்றுவிட்ட தங்கையின் புருஷர். இவரைப் பற்றித்தான் பாரதியார் தம் கண்ணன் பாட்டிலும், பாரதி அறுபதிலும் குறிப்பிட்டுள்ளார்.) — யைக் கூப்பிட்டு இந்தியா பத்திரிகைச் சந்தாதார் இங்கு யார் இருக்கிறார்கள் என விசாரித்தார். அவர் ஸ்ரீ சுந்தரேச அய்யரை அழைத்து வந்தார். இவரோடு சம்பாஷித்ததில் தாமும், சத்யவாகீசுவரர் முதலிய சிலரும் ஒரு சங்கம் நடத்துவதாகவும் அதற்காக ஒரு தனி அறை ஒன்று குசக்கடைத் தெருவில் வாடகைக்கு எடுத்திருப்பதாகவும் அங்கு பாரதியார் ஒரு தடையுமின்றி வசிக்கலாம் என்றும் கூறினார். பாரதியாரும் உடனே அங்கு சென்று தங்கினார்.

இச்செய்திகள் திருவல்லிக்கேணியில் எனக்கு எட்டினதும் நான் உடனே புறப்பட்டு புதுவை சேர்ந்து அங்கு கலவை சங்கர செட்டியாரோடு பேசி கலியான் தோட்டத்திலுள்ள அழகிய கலியான் பங்களாவில் பாரதியாரும் நானும் தங்கலானோம். இதுவே புதுவையில் எங்கள் பன்னிரண்டு வருஷகால வாஸத்தின் ஆரம்பம். இவ்வருஷங்களில் தான் ஸ்ரீ அரவிந்தரும் வ.வெ.ஸு. அய்யரும் புதுவை வந்ததும், திலகரும், பிள்ளையவர்களும் தண்டிக்கப்பட்டதும், இவருக்கு ஈராயுள் சிறைவாசம் விதிக்கப்பட்டதும், அப்பீலில் அது ஆறு வருஷமாக மாற்றப்பட்டதும், கோயமுத்தூரிலும், கண்ணூரிலும் அவற்றைக் கழித்ததும், விடுதலையடைந்து பாரதியாரைக் காண புதுவை வந்ததும் ஆகியவெல்லாம் நிகழ்ந்தன. சிறைவாசம் செய்து முடித்த ஸுரேந்திரநாத் ஆர்யாவும் கிறிஸ்தவ மதம் தழுவி அமெரிக்கா செல்லுமுன் எங்களிடம் புதுவைக்கு வந்திருந்தார். அவர் சற்று மனமுடைந்தவராகவே காணப்பட்டார்.

சிதம்பரம் பிள்ளை புதுவை வந்ததும் நானும் அவரை பாரதியார் வீட்டில் போய்க் கண்டேன். அவர் புதுப்புது யோசனைகள் செய்யாமலிருக்கவில்லை. ஸ்ரீ அரவிந்தரோடு கூடி

இந்திய முன்னேற்றம் மாத்திரமே அன்று உலக முன்னேற்றத்திற்கும் கூடப் பாடுபடப் போவதாகச் சொன்னார். அவருடைய உற்சாகம் வெளிக்குச் சிறிதும் குன்றியதாகக் காணப்படவில்லை. ஆனாலும் எனக்கு அவர் முன்பு கண்ட சிதம்பரம் பிள்ளையாக இருக்கவில்லை. உள்ளூரத் தாம் தோற்றுவிட்டோம் என்ற எண்ணம் குடி கொண்டுவிட்டதாகத் தோன்றிற்று. தமது அருங்குழவியாகிய நாவாய்க் கம்பெனி அழிந்து விட்டதே. அதன் கப்பலை நேர் எதிரியாகிய பி.ஐ.எஸ்.என். கம்பெனிக்கே விற்றார்களே என்ற மனக்குறை அவரை வாட்டி வந்தது. இத்தோல்வி மனப்பான்மை அவருடைய ஸாமார்த்தியத்தை ஓங்கவிடவில்லை. முன்பு எதையும் ஏற்றுக் கொண்டு முடிக்க வல்ல இவர் இப்பொழுது எதற்கும் தயங்க வேண்டியிருந்தது. அவர் இயற்கையாகவே நல்ல தீரராயிருந்தபடியால் தேசசேவை செய்ய என்ன வழி கிடைக்கும் என்று பார்த்துக் கொண்டே இருந்தார்.

பாரதியாரும் நானும் புதுவையைவிட்டு சென்னைக்கு வந்ததும் சில வருஷங்கள் வரை நான் பிள்ளையவர்களைக் காணவில்லை. பாரதியார் காலம் சென்ற பிறகு ஒரு முறை பிள்ளையைக் கண்டேன். அவர் என் தமையனார் திருமலாசாரியாரை பல முறை கண்டு பேசுவதுண்டு. அவ்வப்போது அவர் யோக க்ஷேமங்களை என் தமையனார் மூலம் சொல்லியனுப்புவார். நான் நேரில் கண்ட போது மகாத்மா காந்தியைப் பற்றிய பேச்சு வந்தது. நம் நாட்களில் வெடி குண்டு முயற்சிகள்தான் ஸ்வராஜ்யம் கொண்டு வரும் என்றிருந்தோம். இப்போது மகாத்மாவின் கொள்கை வேறாக அல்லவோ இருக்கிறது என்றார். அதற்கு நான் பிரகலாதன் நம் நாட்டின் கொடுமைகளை அமைதியோடு வெறுத்தும் சகித்தும் வந்தால் அண்டங் கீறி சிரித்தது செங்கட் சீயம்'' என்பது போல நரசிங்கம் நம்மைக் கேளாமல் தாமாகவே வந்து சென்ற உலகப் போரிலே நடந்தது போல துஷ்டர்கள் ஒருவரையொருவர் வெட்டி மடியும்படிச் செய்து விடுவார் என்றேன். இது பிள்ளைக்கு அவ்வளவு பிடிக்கவில்லை. நேர்முகமாக நாமே முயலாமல் விஷயங்கள் தாமே நேர்படும் என்றிருப்பது தகாது என்றார். பிறகு அவருடைய பழய கதைகளை எல்லாம் பற்றி உல்லாசமாகப் பேசிவிட்டுப் பிரிந்தோம். இதுவே நான் அவரை கடைசி முறையாகக் கண்டது.

இதன் பின் அவர் பத்து பன்னிரண்டு வருஷங்கள் உயிரோடிருந்தாரானாலும், என் குடும்பக் கவலையினாலும், நான் வெளியூர் போய் உத்யோகத்திற்காக வசிக்க வேண்டியிருந்தபடியினாலும் அவரைக் காணக் கொடுத்து வைக்கவில்லை. நான்

விசாகப்பட்டத்திலிருந்து திரும்பிவந்து சென்னை வாசம் செய்ய ஆரம்பித்த சில காலத்திற்கெல்லாம் அவர் ஈசனடி அடைந்தார் எனக் கேள்வியுற்று பெரிதும் வருந்தினேன்.

பாரதியாரும் நானும் வெகுகாலம் பிரிந்திருக்கவில்லை. புதுவையிலிருந்தபோதும் அவர் அங்கிருந்து வந்து திருவல்லிக் கேணியில் வசித்த போதும் ஒரு நாளாவது அவரும் நானும் சந்திக்காமல் இருந்ததே கிடையாது. அப்படிக்கிருந்தும் அவர் முன் பாரதியாக இருக்கவில்லை. முன்பு ஏதாவது ஓரிடத்தில் ஒரு கொடுஞ் செயல் நடந்ததென்றால் அவர் மனம் துடி துடிக்கும். பிஜி தீவில் நம்மவர் படும் துன்பங்களைக் கேட்டு அவர் பாடிய பாட்டில் நெருப்பு கக்குவது போல் இருக்கிறது. பெல்ஜிய நாட்டில் அனியாயமாய் ஜர்மன் சேனை நுழைந்த போது அவர் பாடிய பாட்டும் அவர் மனக்கொதிப்பைக் காட்டுகின்றன. அந்த உலக யுத்தத்தில் கணக்கற்ற ஜனங்கள் மாய்ந்ததைக் கண்டு இனி அதர்மம் தொலைந்து தர்மம் நிலைக்கும் என்று அவர் எண்ணினார். அவ்வெண்ணத்தைப் பொய்ப்பிக்க ரௌலட் ஆக்ட் வந்தது. மேலும் மேலும் அநீதிகள் தலை எடுப்பதைக் கண்டு மனமுடைந்தார். அதனால் அவரிடமிருந்த சில துரப்பியாசங்கள் ஓங்க ஆரம்பித்தன. அவருடைய வலிவற்ற தேகம் அவற்றால் நோய்ப்பட்டது. அவர் திருவல்லிக்கேணியில் 1921ம் ஸெப்டெம்பரில் உயிர் துறந்த போது அவருக்கு வயது நாற்பது கூட இல்லை.

இப்படி இவ்விரு பெரியார்கள் தேச சேவை செய்ய ஆரம்பித்தது முதல் கடைசி காலம் வரை அவர்களோடு கூடியாடும் பாக்கியம் பெற்ற அவர்கள் நண்பர்களும் நானும் சுராஜ்யம் பெறும் தருவாயில் இன்று இருக்கும் இந்தியாவை அவர்கள் காணவில்லையே என்ற மனக்குறைப்பட்டாலும் அவர்கள் விதைத்த விதையின் கனிதானே இது என்று இதை மேலும் மேலும் ஓங்கச் செய்வதே யாம் அவர்களுக்குச் செய்யும் கைம்மாறு.

கையெழுத்துப் படி

மண்டயம் ஸ்ரீனிவாசாசாரியார் 'இந்தியா' இதழைத் தொடங்கி, நடத்திய மண்டயம் குடும்பத்தைச் சேர்ந்தவர். சுதேசிய இயக்கத்துக்கும் இக்குடும்பத்தினர்க்கும் நெருங்கிய தொடர்புண்டு. வ.உ.சி.யின் சுதேசிக் கப்பல் கம்பெனியிலும் இவர்கள் பல பங்குகள் வாங்கியிருந்தனர்.

பாரதி, வ.உ.சி. ஆகியோரைப் பற்றி இவர் எழுதிய இந்நினைவுரை இதுவரை வெளிவராதது. இதன் மூலப்படி யைத் தம் கைவயம் வைத்திருந்த திரு. வ.உ.சி. சுப்பிரமணி யம் அவர்கள், அதனைப் படியெடுத்துக் கொள்ள அனுமதி

நல்கினார். கையெழுத்துப் படி தம் கைக்கு எப்படி வந்தது என அவரால் நினைவுகூர இயலவில்லை. இந்திய விடுதலைக்குச் சிறிது காலத்திற்கு முன்பும், 'வ.உ.சி. சுயசரிதை', 'வி.ஓ.சி. கண்ட பாரதி' ஆகிய நூல்கள் வெளிவந்த பின்பும் *(1946 நவம்பர்)* இந்நினைவுரை எழுதப்பட்டுள்ளதாகத் தெரிகிறது
மண்டயம் ஸ்ரீனிவாசாசாரியார் எழுதிய 'Indian Freedom Movement and Our Family Reminiscences' (திரு. ஸி.எஸ். சுப்பிரமணியம் கைவசம் உள்ள கையெழுத்துப் படி) என்ற நினைவுரையும் இக்கட்டுரைச் செய்திகளை உறுதி செய்கின்றன.

# சான்றுப் பட்டியல்


## இதழ்கள்

*இந்தியா, 1906-1910*
*சுதேசமித்திரன், 1906*
*கர்மயோகி, 1910*
*ஞானபாநு, 1915*
*சிவநேசன், 1928*
*குமரிமலர், 1968*
*Hindu, 1936*

## அரசு ஆவணங்கள்

*C.I.D. Reports,* 1906 - 1908
*Madras Secret Police Abstracts of Intelligence,* 1908
*Madras Native Newspaper Reports,* 1908
சென்னை அரசாங்க நீதித் துறை அரசாணைகள், *1907-1911*

## கையெழுத்துப் படிகள்

வ.உ.சி., 'ஸ்ரீ C. சுப்பிரமணிய பாரதியாரைப் பற்றிய சில குறிப்புகள்'.

மண்டயம் ஸ்ரீனிவாசாசாரியார், 'யான் கண்ட இரு பெரியார்: வ.உ. சிதம்பரம் பிள்ளையும், சி. சுப்பிரமணிய பாரதியாரும்.'

Mandayam Srinivasachari, 'Indian Freedom Movement and Our Family Reminiscences'.

## நூல்கள்

பாரதி, ஜன்ம பூமி, புதுச்சேரி, *1909.*

வ.உ.சி., மெய்யறம், சென்னை, *1914.*

பரலி. சு. நெல்லையப்பர், வ.உ. சிதம்பரம் பிள்ளை சரித்திரம், சென்னை, *1944.*

வ.உ.சி. சுயசரிதை, சென்னை, *1946.*

வ.உ.சி. சுப்பிரமணியம் *(பதிப்பாசிரியர்),* வி.ஓ.சி. கண்ட பாரதி, சென்னை *1946.*

பெ. தூரன் (ப-ர்), பாரதி தமிழ், சென்னை, *1953.*

ரா.அ. பத்மநாபன், சித்திரபாரதி, சென்னை, *1957.*

ரா.அ. பத்மநாபன் (ப-ர்), பாரதியின் கடிதங்கள், சென்னை, *1982.*

ரா.அ. பத்மநாபன் (ப-ர்), பாரதி புதையல் பெருந்திரட்டு, சென்னை , *1982.*

இளசை மணியன் (தொகுப்பாசிரியர்), ஸி.எஸ். சுப்பிரமணியம் (ப-ர்.), பாரதி தரிசனம், இரண்டு தொகுதிகள், சென்னை, *1975-77.*

சீனி. விசுவநாதன் (ப-ர்.), சுதேசியத்தின் வெற்றி, சென்னை, *1985.*

பாரதி பாடல்கள் : ஆய்வுப் பதிப்பு, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், *1987.*

ஆ.இரா. வேங்கடாசலபதி (ப-ர்), வ.உ.சி. கடிதங்கள், சென்னை, *1984.*

ஆ.இரா. வேங்கடாசலபதி, வ.உ.சி.யும் திருநெல்வேலி எழுச்சியும், சென்னை, *1987.*

ஆ.இரா. வேங்கடாசலபதி (மொழிபெயர்ப்பு), ''லோகமானிய திலகர்'' — வ.உ.சி., நாவாவின் ஆராய்ச்சி, *26*, சனவரி, *1989.*

G. Kesavan (ed.), *Bharathi and Imperialism : A Documentation,* Sivagangai, 1987.




## ஆ. இரா. வேங்கடாசலபதியின் பிற நூல்கள்

வ.உ.சி.யும் திருநெல்வேலி எழுச்சியும்
பின்னி ஆலை வேலைநிறுத்தம், 1921
(ஆ. சிவசுப்பிரமணியனுடன் இணைந்து)
திராவிட இயக்கமும் வேளாளரும், 1927-1944

பதிப்பித்தவை

வ.உ.சி. கடிதங்கள்
மறைமலையடிகளார் நாட்குறிப்புகள்
பாரதியின் கருத்துப்படங்கள்

மொழிபெயர்ப்பு

Tranquillity
(பாரதிதாசனின் 'அமைதி' நாடக மொழிபெயர்ப்பு)



## பிற மக்கள் வெளியீடுகள்

| | |
|---|---|
| **க. கைலாசபதி** | |
| ஈழத்து இலக்கிய முன்னோடிகள் | ரூ. 16.00 |
| **ஏ.வி. சுப்பிரமணிய அய்யர்** | |
| தற்காலத் தமிழ் இலக்கியம் | ரூ. 12.00 |
| **ஆ. சிவசுப்பிரமணியன்** | |
| ஆஷ் கொலையும் இந்தியப் புரட்சி இயக்கமும் | ரூ. 16.00 |
| **ஆ. இரா. வேங்கடாசலபதி** | |
| வ.உ.சி.யும் திருநெல்வேலி எழுச்சியும் | ரூ. 10.00 |



பாரதியைப் பற்றி வ.உ.சி. எழுதிய நினைவுக் குறிப்புகளையும், வ.உ.சி.யைப் பற்றிப் பாரதி பல்வேறு சமயங்களில் எழுதிய கட்டுரைகள், கவிதைகள், நூல் மதிப்புரைகள் முதலானவற்றையும் இந்நூல் தொகுத்து வழங்குகின்றது. மேலும், வ.உ.சி. நடத்திய சுதேசிக் கப்பல் கம்பெனி தொடர்பாகப் பாரதியின் 'இந்தியா'வில் வெளியான நான்கு கருத்துப்படங்களும் இடம்பெறுகின்றன.

தமிழ் எழுத்துச் சீர்திருத்தம் பற்றி வ.உ.சி., பாரதிக்கு இடையே நடைபெற்ற முக்கியமான விவாதமும் முதன்முறையாக முழுமையாக நூலாக்கம் பெறுகின்றது.

கிடைத்தற்கரிய கையெழுத்துப் படிகள், பழம் இதழ்கள், காலனிய அரசாங்க ஆவணங்கள் முதலானவற்றை ஆதாரமாகக் கொண்டு இந்நூலைத் தொகுத்துள்ள ஆ. இரா. வேங்கடாசலபதி, தமிழ்ச் சமூக வரலாற்றுக்குக் குறிப்பிடத்தகுந்த பங்காற்றியிருக்கும் இளம் ஆய்வாளர்; புது தில்லி ஜவகர்லால் நேரு பல்கலைக்கழகத்தின் வரலாற்றாய்வு மையத்தில் முனைவர் பட்ட ஆய்வு செய்து முடித்தவர். இவர் எழுதியும் பதிப்பித்தும் உள்ள பிற நூல்கள்: வ.உ.சி. கடிதங்கள்; வ.உ.சி.யும் திருநெல்வேலி எழுச்சியும்; மறைமலையடிகளார் நாட்குறிப்புகள்; பின்னி ஆலை வேலைநிறுத்தம் 1921 (ஆ. சிவசுப்பிரமணியனுடன் இணைந்து); திராவிட இயக்கமும் வேளாளரும் 1927-1944.

பாரதியின் 'இந்தியா'வில் வெளியான கருத்துப்படங்களும் இவரால் தொகுக்கப்பட்டுச் சிறப்பு வெளியீடாகத் தனியே வெளிவருகின்றது.

அட்டை அமைப்பு: வெ. இராஜசேகரன்